# கல்கி

வீட்டிலே ஒரு டாக்டர்!
இலவச இணைப்பு

KALKI 30.3.2003
ரூ.6.00



## மெகா தொடர்களின் வெற்றி ரகசியம்!

## உள்ளே...






**கல்கி**
30.3.2003

# பிள்ளைத்தமிழும் பிளாஸ்டிக்

"இராமகாதையின் பல்வேறு இந்தியப் பிரதிகளைத் தேடித் தேடிப் படித்ததில் தலைமுடி வெளுத்தே விட்டது" என்று சிரித்துக் கொண்டே சொல்லும் டாக்டர் பவுலா ரிச்மேன், ஓர் அமெரிக்கத் திருமதி!

இவருக்கும் இராமாயணத்துக்கும் என்ன தொடர்பு? இருபதாம் நூற்றாண்டின் மத்தியில், தமிழக கலை, இலக்கியத் துறைகளில் புதிய பார்வைகளோடு இராமாயணம் எடுத்தாளப்பட்ட விதம் குறித்து விரிவான ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார் இவர்.

அறுபதுகளில் 'சக்கரவர்த்தித் திருமகன்' என்ற தலைப்பில் இராஜாஜி கல்கியில் தொடராக எழுதிய இராமாயணத்தை கல்கி அலுவலகத்திற்கே வந்து படித்து முடித்த பவுலா, இராஜாஜியின் 'ரீடெல்லிங்' அற்புதமான பல புதிய திசைகளைத் திறந்து விடுகிறது என்று ஆச்சரியப்படுகிறார்! வாலி வதத்தை இராஜாஜி நோக்கும் விதம் முற்றிலும் புதுமையானது என சான்று தரும் இவர், புதுமைப்பித்தன் தொடங்கி அம்பை வரையிலும் அகலிகை பாத்திரத்தை தமிழ் எழுத்தாளர்கள் நோக்கிய விதம் குறித்து அசராமல் ஒரு மணி நேரம் பேசுகிறார்.



• பவுலா ரிச்மேன்



சிகாகோ பல்கலைக்கழகத்தில் ஆசிய மொழிகள் குறித்து

ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்ற இவர், ஓகியோ நகரிலுள்ள ஒபர்லின் கல்லூரியில் தற்சமயம் சமயத் துறைத் தலைவராக பணியாற்றி வருகிறார். இவரது கணவரும் கூட, இந்தியாவின் வரலாறு, சமயம், கலாசாரம் குறித்து கற்றுத் தரும் பேராசிரியர்.

"இந்தியாவைப் பற்றிக் கற்றுத் தர எழுபதுகளில் இந்தியாவுக்கு வந்து சமஸ்கிருதம் படித்தோம். பிறகு இந்தியாவின் தொன்மையான மொழி தமிழ் என்றறிந்து, பாஸ்டன் பல்கலைக்கழகத்தில் தமிழ் மொழியை எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டோம். அதன் பிறகு 1979-81 ஆண்டுகளில், மதுரையில் தங்கி, தமிழாராய்ச்சி செய்தோம். இங்கே எல்லோரும் அடக்கத்தோடும், பணிவோடும் இருக்கிறார்கள். ஆனால் சுற்றுச்சூழல் கண் எதிரில் பாழ்படுவதைக் கண்டும் காணாமல் இருக்கிறார்கள்" என்று வருந்தும் பவுலா, "முதல் முறை மதுரைக்கு வந்த போது மக்களின் கைகளில் துணிப்பைகள் இருந்தன. இப்போது பிளாஸ்டிக் பைகள் இருக்கின்றன. கலையும், இலக்கியமும் காட்டும் தமிழர் வாழ்க்கை முறைக்கும், சுற்றுச் சூழலைக் கைவிட்டு விட்ட இன்றைய தமிழர் வாழ்க்கை முறைக்கும் எத்தனை வேறுபாடுகள்" என்று வருந்துகிறார்.

ஏற்கெனவே, 'மணிமேகலை காப்பியத்தில் கிளைக் கதைகள்', பக்தி இலக்கியத்தில் பிள்ளைத்தமிழ், என பல ஆய்வுகளை முடித்து விட்டு, முத்தாய்ப்பாக தென்னிந்தியாவில் பல்வேறு பாரம்பரிய பாணிகளில் இராமாயணம் சொல்லப்பட்டு வந்த விதம் குறித்தும் ஆராய்ச்சி செய்திருக்கிறார்.

"இந்தியா காலனி ஆதிக்கத்தில் இருப்பதை உள்ளுரையாக வெளிப்படுத்த, பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி, அசோகவனத்தில் கண்ணீர் வடிக்கும் சிதையை இதே பொருள்பட அவர் எடுத்தாண்டிருக்க முடியும். ஏனோ பாரதக் கதைக்கு முதலிடம் கொடுத்து விட்டார்" என்று சொல்லும் இந்த இராமாயணக் காதலிக்கு ஒரு புதிய லட்சியம். "வண்ணப் புகைப்படங்கள் புழக்கத்திற்கு வராத ஐம்பதுகளில், கல்கியின் அட்டைகளில் வண்ண ஓவியங்களாக வெளிவந்து, இன்னும் உயிருள்ள சலனப் படங்கள் போல இருக்கும் அவற்றை டிஜிட்டல் முறையில் படியெடுத்து காட்சிக்கு வைக்க வேண்டும் என்பதுதான்.

# பைகளும்!

- ஸ்ரீசக்கரம்

படங்கள் : ஸ்ரீஹரி


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24

தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# ஏனிந்த யுத்தம்?

## -நிஜக் காரணம்!





‘ஓர் அரக்கனின் பிடியில் ஈராக் மக்கள் தவிக்கிறார்கள். அதிலிருந்து அவர்கள் விடுபட்டுப் புதுவாழ்வு காண வேண்டும். அதற்கு இந்த யுத்தம் உதவும்’ என்றிருக்கிறார் அமெரிக்க ஜனாதிபதி புஷ்.

ஆனால் இது நிஜமல்ல, கதை என்பது அமெரிக்காவின் சமீபத்திய தாக்குதலில் அடிபட்டு, நாளிதழ்களின் புகைப்படங்களில் வெளியான ஈராக் சிறுவனுக்குக் கூடத் தெரியும்.

பெரும்பாலான நாடுகளின் கருத்துக்கெதிராக, அதுவும் ஐ.நா. பாதுகாப்புக் குழுவில் வீட்டோ அதிகாரம் உள்ள ரஷ்யா, பிரான்ஸ் ஆகிய நாடுகளின் கடும் எதிர்ப்பையும் பொருட்படுத்தாது, அமெரிக்கா இந்தப் போரை ஏன் தொடங்க வேண்டும்?

வெளிப்படையாக கூறக்கூடிய காரணம் ஒன்று உண்டு. 1990ல் குவைத்தை ஈராக் ஆக்ரமித்ததைத் தொடர்ந்து ஐ.நா. சபை ஈராக்கின் மீது சில தடைகளை விதித்தது. அவற்றில் முக்கியமானது நூற்றைம்பது கிலோமீட்டர் தூரத்தைத் தாண்டிச் செல்லக்கூடிய எந்தவித ஆயுதத்தையோ ஏவுகணையையோ பாக்தாத் வைத்திருக்கக்கூடாது என்பது. இந்தக் கட்டுப்பாட்டை ஈராக் செயல்படுத்துகிறதா என்பதை மேற்பார்வையிட, ஐ.நா. ஒரு சிறப்பு கண்காணிப்புக் குழுவை நியமித்தது. ஆனால் இந்தக் குழு தனது பணியை முழுவதுமாகச் செய்ய ஈராக் அனுமதிக்கவில்லை.

இதனால் சென்ற அக்டோபர் மாதத்தில் ஐ.நா. ஒரு மசோதாவுக்கு ஒப்புதல் அளித்தது. இதன்படி ஈராக்கில் உள்ள ஆயுதங்களைக்



• ப்ளிக்ஸ்

ஈராக்கின் துணைப் பிரதமர் அண்டை நாட்டுக்குப் பறந்து விட்டார் என்று ஒரு செய்தி. அது தவறு என்று அவரிடமிருந்து மறுப்பு. குவைத் வழியாகத் தரை மார்க்கமாக பிரிட்டனின் படைகள் அமெரிக்காவுக்கு ஆதரவாக முன்னேறத் தொடங்கி யுள்ளன.

போருக்கு மிகப் பெரிய முட்டுக்கட்டையாக இருக்கும் என்று எண்ணிய ஐ.நா. சபை இப்போதைக்குச் செயலற்றதாகப் போய்விட்டது. செயலாளர் கோஃபி அன்னான் ‘அமெரிக்காவின் போர் முடிவு வருத்தத்தைத் தருகிறது’ என்று ரத்தினச் சுருக்கமாகக் கூறிவிட்டு, தன்னாலான வாக்குறுதியாக ‘அமெரிக்காவினால் பாதிப்படையும் ஈராக் பகுதிகளை மீண்டும் நிர்மாணிக்க ஐ.நா சபை உதவும்’ என்றிருக்கிறார்.

போரின் முக்கிய வி.ஐ.பி.க்கள் சந்தேகமின்றி புஷ், சதாம் ஆகியோர்தான். ஆனால் அடுத்த இடத்தைப் பிடிப்பவர் ஹான்ஸ் ப்ளிக்ஸ். இந்தப் பயங்கரமான ‘போர் விளையாட்டின் நடுவர்’ பதவியை வகித்தவர்.

எழுபத்திரண்டு வயதான ஸ்வீடன்காரர் ஹான்ஸ் ப்ளிக்ஸ். அன்டார்டிகாவில் சந்தோஷமாக தன் விடுமுறையைக் குடும்பத்தோடு கழித்துக் கொண்டிருந்தார். ஐ.நா.



கண்காணிப்பதற்காக உருவாக்கிய புதிய குழுவுக்கும், சர்வதேச அணுசக்தி ஏஜென்ஸிக்கும் ஈராக் அனுமதி அளித்து, தன்னிடம் உள்ள பேரழிவு ஆயுதங்கள் குறித்த விவரங்களை இவர்களிடம் தெரிவிக்க வேண்டும்.

இதற்கும் ஈராக் ஒத்துழைக்கவில்லை என்று கூறுகிறது அமெரிக்கா. ஈராக்கிடம் பேரழிவு ஆயுதங்கள் குவிக்கப்பட்டிருப்பது அமெரிக்காவுக்கும் அதன் கூட்டுநாடுகளுக்கும் எந்நேரமும் அச்சுறுத்தல்தான் எனக் கருதும் அமெரிக்கா, இந்த ஆயுதங்களை அழித்தால்தான் தமக்குப் பாதுகாப்பு என்று கூறித் தாக்குதலைத் தொடங்கியிருக்கிறது.



**தொ**டக்கத்தில் ஐ.நா ஆயுதக் கண்காணிப்புக் குழுவுக்குப் போதிய ஒத்துழைப்பை ஈராக் தரவில்லை. ஆனால் அதற்கு ஒரு முக்கிய →

# கடைசி மயிலிறகைப் போட்டவர்!

ஒரு கண்காணிப்புக் குழுவை ஈராக்கிற்கு அனுப்பியது. அதற்குத் தலைமை ஏற்றவர் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ரிச்சர்ட் பட்லர் என்பவர். இராக்கிற்கு எதிரான கருத்துகளைப் பலமுறை வெளியிட்டவர். அமெரிக்காவுக்கு ஆதரவான அறிக்கையைத்தான் அளிப்பார் என்று பலரும் ஹேஷ்யம் கூறினார்கள்.

இந்தமுறை கண்காணிப்புக் குழுத் தலைவராக ரால்ப் எகியஸ் என்பவர் நியமிக்கப்படலாம் என்று சிபாரிசு செய்தன அமெரிக்காவும் பிரிட்டனும். அந்த ஒரே காரணத்தினால் ஐ.நா. பாதுகாப்புக் குழுவின் பிற உறுப்பினர்கள் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ''ஒரு தலைப்பட்சமாக நடந்து கொள்வார்'' என்று சிலரும், ''நியாயமான அறிக்கையை அளித்தாலும் ஒரு தலைப் பட்சமாக அளித்ததாகப் பேச்சு வரும்'' என்று சிலரும் கூறவே, அவசரமாக மாற்று ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. ப்ளிக்ஸுக்கு அதிர்ஷ்டம் (?) அடித் →

சபைச் செயலாளர் கோஃபி அன்னானிடமிருந்து வந்தது அவசரச் செய்தி. ''உடனே வரவும். ஈராக்கிற்குச் செல்லும் ஆயுதக் கண்காணிப்புக் குழுவுக்கு நீங்கள்தான் தலைவர்.'' ப்ளிக்ஸ் மட்டுமல்ல, கிட்டத்தட்ட யாருமே எதிர்பார்த்திராத திருப்பம் இது.

சில வருடங்களுக்கு முன்பும் ஐ.நா இப்படி



காரணம், அந்தக் குழு அமெரிக்காவின் ஒற்றர்குழு போலச் செயல் பட்டு, பாக்தாதின் அரசியல் ரகசியங் களையும் நியூயார்க்கிற்குத் தெரிய வைத்து விடுமோ என்ற அச்சம்தான். தவிர ஈராக் கிடம் உண்மையாகவே பேரழிவு ஆயுதங் கள் இருந்தன. அதை மறைப்பதற்கு எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டன. ஈராக்கே சமீபத்தில் இதை ஒப்புக் கொண்டிருப் பதுடன், அவற்றை அழிக்கவும் சம்மதித் தது.

அமெரிக்காவின் கோபத்திற்கு மற் றொரு முக்கியப் பின்னணியும் உண்டு. அது பெட்ரோல்! (பெட்ரோல் என்றால் பெட் ரோலியப் பொருள்களையும் சேர்த்து தான்)

இன்றைய தேதியில் உலகிலேயே மிக அதிகமான பெட்ரோல் வளம் நிரம்பிய நாடு சவுதி அரேபியா. அடுத்த இடம் ஈராக்கிற்குதான். சர்வதேச பெட்ரோலின் மதிப்பு டாலரோடுதான் இணைக்கப் பட்டிருக்கிறது. அதாவது டாலரின் மதிப்பு உயர்ந்தால் பெட்ரோலின் மதிப் பும் உயரும். அது வீழ்ந்தால் இதுவும் விழும். இது அமெரிக்காவுக்குச் சாதக மான சூழல். ஆனால் ஈராக் தனது பெட் ரோலின் மதிப்புக்கு யூரோ நாண யத்தை அளவீடாகக் கொள்ள சம் மதித்து விட்டது. ஈரானும் இதே போன்ற செயல் திட்டத்திற்கு முயற்சி செய்து வருகிறது. இந்தப் போக்கு தொடர்ந்தால் மற்றொரு பெட்ரோல் வளமிக்க நாடான நார்வே, தானும் அதே பாதைக்கு மாறும். இது பிற நாடுகளுக் கும் படர்ந்தால், டாலரின் மதிப்பு உலக அரங்கில் இறங்க வாய்ப்பு உண்டு. எனவேதான் இந்தப் பிரச்னையை முளையிலேயே கிள்ளி எரியும்வித மாக ஈராக்கை நசுக்கத் துடிக்கிறது அமெரிக்கா.

ஈராக்கை வெல்வது அமெரிக்காவுக்கு ஒரு பெரிய விஷயமல்ல. 'ஈராக்கின் ராணுவ கேந்திரங்களை மட்டுமே செய லிழக்கச் செய்வோம். அங்குள்ள பொது மக்களுக்குப் பாதிப்பு இருக்காது' என் றிருக்கிறது அமெரிக்கா. அது எந்த அளவு செயல்படப் போகிறது என்பது இன்னும் சில நாட்களிலேயே தெரிந்து விடும்.

**- ஜி.எஸ்.எஸ்.**

---

தது.

ஏற்கெனவே பல தலைமைப் பதவிகளை வகித்தவர்தான் ப்ளிக்ஸ். 1981லிருந்து 1997வரை சர்வதேச அணுசக்தி ஏஜென்ஸியின் இயக்குனராகப் பணிபுரிந்தார். அப்போது ஒரு முறை ஈராக்கிற்குச் செல்ல நேர்ந்தது. பின்னொரு நாளில் ''அப்போது சதாம் உசேன் திறமையாக தமது அணு ஆயுத திட்டத்தை எங்களிடமிருந்து மறைத்து விட்டார்'' என்று பகிரங் கமாகக் கூறினார். இருந்தாலும் ஈராக்கில் உள்ள பிரச்னை களின் தனித்தன்மை குறித்த இவரது பேச்சும், அந்த நாட்டின் பொதுமக்கள் மீது இவர் காட்டும் பகிரங்க அனுதாப மும், அமெரிக்கத் தலைமையை முகம் சுளிக்க வைத்துள்ளது.

ஈராக்கிற்குக் கிளம்பும்முன் வாஷிங்டனுக்கும் மாஸ் கோவுக்கும் சென்று பெருந்தலைகளுடன் பேச்சுவார்த்தை நடத் தினார் ப்ளிக்ஸ். சமீபத்திய ஈராக் ஆயுதக் கண்காணிப்பு விஜயத்திற்குப் பிறகு 'பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்' என்பது போல் தொடக்கத்தில் அறிக்கைகள் விட்டார். பின் ஈராக் எந்தப் பேரழிவு ஆயுதங்களையும் தங் களிடமிருந்து மறைக்க முயற்சிக் கவில்லை என்றார். அறிக்கை தங்களுக்காதர வானது என்று கூறியது ஈராக். ஆனால் சில நாட்களுக்கு முன் ஐ.நா. சபையில் அவர் 'தான் வைத்துக் கொண்டிருக்கும் பேரழிவு ஆயுதங்களை அழிக்க, ஈராக் எந்த முயற்சியும் எடுப்பதாகத் தெரியவில்லை' என்றார். அதையே 'கடைசி மயிலிறகு' என்று தனக்குச் சாதக மாக எடுத்துக் கொண்டது அமெரிக்கா. குண்டு வீச்சு தொடங்கி விட்டது.

உ

ஸ்ரீ ராம ஜெயம்

உண்மை! உழைப்பு!! உயர்வு!!!

# தமிழ்நாடு பிராமணர் சங்கம்

*(இராமநாதபுரம் மாவட்ட டிரஸ்ட்)*

## இராமநாதபுரம் மாவட்டம்

அன்புடையீர்,

நமஸ்காரம், புண்ணியதலங்கள் இராமேஸ்வரம், நவகிரஹத்தலம் தேவிப்பட்டிணம் தர்ப்பசயணம் திருப்புல்லாணி பகுதியில் பராமரிப்பு நன்கொடைகள் மட்டும் பெற்றுக் கொண்டு யாத்திரையினர் தங்கிட அறைகள் அமைத்திடவும், புண்ணியதலங்களுக்கு அருகில் உள்ள இராமநாதபுரத்தில் அனைத்து சமுதாயத்துக்கும் பயன்தரும் முறையில் குறைவான நன்கொடையில், நிறைவான வசதியுடன் சமுதாயத் திருமண மண்டபம் கட்டிடவும் ஏற்பாடுகள் செய்து வருகின்றோம்.

தர்மசிந்தனையும், நல் உள்ளமும் கொண்ட பெரியோர்கள் பெரும் அளவில் நன்கொடைகளை D.D.யாகவோ, பணமாகவோ தாம்ப்ராஸ் **(RMD Dist)** டிரஸ்ட் என்ற பெயருக்கு 15.4.03க்குள் அனுப்பி வைத்திட நமஸ்கரித்து வேண்டுகிறோம்.

நன்கொடை வரவில் 10% வைப்பு நிதியாக வைத்து சமுதாயத்தில் நலிவு அடைந்த குடும்பத்தில் உள்ளவர்களுக்கு கல்வி உதவித் தொகை, முதியோர் நலம், திருமண உதவிகள், நோய் பராமரிப்பு முகாம் மற்றும் தேவையான உதவிகளை உங்கள் ஆதரவுடன் செயலாக்கிட உள்ளோம்.

*"சமூக சேவையிலும், ஆண்டவன் அருள் பெறலாம்"*

\- விவேகானந்தர்

நன்றியுடன்

M.S. பாலகிருஷ்ணன், மாவட்டத் தலைவர்
S. இராமச்சந்திரன், பொதுச் செயலாளர்

கிளைத் தலைவர்கள்
மற்றும் நிர்வாகிகள்

*நன்கொடைகளை அனுப்ப வேண்டிய முகவரி :*
**S. முத்து சீனிவாசன்,** மாவட்ட பொருளாளர்
31, வடக்குரத வீதி, இராமநாதபுரம் - 623 501
போன் : 223583

**வாசக அன்பர்கள் குடும்பம் ஒவ்வொன்றும் குறைந்த அளவு நன்கொடையாக ரூபாய் 101/- அனுப்பித் தர பிரார்த்திக்கின்றோம்.**

மழைநீர் சேமிப்பீர்! மத ஒற்றுமை காண்போம்!! எரிபொருள் சிக்கனம்! தேவை இக்கணம்!!



# பழசுக்கு ஆதரவு!



சத்ரபதி சிவாஜி சென்னை காளிகாம்பாள் கோவிலுக்கு வந்து வழிபட்ட செய்தி அனைவருக்கும் தெரியும். ஆனால், அவர் பொன்னேரி அருகில் உள்ள காட்டாவூர் என்ற குக்கிராமத்தில் உள்ள சிவன் கோவிலில் வழிபட்டு விட்டுத்தான், காளிகாம்பாளைத் தரிசிக்க வந்தார்.

''பழம்பெரும் கோவிலான காட்டாவூர் கோவில் இன்று எந்த நிலையில் இருக்கிறது என்பதைக் கேட்டால் ரத்தக் கண்ணீர் வடிப்பீர்கள்! மதிற் சுவர்கள் சிதலமடைந்து, பிரம்மாண்டமான தூண்கள் இடிந்து விழுந்து, தினப்படி பூஜைக்கு வசதியில்லாமல், அவ்வளவு ஏன், சுயம்புவான சிவனுக்குக் கட்டுவதற்கு நல்ல வஸ்திரம் கூட இல்லாமல் இருக்கிறது!'' என்று மனம் வருந்திச் சொல்லுகிறார் ராஜ்மோகன். கடந்த ஒரு வருட காலமாக 'பழந் திருக்கோவில்கள் திருப்பணிச் சங்கம்' என்ற அமைப்பை உருவாக்கி நடத்திக் கொண்டிருக்கிறார் இந்த முப்பது வயது இளைஞர்!

பழைமை வாய்ந்த கோவில்களைப் பற்றித் தகவல்களைத் திரட்டி, அங்கே தமது சங்க உறுப்பினர்களுடன் ஒவ்வொரு மாதமும் மூன்றாவது ஞாயிற்றுக் கிழமைகளில் விஜயம் செய்கிறார். அன்றைய தினம் அபிஷேக, ஆராதனைகள் செய்வதற்கான ஏற்பாடுகளை முன் கூட்டியே செய்து விடுகிறார். பழங் கோயில்களின் முக்கியத்துவம், அந்தக் குறிப்பிட்ட கோவிலின் பெருமைகள் குறித்துப் பேசுவது, கூட்டாக தேவாரம், திருவாசகம் ஓதுவது போன்ற பணிகளில் இச்சங்கத்தினர் ஈடுபடுகிறார்கள். இப்படி இவர்கள் செய்வது, உள்ளூர் மக்களுக்கு, தமது ஊர் கோவிலின் சிறப்பை எடுத்துச் சொல்வது போல ஆகிறது.

"கோயில்களுக்கு வர்த்தகப் பயன்பாட்டு ரேட்டில் மின் கட்டணம் வசூலிக்கப்படுகிறது என்றால் நம்புவீர்களா? பல கோயில்கள் இருளிலேயே இயன்ற அளவில் ஒரு சில கோயில்களுக்கு நாங்கள் மின் கட்டணம் செலுத்துகிறோம்.

சில கோவில்களில் இறைவனுக்குச் சார்த்தப்பட்ட நைந்துபோன வஸ்திரங்களைப் பார்த்து வேதனையடைந்தோம். அதனைத் தொடர்ந்து, ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து, அவல நிலைமையை விளக்கிச் சொன்னபோது, பலர் வஸ்திரங்கள் வாங்கித் தர முன் வந்தனர்.

''நம் கோவில்கள் வெறும் இறை வழிபாட்டுத் தலங்கள் இல்லை. கலைக் கூடங்கள். எத்தனைக்கெத்தனை பக்தர்களின் வருகை அதிகரிக்கிறதோ, அத்தனைக்கத்தனை அந்த ஊர் பொருளாதார ரீதியிலும் வளர்ச்சி பெறும். இதற்குத் திருப்பதி, திருவண்ணாமலை, மயிலாப்பூர் என்று பல உதாரணங்களைக் காட்டலாம்'' என்கிறார் ராஜ்மோகன்!

– எஸ். சந்திரமௌலி

# எல்லாம் விதி!

'இப்போதைய உலகக் கோப்பையில் ஆடாத, அதேசமயம் கிரிக்கெட் ஆர்வலர்கள் பலராலும் மிகவும் உச்சரிக்கப்படும் பெயர் யாருடையது?' டாக்வார்ட் லூயி தான். எல்லாம் 'விதி'! பாதி ஆட்டத்தில் மழை வந்தால் எப்படி வெற்றியைக் கணக்கிடலாம் என்பதற்கு இவர் இயற்றிய சட்டம்தான் அடிப்படை. பாஸ்கியின் பூவா தலையா?வில் பல அதிரடிக் கருத்துக்கள். அவற்றில் 'ஷேவாக் முதலில் அவுட்டானால் தான் இந்திய அணி ஜெயிக்கும்' என்ற சென்டிமெண்ட்டும் ஒன்று.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலேயிருந்து ஒளிபரப்பாகி வரும் 'பெப்ஸி உங்கள் சாய்ஸ்'ல் உமாவைத் தொலைபேசியில் அணுகிய ஒரு மும்பை பெண்மணி 'அன்பே சிவம்' படத்தில் கமல் ஸோலாவாகப் பாடிய பாடலை ஒளிபரப்பச் சொன்னார். அவர் குறிப்பிட்டது 'யார் யார் சிவம்?' பாடலாக இருக்க வேண்டும். ஆனால் ஒளிபரப்பானது அதே படத்தில் இடம் பெறும் 'ஏ மச்சி மச்சி, தலைசுத்தி சுத்தி, உன் புத்தி கெட்டுப் போயாச்சு' பாடல். 'இந்தப் பாடலை என் குடும்பத்தினருக்கும், இந்திய கிரிக்கெட் அணிக்கும் சமர்ப்பிக்கிறேன்' என்று வேறு அந்தப் பெண்மணி தொடக்கத்தில் கூறியிருந்தது குறிப்பிடத்தக்கது!

'இந்தியத் தொலைக்காட்சி வரலாற்றிலேயே முதன்முதலாக..' என்று தொடங்கினாலே ஏதாவது கொட்டாவி விட வைக்கக்கூடிய, தியேட்டரை விட்டு வேகமாக ஓடி ஒளிந்த திரைப்படம் ஒன்றிற்கான அறிவிப்பாகத்தான் பெரும்பாலும் இருக்கும்.

ஆனால் இப்படி ஒரு முன்னுரையோடு ஒளிபரப்பானது ஒரு சமையல் நிகழ்ச்சி! 'ஸ்டார் சமையல்' 300வது வாரத்தில் அடியெடுத்து வைத்திருக்கும் சாதனையைக் கொண்டாட இந்த வாரம் நடிகை 'சொல்ல மறந்த' ரதியைத் தேர்ந்தெடுத்தது. திதிப்பு போண்டா மற்றும் ராகி அடை ஆகியவற்றைச் செய்து காண்பித்தார். சுவை எப்படியோ தெரியாது, பார்வைக்கு அழகாக இருந்தன. 'இந்தக் காலத்துப் பெண்கள் - அதுவும் நடிகைகள் - சமைப்பதிலும் ஈடுபாடு காட்டுவார்கள் என்பதே ஒரு சாதனைச் செய்திதான்' என்று பல வீடுகளில் டீனேஜ் பெண்களின் அம்மாக்கள் முணுமுணுத்திருக்கக் கூடும்.

வணக்கம் தமிழகத்தில் கோபி கோபாலன் என்ற சர்வதேசத் தொழில் ஆலோசகர் பேட்டி. மாசேதுங் குறித்த தன் வியப்பை வெளிப்படுத்தினார்.

"கண்ணாடி அணிந்தவர்களையெல்லாம் அலட்சியப்படுத்தினார். காரணம், அவர்கள் படித்தவர்களாக இருப்பார்கள் என்ற நம்பிக்கை. கணவனையும் மனைவியையும் நாட்டின் இருவேறு பகுதிகளில் பிரித்து வேலை செய்ய வைத்தார். இப்படிச் சேர்ந்து வாழ முடியாமல் தவித்த குடும்பங்களுக்குக் குறைவேயில்லை. பேராசிரியர்களையெல்லாம் வயலில் உழைக்கச் செய்தார். இவ்வளவையும் மீறி அவருக்கு நல்ல பெயர்' என்றார்.

**- சேனல்பாய்**



# புத்தாண்டு மலர்கிறது...
# பொற்காலம் பிறக்கிறது!



## சுபானு

வளமான புத்தியுகம் காண வருக!

**தமிழ்ப் புத்தாண்டு சீட்டுத் திருவிழா**
**1-14, ஏப்ரல் 03**

**சுபானு:** அறுபது தமிழ் வருடங்களின் வரிசையில் 16-ஆவதாக வரும் ஆண்டு. இப்புத்தாண்டில், வருங்காலம் வாழ்வின் பொற்காலமாக விளங்க, பெரியவர்கள் சிறியவர்களுக்கும், குழந்தைகளுக்கும், பணம் தந்து வாழ்த்துவது வழக்கம்.



**ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்கள்:** இந்திய மக்களின் அனுபவ அறிவில் உதயமானவை. காலத்தை வென்ற, உலகின் தலைசிறந்த சேமிப்பு முதலீட்டு முறை. மூவாயிரம் ஆண்டுகள் ஆகியும் இளமையாகவும், புதுமையாகவும் திகழ்பவை. உங்களது நிதித் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தேவையான கூறுகள் அனைத்தும் கொண்டவை.

**உற்சாகம் ஊட்டும் உயர் வருவாய்:** இந்தியாவில் சேமிப்புகளின் மீதான வருவாய் வீழ்ந்து கொண்டே போகின்றது. ஆனால், சீட்டு சேமிப்புத் திட்டங்களில் தள்ளுபடி ஏலத்திற்கான உச்சவரம்பு 40%ஆக உயர்த்தப் பட்டது முதல், சந்தாதாரர்களின் கசறுத்தொகை (Dividend) உற்சாகம் தரும் வகையில் உயர்ந்து வருகிறது. ஏலத்தின் போது தேவையற்ற போட்டிகள் தவிர்க்கப்பட்டு, அவசரத் தேவைக்கு எளிதாகக் தொகை கிடைக்கும் வாய்ப்பு அதிகரித்துள்ளது.




**ஸ்ரீராம் சிட்ஸ் சிறப்புக்கள்**

• சீட்டு நிதிச் சேவையில் இந்தியாவின் இமயம் • பல லட்சம் குடும்பங்களின் வளமைக்கு வழிகாட்டி • ரூ.9,000 கோடிக்கு மேல் சீட்டுத் தொகை பட்டுவாடா • பலருக்கு நேரடி, மறைமுக வேலை வாய்ப்பு • தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகா, மகாராஷ்டிரா ஆகிய மாநிலங்களில் 465 கிளைகள்.

# 'அன்பு' – மேட்ச் ஹைலைட்ஸ்



| | | |
|---|---|---|
| மேட்ச் சம்மரி | : | பாலா - தீபு காதல் ஜோடி சூட்சுமமாகப் பிரிக்கப்பட்டு தீபு - ஆதித்யா திருமணம் நடந்து விடுகிறது. காதல் ஜோடி அதையும் மீறி ஒன்று சேரத் துடிக்கிறார்கள், முயற்சிக்கிறார்கள். ஆனால் ஆதித்யாவின் மனம் - குணம் மேற்படி முயற்சியைக் கைவிடும்படி செய்துவிடுகிறது. |
| மேன் ஆஃப் தி மேட்ச் | : | வடிவேலு |
| பெஸ்ட் ஷாட் | : | எஸ்.டி.டி பூத் ஓனரை உள்ளே போக விடாமல் வடிவேலு அவர் பிராணனை வாங்கும் காட்சி |

## இதர வீரர்களின் பவுண்டரி விவரம் :

| நபர் | பவுண்டரி ஏரியா | எண் |
|---|---|---|
| ஹீரோ பாலா | ஸின்ஸியர் முயற்சி | 1 |
| 'இசை' வித்யாசாகர் | 'அவன் யாரவள்' | 1 |
| | 'தவமின்றி கிடைத்த வரமே' | 1 |
| கதை ஆசிரியர் | ஃபார்முலா சாஸ்திரத்தை - மீறிய முடிவு | 1 |
| டைரக்டர் தளபதிராஜ் | இரண்டாம் பாதியை சுவாரஸ்யமாக்குதல் | 1 |

## களத்தில் சரியாக இறக்கப்படாமல் வேஸ்ட் ஆன வீரர்கள் :

1. சரத்பாபு
2. விஜயகுமார்
3. ரேகா

**டீமின் ஓவரால் பெர்பாமென்ஸ் : ஆவரெஜ்**

## வீரர்கள் அவுட்டாகியிருக்கும் விதம் :

| | | |
|---|---|---|
| 1. பாலா | : | காதலிக்குத் திருமணமாகிவிட்டது என்றவுடன் பஞ்சு மிட்டாய்க்கு அழும் குழந்தை கணக்காய் கையையும் காலையும் உதைத்துக் கொண்டு அழும் காட்சியில், தன் அமெச்சூரான நடிப்பால்! |
| 2. நடன இயக்குனர் | : | மெலடி பாட்டுகளுக்குப் பொருத்தமே இல்லாத அசைவுகளால்! |
| 3. டைரக்டர் | : | 'சவ சவ' என்று கதையை நகர்த்தி, முதல் பாதியில் நம் பொறுமையைச் சோதித்ததால்! (இயேட்டரில் ஒரே கல்யாணக் களை; ஆளாளுக்குக் கல்யாணத்தைக் கவனிக்காமல் பேசிக் கொண்டிருக்கிறார்கள்!) |

தொகுப்பாளர் :
**கிருஷ்ணா சிதம்பரம்**




# அமெரிக்காவின் மூர்க்கத் தாக்குதல்!

சதாம் ஹுசைன் ஒரு சர்வாதிகாரி என்பதில் சந்தேகமில்லை. ஈராக்கில் அணு ஆயுதங்களும் ரசாயன - உயிரியல் ஆயுதங்களும் சர்வதேசத் தடைகளை மீறி உற்பத்தி செய்யப்பட்டன என்பதும் உறுதியாகிவிட்டது.

ஆனால், இதைக் காரணம் காட்டி அமெரிக்காவின் புஷ் அரசாங்கம் ஈராக் மீது தாக்குதல் தொடுத்திருப்பது சிறிதும் நியாயமில்லை. சதாம் ஹுசைன் ஈராக்கிலிருந்து வெளியேற வேண்டும் என்று கெடு விதிப்பதற்கு ஈராக் மக்களன்றி வேறு யாருக்கும் உரிமை கிடையாது. யுத்தம் அறிவித்து, உலகப் பொருளாதாரத்தையே பெரும் சோதனைக்கும் வதைப்புக்கும் உள்ளாக்கியிருக்கும் புஷ், அமெரிக்காவிலிருந்து உடனடியாக வெளியேற வேண்டும் என்று நாம் கெடு விதித்தால் எவ்வளவு நகைப்புக்கிடமாகக் கருதப்படும்!

அளவில் பெரிய நாடு, பொருளாதார பலம் நிரம்பிய நாடு என்பதாலேயே, உலக நடப்புகளைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள முயலும் அமெரிக்க அணுகுமுறை புதிதல்ல.



கல்கி



2003 மார்ச் 30
சித்ரபானு பங்குனி 16
மலர் : 61
இதழ் : 35




எனினும், யுத்தம் என்பது இன்று இரு நாடுகளுக்கிடையேயான விஷயமில்லை; உலகளாவிய விளைவுகள் ஏற்படும் என்று தெரிந்தும் குறுகிய நோக்கில் புஷ் முடிவெடுத்திருப்பதை மன்னிக்க முடியாது.

இந்த யுத்தம் காரணமாக, ஏற்கெனவே நஷ்டத்தில் இயங்கி வரும் ஏர் இந்தியா நிறுவனத்தின் வருடாந்தர நஷ்டம் நூறு கோடி ரூபாய் அதிகரிக்கும்!

யுத்தத்தோடு நேரடித் தொடர்பில்லாத ஒரு நாட்டின் ஒரு நிறுவனத்துக்கே இந்தக் கதி என்றால், ஈராக் யுத்தத்தால் விளையப் போகும் உலகளாவிய நஷ்டத்தைக் கணக்கு போட்டுப் பார்க்கவே முடியாது!

ஈராக் மக்களின் துயரமோ, சொல்லி விளக்க முடியாததாக இருக்கும். 'உங்களை அமெரிக்கா தாக்காது; உங்கள் சர்வாதிகாரத் தலைவர் சதாம் ஹுசைன்தான் எங்கள் இலக்கு' என்று புஷ் சமாதானம் சொன்னாலும், நடைமுறையில் பல்லாயிரக் கணக்கான அப்பாவி மக்கள் கொல்லப்படும் வாய்ப்புகளே அதிகம். "இனி உங்கள் நாட்டில் சித்திரவதை சிறைச்சாலைகளும், பலாத்கார அறைகளும் இராது; ஜனநாயகம் மலரும்" என்று புஷ் ஈராக் மக்களைச் சமாதானப்படுத்த முயற்சி செய்வது அமெரிக்காவின் சட்டாம்பிள்ளைப் போக்கையே உணர்த்துகிறது.

ஐ.நா.சபை என்பதாக ஒன்றை நிறுவியதோடு அதன் பாதுகாப்புக் கவுன்ஸில் உறுப்பினராகவும் விளங்கும் அமெரிக்கா, கவுன்ஸிலின் இதர உறுப்பினர்கள் எழுப்பிய ஆட்சேபணைகளைப் புறக்கணித்துவிட்டு புல்டோஜர் முடிவில் முன்னேறுவது




உலகையே அதிர்ச்சியிலும் அருவருப்பிலும் ஆழ்த்தியிருக்கிறது.

'பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்தவே இந்த யுத்தம் தொடங்கப் படுகிறது' என புஷ் அளித்த விளக்கத்தை, ஐ.நா. செக்யூரிட்டி கவுன்ஸிலின் இதர உறுப்பினர்கள் ஏற்க மறுத்துள்ளார்கள். 'பயங்கரவாதம் மேலும் பெருகுவதற்கே இந்த யுத்தம் வழி வகுக்கும்' என்று அவ்வுறுப்பினர்கள் (ஃபிரான்ஸ், ரஷ்யா, ஜெர்மனி) எச்சரித்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்தத் தொலை நோக்கு புஷ் அரசாங்கத்துக்கு இல்லாமல் போனதற்காக அமெரிக்க ஸெனட் உறுப்பினர்களே வருத்தம் தெரிவித்திருக்கிறார்கள். 'நமது ஜனாதிபதி, அயலுறவு விஷயத்தில் படுதோல்வி கண்டிருப்பது மிக வருத்தத்துக்குரியது' என்று செனட் ஜனநாயகக் கட்சி உறுப்பினர் டாம் டாஷில் பேசியிருக்கிறார்.

ஈராக் மீதான தாக்குதல், உலகளாவிய இஸ்லாமிய உணர்வுகளைப் புண்படுத்தி, பயங்கரவாதம் மேலும் பெருகவே வழிவகுக்கும்.

உலகப் பொருளாதாரத்தை நலிவுறச் செய்து, வளர்ந்து வரும் நாடுகளைக் கொடுந்துயரில் ஆழ்த்தும் அமெரிக்காவுக்கு, இந்த யுத்தத்தால் ஆகக் கூடிய செலவு, பிற நாடுகள் அடையப் போகிற நஷ்டத்தைப் பார்க்க, ஒன்றுமில்லை! அந்நாடுகள் மீண்டும் நிமிர்வதற்கு அமெரிக்காவிடமே கப்பரை ஏந்த வேண்டி வரும்! ஆணவத்தில் எடுக்கப்பட்டுள்ள புஷ்ஷின் முடிவு, 'might is right' என்கிற தவறான சித்தாந்தத்தின் உதாரணமாக் உலக வரலாற்றில் இடம்பெறும். ○

# வட்டமேஜை

✉ 'பரீட்சை நேரப் பிரார்த்தனை!' இலவச இணைப்பு அட்டகாசம். தேர்வு நடக்கும் இந்த சமயத்தில் மிகப் பொருத்தமான இணைப்பு. பயனுள்ளதாகவும் இருந்தது.

மொரட்டுப்பாளையம்,
இரா.வி.சௌந்தர்யா

✉ உ.பி. முதல்வர் மாயாவதி ஊர்ப் பணத்தில் சொகுசாய் வாழ்ந்த ஆசையில், இப்போது தொகுதிப் பணத்திலும் 'பகுதி' வேண்டாம் என எப்படி எண்ணுவார்? கட்சி நிதிக்குப் பணம் கேட்டதைக் குறை சொல்ல முடியாது என்றாலும், உறுப்பினர்கள் வெறும் கமிஷன் பணத்தைச் சுட்டிக் காட்டிப் பேசியது அவரது அந்தரங்கத்தை அம்பலப்




படுத்தி விட்டது. காக்கை உட்காரப் பழம் விழுந்த கதையல்ல இது. கை சுத்தம், நாணயம் எதையும் எதிர் பார்க்க முடியாத இந்த நேரத்தில், தொகுதி நிதி ஒதுக்கீட்டை ரத்து செய்யலாம் எனக் கூறிய தலையங்கம் சரியே.

தஞ்சாவூர் - 12, ஜி. ராமதாஸ்

✉ ஆயிரக் கணக்கான ரயில் பயணிகளைப் பாதுகாப்பாக அழைத்துச் செல்லும் டிரைவர்களுக்கு ஜிலு ஜிலு என்ஜின் தேவைதான். விபத்து ஏன் அடிக்கடி நடக்கிறது என்பதையும் ரயில்வே நிர்வாகம் யோசிக்க வேண்டும்.

திருவாரூர், எஸ். பாலச்சந்தர்

✉ அடிக்கடி அதிகாரிகள் பந்தாடப்படுவதை 'நச்'சென நக்கல் அடித்திருந்த கார்ட்டூன் அசத்தல்!

ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி

✉ ரோட்டில் அடிபட்டுக்கிடக்கும் ஒரு மனிதனையே பார்த்தும் பாராதது போல் பறந்திடும் மனிதர்கள் வாழும் இந்த நாட்டில், வௌவால் மீது அளவு கடந்த அக்கறை காட்டிய சுபாஷிணிக்குப் பாராட்டுக்கள்!

சென்னை - 30, புளியரை கணேசன்

✉ பதவிக் காலத்தில், ரத, கஜ, துரக, பதாதிகள் புடை சூழ பந்தாவாக வாழ்க்கையை அனுபவித்து விட்டு, பதவி போன பின், பல் பிடுங்கப்பட்ட பாம்பாக பரிதவிக்கும் மாஜிகளின் உள்ளத் தவிப்பை அருமையாக உணர்த்தியிருந்தார் ஆண்டாள் பிரியதர்சினி. (ஒரு பெருமூச்சின் நீளம்).

ஆதமங்கலம் புதூர், கே. சண்முகம்

✉ சென்னையைச் சேர்ந்த அரசு பேருந்து நடத்துனர் ஓ. சுந்தரத்தின் பேட்டியைப் படித்தேன். ஓ. சுந்தரத்தின் வாழ்க்கை வரலாறு தன்னம்பிக்கையின் அடையாளம், விடா முயற்சியின் வெளிப்பாடு, மனித நேயத்தின் சின்னம்.

லால்குடி - 1, இராஜேந்திரன்

✉ காலி மனை கவிதை நெஞ்சைத் தொட்டு யோசிக்க வைத்து, சிலிர்க்க வைத்து, சிந்திக்க வைத்தது.

வேலூர், லக்ஷ்மி ஷங்கர்



## மனிதநேயத்தின் சின்னம்!

✉ இப்படியொரு அட்டைப் படத்தைக் கொடுத்து, எங்களது இமைகளை இயங்காமல் செய்ய எவ்வளவு நாளாக கங்கணம் கட்டிக் கொண்டிருந்தீர்கள்?

அருகந்தம்பூண்டி, வடமாலவன்

# சுற்றல்

அடுப்பெரித்துச் சோறாக்க
சுக்குத் தண்ணி வைக்க
எதற்கும் நேரமில்லை
அம்மாவுக்கு.

பத்து பண்டலாவது
ராவுக்குள்
சுற்றிவிட
பரபரக்கின்றன
அவளின் கைகள்.

ஊடே
"எம்.ஏ வரை படிச்சுட்டு
ஊரைச் சுத்துனா
ஈர மண்ணையா திங்க?"
அவ்வப்போது
எரிந்து விழுகிறாள்
பசியோடு வரும் என் மீது.

இறங்கியும் இறங்காமலும்
உடல் அரித்துச்
செல்கிறது பழைய சோறு.

இருந்தும்
சுற்றுவது வாழ்க்கையாகி விட்டது
அம்மாவுக்குப் பீடியும்
எனக்கு ஊரும்.





ஏக்நாத்

# அன்பும் அரவணைப்புமே உதவும்!

**‘அடி உதவுமா?’ என்ற தலைப்பில், வாசகர் கருத்தை வரவேற்று 2.3.2003 இதழில் ஒரு சிந்தனையை விதைத்திருந்தோம். எண்ணற்ற வாசகர்கள் தங்களது கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றிலிருந்து...**

**கிருஷ்ண. ராஜகோபால், சென்னை - 92.**

‘பீலிபெய் சாகாடும்..’ குறளில் வள்ளுவர் கூறியது நினைவுக்கு வருகிறது. குழந்தைகள் – பள்ளிச் சிறார்கள் மயிலிறகுக்குச் சமம். அவர்களது சக்திக்கு மீறி பலவற்றை நாம் திணிக்கிறோம். அதன் மூலம் அவர்களது பொறுமையைச் சோதிக்கிறோம். நம் எதிர்பார்ப்பு பூர்த்தியாகவில்லை என்பதற்காகப் பள்ளிக் குழந்தைகளை அடித்துத் திருத்த முயல்வது இழிவான செயல்.

**மு. தனகோபால், திருவாரூர்.**

‘அடியாத மாடு படியாது’ என்பது அந்தக் காலம். இன்றைய தேவை – வன்முறையற்ற சமுதாயம். அடித்தல் மூலம் பழிவாங்கும் உணர்ச்சிதான் பரவும். வகுப்பின் தேர்ச்சி சதவிகிதத்தை மட்டும் மனத்தில் கொண்டு இயங்கும்போது அடி உதை வன்முறை என்ற குறுக்கு வழிகளை நாடுகின்றனர் ஆசிரியர்கள்.

**ஆர்.பி.சாரதி, குரோம்பேட்டை.**

‘திருத்துவது எப்படியும் கொடுமையானதல்ல’ என்றார் சாமுவேல் ஜான்சன். எந்த ஆசிரியரும் மாணவரைத் தண்டிப்பது மாணவரை நல்வழிப்படுத்தவே அன்றி, தனது மகிழ்ச்சிக்காக அல்ல! பள்ளிகளில் தண்டனைப் பதிவேடு என்றே ஒன்று பராமரிக்கப்பட்டு, அலுவலர் பார்வையிடுவதும் உண்டு. மாணவர் உளவியலைக் கற்ற ஆசிரியர்கள், தண்டனையைக் கடைசி பட்சமாகக் கொள்ள வேண்டும். ஷேக்ஸ்பியர் சொல்வதுபோல் ‘தண்டனை கனிவால் கண்காணிக்கப்படவேண்டும்’ Spare the rod and spoil the child- என்பது தவறு; spare care and spoil the child-என்பது சரி!

**வி. கிருஷ்ணன், கோவை - 25**

‘ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக்கற’ என்பதுபோல, நன்கு படிக்கும் மாணவனையும், சுமாராகப் படிக்கும் மாணவனையும் இனம் கண்டு ஆசிரியர்கள் அவர்களுக்கேற்றாற்போல் அணுக வேண்டும். ஆசிரியர் – மாணவர் உறவு ஒருவரையொருவர் புரிந்து கொள்ளும்படி இருத்தல் நலம். ‘அடிக்கிற’ பயத்தைப் போக்கினால் மாணவன் படிப்பில் கவனம் செலுத்துவான்.

**பானுமதி பாஸ்கோ, கோவை – 4.**

‘மிருகங்களை அடித்துத் துன்புறுத்தாதே; அன்பு காட்டு’ என்று ஆசிரியர்கள் போதித்துவிட்டு, மிருகத்தை விடக் கீழான நிலையில் குழந்தைகளை அடித்துத் துன்புறுத்தலாமா?!

**வி. திலகம், திருநெல்வேலி.**

தண்டிக்காமல் திருத்த முடியாது என்கிற நிலையில் தோப்புக்கரணம் போடச் சொல்லலாம் – அல்லது பள்ளிப் பாடத்தையே ‘இம்போஸிஷனா’க எழுதச் சொல்ல

லாம்... உடல் மன ஆரோக்கியம் வளரும் வகையில் தண்டனை அமைவதுதான் நியாயம்.

**பத்மாவதி, சென்னை - 93.**

**மா**ணவர்களை அடிக்கும் கொடுமைகளில் பெரும்பாலானவை வெளித் தெரிவதில்லை. ஏனென்றால் ஆசிரியர்களையும் நிர்வாகத்தையும் குறை கூறினால் குழந்தைகளின் எதிர்காலம் பாதிக்கப்படுமோ என பெற்றோர் அஞ்சுகின்றனர். அடி வாங்கும் மாணவன், தனது வெறுப்பை ஆசிரியர்மீதும் படிப்பின் மீதும் வெளிப்படுத்துகிறான். அதனால் அவனது எதிர்காலம் வெகுவாகப் பாதிக்கிறது. கடமை உணர்வும், பணியில் ஈடுபாடும் உள்ள அன்பான ஆசிரியர்களையே மாணவர்கள் நேசிப்பர். முப்பத்தைந்து ஆண்டுகள் ஆசிரியையாகப் பணியாற்றிய காலத்தில் எந்த மாணவரையும் அடித்ததில்லை; என் பாடத்தில் எந்த மாணவனும் தோல்வி அடைந்ததில்லை.

**வசந்தா வேணுகோபால்,**
**சென்னை - 44**

**எ**ல்லாக் குழந்தைகளுமே நன்கு படித்து மார்க் வாங்க வேண்டும் என்றுதான் விரும்புவர். அப்படியிருக்க, குறைத்து மார்க் வாங்குவதோ சிறு தவறுகள் செய்வதோ வேண்டுமென்றா நடக்கிறது? 'ஹோம் ஒர்க்' 'அரக்கனும்' 'டியூஷன்' அரக்கியும் வேறு சேர்ந்து கொண்டு குழந்தைகளைப் பயமுறுத்துகின்றன. எல்லாம் பெற்றோரின் பேராசையால்தானே! அடித்தலை விடுங்கள். படித்தல் தானாக நடக்கும். அன்பும் அரவணைப்புமே உதவும்.

**ரஜனி கிருஷ்ணமூர்த்தி,**
**சென்னை - 41.**

**அ**டிபடும் குழந்தை தனது தவறை உணர்கிறதோ இல்லையோ, மூன்று தவறான பாடங்களைக் கற்கிறது.

1. தன்னைவிட சிறிய உருவமுள்ளவர்கள் தங்களை எதிர்க்க மாட்டார்கள், அவர்களை அடித்து அடக்கலாம்.
2. வயதில் சிறியவர்களை அடிக்கலாம்.
3. பலம் குறைந்தவர்களைப் பந்தாடலாம். — இப்படிப்பட்ட வன்முறை எண்ணத்தைக் குழந்தைகளுக்குக் கற்பிப்பதை ஆசிரியர்கள் நிறுத்த வேண்டும். ஆசிரியர் வாழ்வு தவம் போன்றது.

**டாக்டர் எஸ். வெங்கடராமன்,**
**சென்னை - 61.**

**நா**ன் ஏழாம் வகுப்பு படிக்கும்போது, பாடம் எழுதுவதில் ஏற்பட்ட சிறுபிழைக்காக மூன்று மணி நேரம் சுடுமணலில் முட்டி போட வைத்தார் ஆசிரியர். காலில் புண் ஏற்பட்டு, காய்ச்சல் வந்து, ஒருவாரம் 'லீவ்' எடுக்க வேண்டியதாயிற்று. பதினோராம் வகுப்பு படிக்கும்போது தலைமையாசிரியர் வரும் வழியில் நானும் என் நண்பனும் நின்று கொண்டிருந்தோம். நாங்கள் ஏதோ வம்பளப்பதாக எண்ணி, அவர் என் முகத்தில் ஒரு 'பளார்' விட்டார். அதிலிருந்து மூக்கில் நீர்க்கசிவு ஏற்பட்டு, மிகவும் துன்பப்பட்டேன் எம்.பி.பி.எஸ். இறுதியாண்டுவரை நான் இதனால் துன்பப்பட்டேன். எனவே அடிப்பது மட்டுமல்ல, இது மாதிரி தண்டனை தருவதையும்கூட ஆசிரியர்கள் தவிர்க்க வேண்டும்.

தொகுப்பு : ஸ்ரீ. ஸ்ரீராம்

படம் : ஸ்ரீஹரி



## 22 காதல் பிசாசே!



*இது போல இனிமையில்லை*
*இது போல கொடுமையில்லை*
*இருவேறு உலகம்*
*நீயடி*
*அலைபாய உதயமில்லை*
*நிலை மாற தடயமில்லை*
*மலரோடு கலகம்*
*ஏனடி?*

சௌந்தர்ராஜன் என்று அவனுக்கு யார் பேர் வைத்தாரென்று தெரியவில்லை. சௌந்தர்யம் என்றால் அழகு. அழகுக்கும் அவனுக்கும் துளிக்கூட சம்பந்தமில்லை. மேலும் அழகென்று பிறரால் போற்றப் படுகிற எதையும் அவனுக்கு ரசிக்கத் தெரியாது. பெண்கள் அழகானவர்கள் என்று சதா அவனிடம் வாலிப கிறுக்கில் உளறப் போக, அதற்காக அழகான சதாவின் முகத்தில் காயமேற்பட்டதுதான் மிச்சம்.

சதாவும் சௌந்தரும் அழகுக்காக அடித்துக் கொண்ட சம்பவத்தை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது. அழகு மீது சௌந்தருக்கு ஏற்பட்ட வெறுப்பும் சதாவுக்கு இருந்த கிறக்கமும், எதன் பொருட்டு உருவானது, அல்லது எதை முன் வைத்து நிகழ்ந்தது என்பதை நல்ல மனநல மருத்துவர்களால் மட்டுமே உணர முடியும்.

சதாவுக்கும் சௌந்தருக்கும் கண்ணாடி அணியாமலேயே கண்கள் தெளிவாகத் தெரியும். சதா பார்க்கிற காட்சியை சௌந்தராலும் பார்க்க இயலும். ஒரே காட்சியை இருண்டு பேரும் பார்ப்பார்கள். ஆனாலும், இரண்டு பேருக்கும் அழகு குறித்த அபிப்ராயம் .... போராகும். புஷ்பலதாவின் காதலனாக சதா மாறியிருந்தான். சௌந்தரின் நண்பனாகவுமிருந்த சதாவுக்கு அவளைப் பிடித்திருந்தது.

பேச்சுவாக்கில் சௌந்தரிடம் புஷ்பாவைப் பற்றிச் சொல்ல வேண்டியிருந்தது. சொல்லாமல் மறைத்தால் கோபிப்பான் சௌந்தர்.

அவள் அழகு சதாவை இம்சித்தது. மழையில்லாத பின்னிரவுகளிலும் மனதுக்குள் ஈரமான கனவுகளை விதைத்துக் கொண்டிருந்தது. கையெழுத்து அழகாக வேண்டுமென்று பிரார்த்திக்கத் தொடங்கினான். யாரேனும் புதிதாக பேனா வாங்கியதாக அவனிடம் சொல்ல நேர்ந்தால், உடனே அந்தப் பேனாவின் செழுமையைச் சோதிக்க அவன் பெயரை எழுதிப் பார்ப்பதை வழக்கமாக்கி விட்டான். இதற்கு முன் சௌந்தர் பெயரைத்தான் எழுதினானோ என்னவோ?

இரண்டு இதயத்தை அழகென்றொரு இதயம் செயலிழக்கச் செய்தது. அவர்களுக்குள் கருத்து முரண்பாடு முற்றி நிரந்தர எதிரி போல் கருதத் தொடங்கினர் என்பதோடு நமக்குத் தேவையான விஷயம் தொடங்குகிறது.

சதாவை அழகானவன் என்று நான் சொல்வதற்கும், சௌந்தர் அழகில்லை என்று மற்றவர் கருதுவதற்கும் என்ன காரணம்?



புஷ்பலதாவுக்கு சௌந்தரைக் காட்டிலும் சதா மீது பிரியம் வர யாது காரணம்? இந்த அழகுச் சமாச்சாரம் யாரால் உருவாக்கித் தரப்பட்டது? பக்கம் பக்கமாய் அழகுக் குறிப்புகளை வெளியிடும் மாதர் இதழ்களால் இதை தெளிவாக்க முடியுமென்று தோன்ற வில்லை.

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்னும் சொல்லடைக்குள் பொதிந்து கிடக்கிற உண்மையை ஏன் புஷ்பலதாவால் புரிந்து கொள்ள முடியவில்லை? பெரும் பாலான நாட்டார் சாமிகள் உருவாக்கப் பட்ட அழகு சட்டத்துக்குள் அகப்படு வதில்லை. 'பார்த்தாலே பரவசமென்னும் திரைப்படத்தில் இரண்டு கதாநாயகர்கள் ஒருவர் 'சௌந்தர் போலவும் மற்றவர் சதா போலவும் இருப்பார்கள். சௌந்தரைப் பற்றி சதா பேசும்போது அவன் கறுப்பாக இருப்ப தால் தனக்கு அவன் மீது அருவருப்பு தோன்றுவதாகப் பேசுகிறான்.

கறுப்பு அருவருக்கத்தக்க வண்ணமா? கறுப்புதான் துக்கத்தின் வண்ணமென்றால் ஆலயங்களில் வழங்கப்படுகிற பூஜை கயிறுகள் ஏன் கறுப்பு வண்ணம் பூசியிருக் கிறது? மண்டேலா 'பார்த்தாலே பரவசம்' பார்த்திருந்தால் என்ன துடி துடித்திருப்பார்? நிரங்களில்லை, ஒருவனின் மனது. மனது ஒருபோதும் நிறங்களால், கவரப்படுவதில்லை. சிவப்பு புரட்சிக்கும் வெண்மை சமாதானத் துக்கும் எனத் தீர்மானித்த முதல் மனிதனின் சிந்தனையை மறுபரிசீலனை செய்ய வேண்டும்.

அழகைப் புகழ்ந்து பாடும் ஆதிசங் கரரின் 'சௌந்தர்ய லஹரி'. ஐந்து லட்ச ணங்களை உண்டாக்கியது. நமஸ்கரித்தல்,

**யுகபாரதி**

பிரார்த்தித்தல், ஆசி வழங்குதல், பெருமைகளைப் புகழ்தல், உண்மையை அறிதல் என்பவை அவை. அந்த லட்சணங்களை ஒவ்வொரு மனதும் கொண்டிருக்கின்றன. எனினும், அதை முழுமையாக கைக் கொள்ளும் போதே சிறப்பாகக் கருதப்படும். அழகு மட்டுமல்ல, அத்தனையும் அருளால் நிகழ்வதென்பார் மாணிக்கவாசகர்.

***அன்றே என்றன் ஆவியும்***
***உடைமையும் எல்லாம்***
***குன்றேயனையாய் என்னையாட்***
***கொண்டபோதே***
***கொண்டிலையோ***
***இன்றோர் இடையூறு எனக்குண்டோ***
***எண்தோள் முக்கண் எம்மானே!***
***நன்றே செய்வாய் பிழை செய்வாய்***
***நானோ இங்கு நாயகமே***

தன்னை அர்ப்பணிக்கும் தகைமை வரும் போது சகலமும் தன்னிடம் ஐக்கியமாகும். உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்படைப்பதே சரணாகதி. பாதரசத்தால் கண்ணாடிக்குப் பிரதிபலிக்கும் திறன் உருவாகிறது. அந்தப் பாதரசம் பாழ்பட்டால் பார்ப்பவனின் முகமோ, கண்ணாடியின் அகமோ, நமக்குத் தெரியப் போவதில்லை. எனவேதான் அழகை பாதரசம் போல் கருத நேர்கிறது.



அழகென்பது 'மூக்கும் முழியுமாக இருப்பது மட்டுமல்ல. கபடமற்ற குழந்தைகள் சிரிப்புக்கு ஈடாக எதைச் சொல்ல முடியும்? சிரித்த முகத்தோடு தென்படும் எந்த மனிதரும் அழகற்றவராக இருப்பதில்லை. சதாவின் அழகு வெளியாகவும், செளந்தரின் அழகு உள்ளாகவும் இருக்கிறது. அகமும் புறமும் கொண்டதே அகிலம்.

செளந்தருக்கும் சதாவுக்கும் நிகழ்ந்த சண்டையைப் பார்த்து புஷ்பலதா சிரித்ததுகூட எனக்கு அப்படித்தான் படுகிறது. இரண்டு மனம் வேண்டும் என்பார் கண்ணதாசன். நினைத்து வாழ ஒன்று. மறந்து வாழ ஒன்று. மறந்தால்தானே நினைப்பதற்கு என்கிறது ஒரு புதுக்கவிதை. யாதும் நீயான பிறகு எது நினைவு? எது மறதி?

***செம்மண் பாதையில்***
***அவளும் நானும்***
***கல் விளையாட்டு***
***ஆடிக் கொண்டு கடந்தோம்***
***வீசிய கல்லை***
***குறி பார்த்து அடித்து விட***
***சந்தோஷத்தின் ததும்பலில்***
***வானம் பார்க்க முத்தமிட்டாள்***
***குழைவில்***
***இடம் மாறிய வானத்தால்***
***விண்மீன்களை வீசி***
***நட்சத்திர விளையாட்டை***
***தொடர்ந்தோம்.***

'குட்டி ஆலீஸும் கோடி நட்சத்திரங்களும்' தொகுப்பிலுள்ள கவிதையிது. புஎஸ். சிவக்குமார் எழுதியது. செளந்தர் சதாவானாலும், சதா செளந்தரானாலும், புஷ்பலதா புஷ்பலதாவாகவே இருப்பதுதான் இந்தக் கவிதையின் மையம். கல் விளையாட்டை நட்சத்திர விளையாட்டாக மாற்றுகிறது காதல். காதலோடு இணையும் போது கிழக்கின் ரேகை மேற்கில் விரியும். அலைந்த மனமும் அவதரிக்கும் சக்தி பெறும்.

முதல் பத்தியில் செளந்தராஜனின் அழகு சகிக்க முடியாதது என்ற என் கருத்தும் காதலற்றவர்களால் தோற்றுவிக்கப்பட்டதே ஆகும். சதா அழகானவன் என்பது புஷ்பலதா காதலிப்பதால் எனக்குள் மலர்ந்த ரசாயன மாற்றம். புஷ்பலதாவுக்கு இப்போது திருமணமாகி மூன்று வயதாக திரும்பவும் நடந்து வருகிறாள், நாங்கள் வசித்த அருளானந்த நகர் தெருக்களில். குழந்தையின் சிரிப்பு பழைய சந்தோஷத்தைத் தருகிறது.

பிறிதொரு சந்தர்ப்பத்தில் செளந்தர், சதா, புஷ்பலதா உறவைப் பற்றி எழுதும்போது இப்படித் தொடங்குவேன்; செளந்தர் பேருக்கு ஏற்றாற்போல் அழகாயிருப்பான். சதாவுக்கும் அழகுக்கும் சம்பந்தமேயில்லை. மேலும், அழகானதென்று போற்றப்படுகிற எதையும் அவனுக்கு ரசிக்கத் தெரியாது.

ஏன் இந்தக் கதையை இப்படிச் சொல்ல நேருமென்றால், புஷ்பலதாவின் கணவனாக அவனில்லை. அந்தக் குழந்தைக்கு மட்டும் தனது அப்பாவாக சதாவைத் தெரியும். இறந்து போன புஷ்பாவின் குழந்தையைத் தத்தெடுத்து வளர்க்கிறான் செளந்தர். சதாவாவது எளிது, செளந்தராவது கடினம்.

(தொடரும்)

# சாகித்ய அகாடமியில் இந்துத்வா!

சாகித்ய அகாடமியின் புதிய தலைவராகியிருக்கிறார் கோபிசந்த் நாரங். இவரது வரவையடுத்து சாகித்ய அகாடமியில் இந்துத்வா' நுழைந்துவிட்டதாகக் கூறுகிறார்கள்.

"இந்துத்வா சக்திகள் அரசின் பெரும்பாலான நிறுவனங்களைத் தங்களோட கைப்பிடிக்குள்ள கொண்டு வந்துவிட்டன. அவர்களோட கடைசி கபளீகரம் சாகித்ய அகாடமி. கோபிசந்த் மூலமா அதுவும் நிறைவேறிடும்" என்கிறார் எழுத்தாளர் பா. செயப்பிரகாசம்.



"கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சிக்கான நிறுவனம் என்.சி.ஈ.ஆர்.டி. இதோட தலைவரா நியமிக்கப்பட்டவர், ஆர்.எஸ்.எஸ். கொள்கைகளை வெளிப்படையா பேசுகிற கே.எஸ். ராஜ்புத். சாதுக்கள், சாமியார்களோட கருத்துக்களையும் சொற்பொழிவுகளையும் பாடத் திட்டத்தில் இணைப்பது, பல்கலைக் கழகங்கள் கல்லூரிகளில் வேத சம்பிரதாயம், வேத உபநிஷதம், ஜோதிடம் கற்க நிதி ஒதுக்கீடு செய்யறது; இதுதான் ராஜ்புத் தலைவரா நியமிக்கப்பட்ட பிறகு பிரதான வேலையா போச்சு. இந்துத்வா கருத்தோட்டத்தை மையப்படுத்தி கல்வி மற்றும் ஆராய்ச்சிக்கான முன்னுரிமைகளையே இவங்க மாற்றிட்டாங்க. இந்திய வரலாற்று ஆராய்ச்சி நிறுவனத்தோட 'சுதந்திரத்தை நோக்கி'ங்கற வரலாற்று நூலை அச்சுக்கு அனுப்பின பிறகு நிறுத்தி வச்சுட்டாங்க. ஏன்னா, அந்தப் புத்தகத்துல இந்திய விடுதலைப் போராட்டத்துல ஆர்.எஸ்.எஸ். கடைப்பிடித்த எதிர்ப்புப் போக்கு விவரிக்கப்பட்டிருந்தது. இந்திய கல்வெட்டு வரலாறு போன்ற புத்தகங்கள் பதிப்பிக்கப்படாம தடை செய்யப்பட்டிருக்கு. இதுக்கு மாறா, 'சிந்து - சரஸ்வதி நாகரிகம்' பற்றி மூன்று ஆய்வுத் திட்டங்களும், தொல் பொருள், பாரம்பரியம் பற்றிய ஆய்வுகளும் இந்துத்வா கருத்தியல் அடிப்படையில உருவாக்கப்பட்டிருக்கு. 'அயோத்தியில பாபர் மசூதி இடிக்கப்பட்ட இடத்தில் ராமர் கோயில் இருந்ததை வரலாற்றுச் சான்று நிரூபிக்கும்'னு வாஜ்பாய் சமீபத்தில் சொன்னது கூட, இந்த வரலாற்றுக் கழகம் தோண்டி எடுத்துக்கொடுத்த ஊற்றுதான்.

"பா.ஜ.க. தலைவர் வெங்கையா நாயுடு மத்திய பண்பாட்டுத் துறை அமைச்சர் ஜக்மோகனுக்கு ஒரு கடிதம் எழுதறார். அந்தக் கடிதத்திலே லலித்கலா அகாடமி, சங்கீத நாடக அகாடமி, சாகித்ய அகாடமி ஆகியவற்றிலுள்ள இடதுசாரி சிந்தனையாளர்களைக் களையெடுக்கணும்'ம்னு குறிப்பிட்டிருக்கார். இந்தக் கடிதத்தை தமக்கும், ஜக்மோகனுக்குமான ரகசியமா வச்சிருந்தார் நாயுடு. ஆனா அது எல்லை தாண்டி வெளியே வந்திருக்கு. லலித் கலா அகாடமி, சங்கீத நாடக அகாடமி, சாகித்ய அகாடமி போன்ற நிறுவனங்களோட தலைவர்கள் வாக்கெடுப்பு மூலம்

## வழக்குப் போட்டிருக்கிறேன்!

சாகித்ய அகாடமியின் நிர்வாகிகள் தேர்வை எதிர்த்து வழக்குத் தொடர்ந்திருக்கிறார் எழுத்தாளர் சு. சமுத்திரம்.



அகாடமியின் தமிழக பிரதிநிதிகளின் பொறுப்பாளர் தேர்வுக்குப் போட்டியிட்டவர் இவர்.

"முதலில் முன்மொழியப்பட்ட பெயரை வோட்டெடுப்புக்கு விடுவதுதான் மரபு. என் பெயரை பேராசிரியர் பஞ்சாங்கம் முதலில் முன் மொழிந்தார். கவிஞர் பாலாவின் பெயரை திலகவதி முன்மொழிந்தார்.



• பா. செயப் பிரகாசம்

தேர்வு செய்யப்படறதுக்குப் பதிலா, அரசால் நேரடியா நியமிக்கப்படணும்னு ஹஸ்கர் குழு ஒரு அறிக்கை வெளியிட்டது. இந்த நிறு வனங்களோட செயல்பாடுகளை ஆராயற துக்காக அமைக்கப்பட்டது இந்தக் குழு. இதை சாகித்ய அகாடமி தவிர மற்ற அமைப்பு கள் ஏற்றுக் கொண்டது. உடனேயே, ஏற்றுக் கொண்டதோட அம்மைத் தழும்புகள் இந்த அமைப்புகள் மேல விழ ஆரம்பிச்சுட்டுது. வாஜ்பாயின் அமெரிக்க விஜயத்தைப் பெரு மைப்படுத்திய புகைப்படக் கண்காட்சியை லலித் கலா அகாடமியும், கார்கில் போர் வெற்றியைப் பிரபலப்படுத்தும் நிகழ்ச்சியை சங்கீத நாடக அகாடமியும் பெரிய அளவில் நடத்தின.

"மத்திய அமைச்சர் முரளி மனோகர் ஜோஷியின் பிறந்த நாளுக்குத் தன்னோட ஒரு புத்தகத்தை காணிக்கையாக்குகிறார் கோபிசந்த் நாரங். அந்தப் புத்தகத்துல, 'உருது இலக்கியத்தின் நெற்றியில் ஜொலிக்கும் ஆபரணம்'னு ஜோஷியை புகழ்றார் நாரங். இவரை எப்படி நம்பறது? இவரோட வெற்றிக்குப் பின்னால மறைமுகமா இந்துத்வா கைகள் இல்லைன்னு எப்படி சொல்ல முடியும்?"

"சாகித்ய அகாடமி ஒரு தன்னாட்சி அமைப்பு. அரசியலுக்கும் இதுக்கும் எந்த வித சம்பந்தமும் இது வரை இருந்ததில்லை. ஆனா இனிமேல் அப்படி இருக்குமாங்கறது சந்தேகம்தான்" என்கிறார் பா. செயப் பிரகாசம்.

**- ஏக்ஜி**

ஆனால் தலைவரான கோபி சந்த். இரண்டாவதாக முன் மொழியப்பட்ட பாலாவோட பெயரை, முதலாவதாக முன்மொழியப்பட்டதாகக் கொண்டு நடைமுறையை மீறி வாக்கெடுப்புக்கு விடறார். உயர்த்தப்பட்ட கைகளோட அடிப்படையில வெற்றி நிர்ணயமாகும். ஆனால் உயர்த்தப்பட்ட கைகளை யாரும் எண்ணலை! திடீர்னு, 'பாலாவுக்கு அதிகமானோர் கைதூக்கியிருக்காங்க. அதனால அவர் வெற்றி பெற்றதா அறிவிக்கிறோம்'னு சொல்லிட்டாரு நாரங். உடனே நான் எழுந்து போய் 'இது முறையல்ல. எனக்கு அதிமானவங்க கை தூக்குனாங்கன்னு தெரியுது. ஆனா பாலா பெயரை நீங்க சொல்லிட்டீங்க. அதனால இன்னொரு தடவை நீங்க கை தூக்கச் சொல்லுங்க. எண்ணிடலாம்'னு சொன்னேன். அவர் இதையெல்லாம் பொறுமையா கேட்டுட்டு, 'நெக்ஸ்ட்'டுனு சொல்லிட்டு கூட்டத்தைக் கவனிக்கப் போய்ட்டாரு. நான் வெளி நடப்பு பண்ணிட்டேன். குறைந்தபட்ச நியாயம் கடைபிடிக்கப்படாததால் வழக்கு போட்டிருக்கேன்." என்று கொதிக்கிறார் சு. சமுத்திரம்.

காசி, கங்கையில் செய்யும் தீபவழிபாடு மனித வாழ்வுக்கு மேன்மை அளிக்கக்கூடியது !

## மாணவர்களுக்கு கல்வி தரும் காசி விஸ்வநாதர் க்ஷேத்ரமான

# காசியில் மாதாமாதம் அமாவாசையன்று

## கங்கைக்கு தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புனித க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...

**"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்டின்" ஐந்தாம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை !**

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

பிரபஞ்சம் முழுமைக்கும் உணவு படைக்கும் தாயாக விளங்கும் ஸ்ரீ அன்னபூரணி மாதா கொலுவீற்றிருக்கும் காசியில் மாதாமாதம் அமாவாசை அன்று கங்கைக்கு தீபமேற்றி, அன்னதானம் செய்யப்படுகிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறோம். ஆன்மீக அன்பர்கள் அனைவராலும் காசியில் கங்கைக்கு தீபமேற்றி அன்னதானமிட முடியும் என்ற இறை சிந்தனையோடு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பை ஏற்படுத்தியுள்ளோம். இந்த அன்னதான இறைபணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை வழங்கி இறையருளால் காசியில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும், அன்னம் அளிப்பதில் நாமும் ஓரளவேனும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு. ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு. ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு. ஆன்மீகம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமணநாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும், காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானமும், கங்கையில் தீபமேற்றும் பணியும் செய்து பத்து வருடங்கள் ஆன்மீகம் மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், சிரார்த்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000- அனுப்பும் போது யாருக்கு சிராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்டபிரதானத்திற்காக ரூ. 5000- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை பத்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு சிராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு சிராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான "அக்ஷய வடத்தின்" படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் சிராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதான சேவையிலும், கங்கைக்கு தீபமேற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.



**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி

# ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net



"காசியில் அன்னதானமிடுவது வாழ்வில் பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும்"

# அமெரிக்காவில் புது எதிரி!

அந்த எதிரியை எப்படி எதிர்கொள்வது, எப்படி அழிப்பது என்று நூற்றுக்கணக்கான விஞ்ஞானிகளையும் நிபுணர்களையும் கொண்டு ஆறு நாட்கள் ஆய்வுக் கருத்தரங்கம் நடத்தியது அமெரிக்கா. 'மேற்கு நைல்' என்று பெயரிடப்பட்ட அந்த எதிரியால், சென்ற ஆண்டில் மட்டும் 4000 பேர் பாதிக்கப்பட்டார்கள். அதில் 256 பேர் மடிந்தே போய்விட்டார்கள்.

'இது ஒரு படையெடுப்புதான். தாக்குதல் உலகம் முழுதும் விரைவில் பரவப் போகிறது' என்கிறார் ரோஜர் நாஸி, கொலா ராடோவின் ஆராய்ச்சியாளர், விஞ்ஞானி.

'ஒசாமா பின் லேடன்தானே அந்த எதிரி?' என்கிறீர்களா? ம்ஹூம்... இல்லை... நாம் சர்வ சாதாரணமாக நினைக்கும் கொசுதான் அந்த 'மேற்கு நைல்' வைரஸைப் பரப்பும் எதிரி.

மஞ்சள் ஜுரம், டெங்கு, மலேரியா, ரிஃப்ட் வேலி காய்ச்சல் - என்று விதவிதமான நோய்கள் பரவப் போகின்றன இந்த மேற்கு நைலால். இந்த வைரஸ் அடுத்து எந்தப் புதிய நோயைப் பரப்பப் போகிறதோ என்று ஆடிப் போயிருக்கிறார்கள் அமெரிக்கர்கள்.

'ஆனால் இதை ஆராய்வதற்குப் போதுமான நிதி உதவி தருவதில் அரசாங்கத்திற்குத் தற்போது சிக்கல் இருப்பதுதான் வருத்தமான விஷயம்' என்கிறார் விஞ்ஞானி ஆஸ்டர் ஹாம்.



சாதாரணப் பூச்சிக் கொல்லி மருந்து, நிலத்துக்குப் போடும் பாக்டீரியா, போதாமல் கொசு தின்னும் மீன்கள், வண்டுகள் என்று இதற்காகப் பயன்படுத்திப் பார்க்கிறார்கள்.

கருத்தரங்கத்தில் ஆஸ்டர் ஹாம் இன்னொரு பெரிய குண்டையும் தூக்கிப் போட்டிருக்கிறார். 'தீவிரவாதிகள் இந்தக் கொசுக்களை உபயோகித்து, மோசமான விளைவுகளை ஏற்படுத்தக் கூடிய ரசாயனங்களைத் தூவும் ஆபத்து நிகழக்கூடிய வாய்ப்பு இருக்கிறது' என்கிறார் இவர்.

அமெரிக்க அரசாங்கத்தால் பிடித்து அழிக்க முடியாத எதிரியாக உலவிக் கொண்டிருக்கிறது 'மேற்கு நைல்' வைரஸைப் பரப்பும் இந்தக் கொசு', நம்மூர் வீரப்பனைப் போல!

- தேவநாதன்

# பூப்போல பூப்போல



கையில் துணிச்சுருளில் சுற்றிய சின்னஞ்சிறு பாப்பாவோடு ஆட்டோவில் வருவது சங்கீதாவுக்குப் புது அனுபவம். ஆட்டோவின் குலுக்கலில், மேலே மோதும் காற்றில், அசராமல் குழந்தை நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

"ஆஸ்பத்திரிக்காம்மா?" ஆட்டோக்காரர் கேட்டார்.

கையில் சிறு குழந்தையோடு ஒரு பெண் வெளியே வந்து, ஆட்டோ பிடித்தால் பெரும்பாலும் தடுப்பூசி போடப்போகும் அம்மாவாகத்தான் இருக்க வேண்டும் என்பது, ஆட்டோ உலகத்தின் விதிகளில் ஒன்றோ என்னவோ... 'நான் போவது குழந்தையைக் கொண்டுவிட' என்று நினைத்துக் கொண்டாள். 'கொண்டு விட என்றா நினைத்தேன்? திரும்பக்கொண்டு விட, அதுவும் நிரந்தரமாகத் திரும்பிக் கொண்டு விட' என்று நினைப்பதைத் திருத்திக் கொண்டாள். இருந்தாலும் பேச்சை வளர்த்தாமல், "ஆமாம்பா" என்றாள்.

நல்ல வேளையாக இவள் குழந்தையைத் திருப்பிக் கொடுக்கப்போகும் அடாப்ஷன் சென்டர் ஒரு மருத்துவமனை மாதிரியே இருந்தது. சினிமாக்களில் வருவது போல் 'கருணை இல்லம்' என்று பெயர் தாங்கிய அனாதை விடுதி மாதிரியெல்லாம் இல்லை. அப்படி வேறு இருந்து தொலைந்தால், கையில் குழந்தையோடு போய் வெறும் கையுடன் திரும்பி வருவதை யாரெல்லாம் பார்த்தார்களோ, என்று கவலைப்பட நேர்ந்திருக்கும். இப்படி வேறு வேறு பயங்களையும், கவலைகளையும் குறித்துக் கொண்டு எட்டு வருஷங்களை ஓட்டியாகி விட்டது.

'யாராவது கேட்பார்களோ' என்று பயம். 'கல்யாணமாகி எட்டு வருஷமாச்சே, விசேஷம் ஒண்ணும் இல்லையா?' என்ற

மினி தொடர்

1



கேள்விக்குப் பயம்.'பயங்கர பிளானிங்கா...?' என்று பாராட்டுவதைப் போல விஷம் கொட்டும் கேள்விக்குப் பயம் 'அவங்களுக்கு என்னடா, டபுள் இன்கம், நோ கிட்ஸ்' ஆனந்தமா இருக்காங்க' என்ற விமர்சனம் கண்டு பயம்... இப்படியெல்லாம் யாராவது பேசிவிட்டால், சுருங்கிப் போய் முரளி இவளிடம் பாராமுகமாய் இருந்து விடுவானோ என்று பயம். இந்தப் பயத்திற்குப் பதிலாக ஒரு குழந்தையைத் தத்து எடுக்கலாம் என்று தோன்றியது. முரளியிடம் ஒரு மாதம் மன்றாடினாள். விடாமல் போராட்டம். ஓயாது அழுகை. இறுதியில் முரளி சம்மதித்தான். அரைமனதுதான். ஆனாலும் சம்மதித்தான். இவளோடு வந்து இதே அடாப்ஷன் மையத்தில் காத்திருந்து, கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி, ஓயாமல் படிவங்கள் நிரப்பி, பெண் குழந்தையைத் தத்தெடுத்துப் போகும் போது கூட ஒத்துழைத்தவன்தானே. ஆனால் குழந்தை வீட்டிற்கு

**பாரதி பாஸ்கர்**

வந்த நாளாய், 'என்ன இருந்தாலும்..' என்று உறவு கொட்டின கொட்டலிலோ, 'உன் நிலைமை இப்படி ஆச்சே' என்ற அம்மாவின் புலம்பலிலோ மாறிப்போனான். 'என்ன இருந்தாலும் என் குழந்தை ஆகாது சங்கீதா'



என்றாள். 'யாரோ குழந்தையை நம் வீட்டிலே விட்டுட்டுப் போன மாதிரி இருக்கு' என்றாள். கணவனோ, மாமியாரோ, யாரும் சரியாக ஒத்துழைக்காமல், இது சரியா வராது என்கிற பயம் சங்கீதாவிற்குள் நிரம்பி விட்டது. முன்னால் இருந்த பயத்தைவிட இது பெரும் பூதமாக இருந்தது. குழந்தை அழுகிற போதெல்லாம் பயமாக இருந்தது. ஒரு மாத போராட்டத்திற்குப் பிறகு, சரிப்படவில்லை, குழந்தை வேண்டாம், திருப்பிக் கொடுத்து விடலாம் என்று இதோ வந்திருக்கும்போது... அடாப்ஷன் மையத்தில் எப்படியெல்லாம் திட்டுவார்களோ என்று புது பயம் விஸ்வரூபம் எடுத்திருந்தது.

பச்சை பெயிண்ட் அடித்த பெரிய கதவுகளைத் தாண்டி, வாதா மரங்களும், குரோட்டன்ஸ் செடிகளும் அலங்கரித்திருக்கும் முகப்பைத் தாண்டி, சிரித்தே அறியாதது போல் சிடு மூஞ்சியாக இருந்த ரிசப்ஷன் பெண்ணிடம் தன் வருகைத் தகவல் சொல்லிவிட்டு, நாற்காலியில் சாய்ந்து, குழந்தையையும் மடியில் வாகாக வைத்துக் கொண்டபோது, சங்கீதாவுக்குத் திரும்பவும் பயத்தால் கைகள் குளிர்ந்து போயிருந்தன. அவள் பள்ளியில் படிக்கும்போது தினம் ஒரு பெயர் வைத்துக் கொள்வது வழக்கம். அப்பா கல்லூரியில் பேராசிரியர். வீட்டிற்குள் நுழையும் முன்பு வாசற்படியிலேயே அவர் கேட்க வேண்டும். 'இன்னைக்கு உன் பெயர் என்ன?' ஒரு நாள் அவள் ஜான்சி ராணி. அன்று அப்பா ஆங்கிலேயச் சிப்பாயாக வேண்டும். அவளுடன் சண்டை போட வேண்டும். காய் வெட்டும் கத்திதான் வாள். உருளைக் கிழங்கு வைக்கும் வட்டக் கூடையின் மூடிதான் கேடயம். இன்னொரு நாள் அவள் ஜோன் ஆஃப் ஆர்க். கடவுள் அவளுக்குச் சக்தி அளித்திருந்தார். தாய் நாட்டை விடுதலை செய்ய, நடுவில் ஒரு நாள் சினிமா பார்த்துவிட்டு வந்தால், அடுத்த நாள், அவள் பால் வேறுபாடுகளைக் கடந்து ஜெய்சங்கராகிவிடுவாள். அவள் தான் துப்பறியும் நிபுணி 007 எல்லா வேஷத்திலும் அவள் போராடுவாள். கல்லூரி நாட்களில் தண்ணீர் குடிக்க, டாய்லெட் போக எல்லாவற்றுக்கும் 'கூட வரியாப்பா?' என்று சக மாணவிகள் துணை தேட, சங்கீதா கராத்தே பயின்றாள். 'அத்தான், என்னைக் கை விட்டுடாதீங்க' என்று கறுப்பு வெளுப்புப் பட கதாநாயகிகள் வசனம் பேசும்போது, தோழிகளுடன் குதிரை மாதிரிக் கனைத்து சினிமாத் தியேட்டர்களை நடுங்க வைத்தவள்தான். இவள் வேலை பார்க்கும் நிறுவனத்தின் இண்டர்வியூவில் பொழுது போக்கு - கவிதை என்று இவள் போட்டிருந்ததைப் பார்த்து, பிடித்த கவிதை சொல்லும் படி கேட்டபோது 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற பாரதியின் கவிதையைச் சொன்னவள்தான். இப்போது சங்கீதாவுக்கு ஒரு கல்யாணம் வந்து தன் தைரியம் அனைத்தையும் வாரிக் கொண்டு போனது போலிருந்தது.

முரளிகூட வந்திருந்தால் இத்தனை பயம் இருந்திருக்காது. 'என்ன சொல்லப் போகிறேன்? எப்படி விளக்கப் போகிறேன்?' குழந்தையைத் தத்து எடுக்கும் பெற்றோர் சரியாய் வளர்ப்பார்களா, என்று அறிய இந்த நிர்வாகம் எத்தனை எச்சரிக்கையாய் இருந்தது. அப்போதெல்லாம் தாமதம் செய்யாமல்

## எட்டு வருடங்களுக்குப் பின் 'சூப்பர்' சுவாசம்!

சூப்பர் மேனாகத் திரையில் தோன்றிய கிறிஸ்டோபர் ரீவ். சமீபத்தில் இரண்டு பெரும் சாதனைகளை நிகழ்த்தியிருக்கிறார். பதினைந்து நிமிடங்களுக்குத் தானாகவே சுவாசித்திருக்கிறார். காப்பியின் வாசனையை உணர்ந்திருக்கிறார். ஆம், இவையே சாதனைகள்தான் எனறாக்கிவிட்டது. எட்டு ஆண்டுகளுக்கு முன் அவரை அடித்துப் போட்ட அந்த விபத்து.

கிரேக்கச் சிலை போன்ற முகமும், அற்புதமான உடற்கட்டும் கொண்ட இவர் ஒரு நாள், குதிரையொன்றில் ஏறி வேகமாகப் பயணம் செய்து கொண்டிருந்தார் (ஷூட்டிங்கிற்காக அல்ல, நிஜத்தில்). அப்போது ஏதோ ஒரு காரணத்தினால் பயந்து போன அந்தக் குதிரை அங்கிருந்த வேலி ஒன்றின்புறமாகச் சரியத் தொடங்கியது. கிறிஸ்டோபர் முன்பக்கமாக எகிறி விழ, குதிரை ரிவர்ஸில் சென்றது. நேரடியாகத் தலை தரையில் மோத, சூப்பர் மேன் கீழே விழுந்தார்.



சீக்கிரம் குழந்தையைக் கொடுங்கள், என்று பொறுமையற்று எத்தனை கெடுபிடி செய்தேன்? இன்று எந்த முகத்தோடு திருப்பிக் கொடுக்க வந்திருக்கிறேன்...?

குழந்தையை வீட்டுக்கு எடுத்து வந்த முதல் சில நாட்களே நரகமாய் இருந்தன. சங்கீதாவின் குழப்பமான சிந்தனைகள் ஒரு வடிவம் இல்லாது அலைந்தன. ஸ்தூலமாய் உணரக் கூடிய நினைவுகள் அல்ல அவை. ஞாபக அடுக்குகளில் உறைந்து நிற்கும் செதுக்கல்கள். சில பிம்பங்கள், சில வாசனைகள், சில வார்த்தைகள், இப்படி கோர்வையில்லாத நினைவுச் செதுக்கல்கள். இவளுக்குப் பள்ளியில் பி.டி. டீச்சர் கையில் பிரம்படி கொடுத்தபோது, கன்னிச் சிவந்த கையைப் பார்த்து, அடுத்த நாள் பள்ளிக்கு ஓடி வந்து நடு மைதானத்தில் கத்திய அம்மாவின் குரல், வெள்ளிக் கிழமைகளில் உட்கார வைத்து தலையில் எண்ணெய் வைத்து வீட்டில் அரைத்த சீயக்காய் போட்டு முடியை குழைக்கும்போது மேலே படும் அவள் மூச்சின் இனிய வாசம், இவளின் மாதாந்திர அவஸ்தைகளின் போது காலைப் பிடித்து விடும் அப்பாவின் கைகளின் அழுத்தம், எல்லாம் கலந்த கலைடாஸ்கோப் உணர்வுகள். அப்பா, அம்மாவிடம் நான் உணர்ந்த பாசத்தை இந்தச் சிறு பிள்ளையிடம் என்னால் செலுத்த முடியுமா என்ற கேள்வி, கொக்கி போட்டு இழுக்கத் தான் குழந்தையை வீட்டிற்குக் கூட்டி வந்தாள்.

ஆரம்பத்திலிருந்தே எல்லாம் தப்பு. உதவிக்கு வருவதாய் இருந்த அம்மாவுக்கு திடீர் ஹார்ட் அட்டாக். வர முடியாமல் படுத்த படுக்கையானாள். 'சங்கீதா யாரோட குழந்தையையோ நம்ம வீட்டில போட்டுட்டுப் போனாப் போல இருக்கு. இதுதான் நம் குழந்தைன்னு தோணுமா, தெரியலை, பார்க்கலாம். என்ன இருந்தாலும்..' தோளைக் குலுக்கியபடி முரளி நகர்ந்துவிட்டான். 'என்ன இருந்தாலும்' என்ன என்பதை அவன் சொல்லவில்லை. ஆனால் சங்கீதாவுக்குப் புரிந்தது. இந்த வீட்டில் தானே இன்னும் யாராலும் தத்து எடுக்கப்படாத அனாதை. தான் ஒரு பிள்ளையைத் தத்து எடுப்பதா என்ற எண்ணம் ஒரு சிறு பொறி போலத் தோன்றி, நிமிஷத்திற்கு நிமிஷம் பெரிதாய் வளர்ந்து, அசுர பலம் பெற்று ஓங்கி, குழந்தையைத் திரும்பக் கொடுத்துவிடலாம் என்று வந்திருக்கும்போது, உலகின் பயம் அனைத்தும் வயிற்றில் பிசைவதாய் அவளுக்கு உணர்வு.

'சங்கீதா முரளி'

ரிசப்ஷன் முகப்பு கூப்பிட்டவுடன் நிர்வாகியின் அறைக்குள் நுழைந்தாள். நிர்வாகி மலையாளச் சேச்சி போல் வெளுப்பாய், பெரிதாய் இருந்தார். வெள்ளையில் ஆரஞ்சுப் பூக்கள் போட்ட காட்டன் புடைவை. முகத்தில் கனிவும் கண்டிப்பும் ஒன்றாய் இருந்தன.

'சொல்லுங்க, என்ன விஷயம்..' என்றார்.

குழந்தை வேண்டாம் என்று திருப்ப வந்திருப்பதாய் சங்கீதா சொன்னதும், அவரின் முகம் சிவந்து கொண்டே போனது.

(தொடரும்)

---

கிறிஸ்டோபரின் முதுகெலும்பு மிக மோசமாக பாதிக்கப்பட்டிருந்தது. அங்குள்ள நரம்பு இழைகள் பலவும் துண்டிக்கப்பட, கழுத்துக்குக் கீழே உணர்வேயில்லை.

நுரையீரலுக்கும் குடலுக்கும் இடையே உள்ள சவ்வை உதரவிதானம் என்பார்கள். இதன் அசைவும் நம் சுவாசத்துக்குத் தேவை. இந்தப் பகுதியில் சிறுசிறு தையல்களின் மூலம் மெல்லிய ஒயர்கள் தைக்கப்பட்டன. உடலுக்கு வெளியே அமைக்கப்பட்ட ஒரு கட்டுப்பாட்டுப் பெட்டியோடு இந்தக் கம்பிகள் இணைக்கப்பட்டன. ஒரு நிமிடத்துக்குப் பன்னிரண்டுமுறை துடிக்குமாறு வெளியிலிருந்து இந்தக் கம்பிகளுக்கு சிக்னல்கள் தரப்பட்டன. உதரவிதானம் இப்படி சுருங்கும்போது உடலின் உள்ளே நுழையும் காற்று நுரையீரல்களுக்குச் செல்லும். சிக்னல்கள் நிறுத்தப்படும்போது, உதரவிதானம் சாதாரணமாக இருக்கும்போது, காற்று வெளியேற்றப்படும். இந்த விதத்தில்தான் எட்டு வருடங்களாக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தார் கிறிஸ்டோபர் ரீவ்.

மெல்ல மெல்ல ரீவின் சுவாசத் தசைகளுக்குப் பல்வேறு பயிற்சிகள் அளிக்கப்பட்டதன் மூலம் அவை மீண்டும் இயங்கி, ரீவ், இயல்பாகச் சுவாசிக்க உதவி வருகின்றன. இன்னும் மூன்று மாதங்களில் ரீவ் இயல்பு நிலைக்குத் திரும்பி சுவாசிக்க ஆரம்பிப்பார் என்று எதிர்பார்க்கிறார்கள்.

- குல்லூ

"ஒவ்வொரு மனுசனுக்குள்ளயும் ஏதோ ஒரு சோகம், கவலை, ஏக்கம், சந்தோஷம், ஆசைன்னு நிறைய இருக்கும். அவங்களோட எமோஷன்தான் என்னோட ஓவியங்கள்'' கண்கள் படபடக்க பேசுகிற பாரதி ஜாவர், சென்னை எம்.ஓ.பி. வைஷ்ணவா கல்லூரியில் மக்கள் தகவல் தொடர்பியல் மாணவி.

"நான் கல்லூரியில் போய் ஓவியம் கத்துக்கலை. இந்தக்





# வண்ணங்களின் காதலி!

கலர்தான் பயன்படுத்தணுங்கற மாதிரி எந்தவித கோட்பாடும் நான் வச்சுக்கலை. ஓவியத்துல நான் சொல்ற, அல்லது காட்டற எமோஷன்களுக்கு ஏற்ற மாதிரி கலர்களைப் பயன்படுத்துவேன். பொதுவா நான் வண்ணங்களின் காதலி. எனக்குக் கலர்கள் ரொம்பப் பிடிச்ச விஷயம்'' என்கிற இவரது ஓவியங்கள், முதிர்ச்சியுடன் படைக்கப்பட்டிருக்கின்றன.

"என்னோட ஓவியங்கள் அதிகமாக பெண்களை மையப்படுத்தி இருக்கிறதாச் சொல்றாங்க. அவங்களோட துன்பங்களும், கனவுகளும், ஆசைகளும்தான் எனக்கு அதிகமா தெரியுது. அதுக்காக பெண்ணியவாதின்னெல்லாம் சொல்ல முடியாது. நானும் ஒரு பெண்ணுங்கறதால அப்படித் தெரியுதோ என்னமோ'' என்று சிரிக்கிறார்.

வாசுதேவின் ஓவியங்களைப் பார்த்தபின்பே இந்தத் துறைக்கு வந்ததாகக் கூறும் பாரதி, லண்டன் போய் ஓவியம் குறித்து நிறையப் படிக்கப் போகிறாராம்.

— அப்பு



# "'முதலமைச்சரைப் பார்க்கப் போறேன்!'"

*இருபத்து ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு தமது அண்ணன் விஸ்வநாதனைப் பார்க்க, கடந்த வாரம் குன்றக்குடி வந்திருந்தார் தவில் வித்வான் வலையபட்டி சுப்பிரமணியம்.*

*வாராது வந்த மாமணி கண்டு அந்தக் குடும்பமே அசந்து போய் வலையப்பட்டியைப் பார்த்து நின்று குதூகலிக்க... அவரைக் கல்கிக்காகச் சந்தித்தோம். கோவில்களைப் பற்றியும், கோவில்களின் இசை நிகழ்ச்சிகள் பற்றியும் ஒரு பிடி பிடித்து விட்டார் வலையப்பட்டி...*

"கோவில்களில் திருவிழா என்றால் முன்பெல்லாம் பத்து நாட்களும் பத்து குழுவினரின் நாதஸ்வரக் கச்சேரி இருக்கும். இப்போதெல்லாம் கிராமியக் கலை என்ற பெயரில் அறிமுகமாகி 'லைட் மியூசிக்' என்ற பெயரில் ஆபாச வார்த்தைகள் அடங்கிய பாடல்களையும், நடனங்களையும் நடத்துகிறார்கள்... பாரம்பரியம் மிக்க இசைக் கச்சேரிகள் இப்போதெல்லாம் நடத்தப்படுவதில்லை... ஏதோ என் தொழில் பாதிக்கிறதாக நினைத்து நான் சொல்லவில்லை... மாறி வரும் காலத்திற்கேற்ப புதுமை தேவைதான். இது போன்ற நிகழ்ச்சிகளை வேறு எங்கு வேண்டுமானாலும் நடத்துங்கள்... கோவில்களில் வேண்டாம் என்றுதான் சொல்கிறேன்... மங்கல இசை என்றாலே நாதஸ்வரமும், தவிலும்தான்... இப்போதெல்லாம் மங்கல இசை என்று நாதஸ்வரத்திற்குப் பதில் ஸாக்ஸஃபோன் போடுகிறார்கள், அது எப்படி மங்கல வாத்தியமாக இருக்க முடியும்?

இது குறித்து முதலமைச்சரிடம் கூட பேசலாம் என்று நினைக்கிறேன். கோவில்களில் பத்து நாட்கள் திருவிழா என்றால் மூன்று நாள் நாதஸ்வரக் கச்சேரி, ஒரு நாள் புல்லாங்குழல், பரதநாட்டியம், வாய்ப்பாட்டு... என்று நிகழ்ச்சிகள் அமைக்கச் சொல்லி ஆணை வழங்க கேட்டுக் கொள்ளப் போகிறேன்...

*'இதில் அரசு என்ன செய்ய முடியும்?"*

*நிர்வாக அறங்காவலர்களை கேள்வி கேட்கலாமே.*

*கோவில் நிர்வாகங்களை நீங்கள் கேட்டிருக்கலாமே?*

அதற்கு அவர்கள், கூட்டம் வருகிறது, வரவேண்டும்... மக்கள் விரும்புகிறார்கள், உபயதாரர்கள் விரும்புகிறார்கள், என்று புதுமையான நிகழ்ச்சிகளுக்கு அனுமதி வழங்குகிறார்கள். உபயதாரர் விரும்புகிறார் என்பதற்காக... நிகழ்ச்சிக்குப் பணம் அதிகம் தருகிறார் என்பதற்காக 'காபரே டான்ஸ்'

வைக்கச் சொன்னால் வைத்து விடுவார்களா? இல்லை நிகழ்ச்சிகளில் புதுமை செய்கிறோம் என்று நான் தவில் வாசிக்கும்போது எழுந்து நின்று ஆடினால்... வலையப்பட்டி புதுமை செய்கிறார்... எழுந்து ஆடுகிறார் என்றால் அது புதுமையா? அதற்கும் ஒரு வரையறை வேண்டும்...

*உங்களை அழைக்கவில்லை என்பதற்காக இதைச் சொல்கிறீர்களா?*

இல்லை... கோவில்களின் புனிதம் காக்கப்பட வேண்டும். சகோதர மதங்களில் இது போன்று கண்ணியம் தவறுகின்ற, புனிதம் தவறுகின்ற நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றதா? நான் வாசிக்கச் செல்லும் பல மேடைகளில் என்னுடைய ஆதங்கத்தை கச்சேரியின் ஆரம்பத்திலேயே சொல்லிவிடுவேன்... அதற்காகவே பல வாய்ப்புகள் நழுவிப் போனதும் உண்டு...



*உங்களைப் போன்ற வளர்ந்த கலைஞர்கள் ஊதியம் அதிகம் கேட்பதால் "லைட் மியூசிக்" போன்ற நிகழ்ச்சிகளுக்கு அனுமதி கொடுத்திருக்கலாம் இல்லையா...?*

ஊதியமில்லாமல் நான் வாசிக்கிறேன்... போக்குவரத்துச் செலவும், அந்த கோவில் நிர்வாகத்தால் என்ன தரமுடியுமோ, அதை தரச் சொல்லுங்கள்... நான் மட்டுமல்ல, என்னுடைய சக நண்பர்களிடமும் பேசி கச்சேரி செய்யச் சொல்கிறேன். ஆனால் கோவில் நிர்வாகம் எந்த உபயதாரரிடமும் இந்த நிகழ்ச்சிக்காக நன்கொடை என்ற பெயரில் ஒரு பைசா கூட வாங்கக் கூடாது... அப்படி நடந்தால் நான் வாசிக்கத் தயார்...

*இன்றைய இளம் கலைஞர்கள் எப்படியிருக்கிறார்கள். உங்களின் அறிவுரை என்ன?*

இளைய தலைமுறையினர் இப்போது நான் சொல்லிக் கேட்கும் நிலையில் இல்லை... அனுபவமுள்ள நாங்கள் சொன்னால் 'இவர்களுக்கு என்ன தெரியும்' என்று சொல்கிற அளவிற்கு அவர்கள் வளர்ந்து விட்டார்கள். தொழிலில் ஆர்வம் காட்டுவதில்லை. நன்றாகப் பேசுகிறார்கள். அதில் தான் ஆர்வம் காட்டுகிறார்கள். கலையைப்பற்றி நன்றாக பேசுகிறார்கள். கலையை யாரும் கலையாகப் பார்ப்பதில்லை. தொழிலாகப் பார்க்கிறார்கள். நாங்களும் இப்போது தொழிலாகத்தான் பார்க்கிறோம்... கலையாக முதலில் பார்த்துவிட்டு, ஒரு காலகட்டம் வரை இந்தக் கலையில் சிறப்பாக வளரனும்னு... கலையில் மூழ்கி வளர்ந்த பின்தான், தொழிலாகப் பார்த்தோம். இப்போதுள்ள தலைமுறை நேரடியாக தொழிலாகப் பார்க்கின்றனர்.

''வீட்டுல ரெய்டு நடந்ததுக்கப்புறம் தலைவருக்கும் அவர் மனைவிக்கும் சண்டை வந்துடுச்சா, ஏன்?''

''தன்கிட்டே நாலூறு பட்டுப்புடைவைகள் தான் இருக்குனு தலைவரை நம்ப வெச்சிருந்தாங்களாம் அவர் மனைவி. ரெய்டுக்கப்புறம் 2125 பட்டுப் புடைவைங்க இருக்கிறது வெட்ட வெளிச்சமாயிடுச்சு.''

— அதிரை யூசுப்

*பாரம்பரியமிக்க கலைகள் இன்று குறைந்து வருவதாகச் சொல்லும் நீங்கள்... அதைக் காப்பாற்ற என்ன செய்யப் போகிறீர்கள்?*

நான் தனி மனிதன். என்னால் என்ன செய்து விட முடியும்? முதலமைச்சர் போன்ற பெரியவர்களிடம் அணுகி சொல்வது மட்டுமே முடியும்... கோவில்களில் நடைபெறும் தவறான நிகழ்ச்சிகளை விட்டுவிட வேண்டும்... புனிதமில்லாத நிகழ்ச்சிகள் தவிர்க்கப்பட வேண்டும். புதுமையான நிகழ்ச்சிகள் வைக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை, சொல்லக் கூடாது... தெய்வீகத்தைச் செய்யட்டும். அப்படிச் செய்தால் கூட்டம் வராது என்று சொன்னால் நிகழ்ச்சியே வேண்டாமே!

பேட்டி, படம்:
**கி. சிங்காரவடிவேல்**

# புலி வால்களும் எலித் தலைகளும்

அவன் ரயில் நிலையத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தான். அங்கிருக்கிற பிளாட் பாரக் கடைகளில்தான் வாரப் பத்திரிகைகள் யாவும் முதலில் விற்பனைக்கு வரும்.

வேறு கடைகளில் புத்தகம் வாங்கி ரொம்ப நாளாகிறது. கிட்டத்தட்ட ஒரு வருடமாய் வாராவாரம் செவ்வாய்க் கிழமையானால் சைக்கிளை விரட்டிக் கொண்டு ரயில்வே ஸ்டேஷன் வருவதும், புத்தகம் வாங்கின முப்பதாவது விநாடியில் ஏமாற்றத்தோடு திரும்புவதும் வழக்கமாகிவிட்டது.

ரயில் நிலைய வாசலை மறைப்பதுபோல் ஒரு டவுன் பஸ் குறுக்கே திரும்பி நின்றிருந்தது. அவன் சைக்கிளிலிருந்து இறங்கி ஓரமாய் நிறுத்திப் பூட்டிவிட்டு, உள்ளே நடந்தான்.

பத்திரிகைக் கடையைச் சுற்றி கூட்டம். அவன் அனிச்சை செயல்போல முன்னே பரப்பியிருந்த வார இதழ்களில் மூன்றாம் வரிசையில் இரண்டாவது புத்தகத்தை எடுத்துக் கொண்டான். சரியாக எண்ணி வைத்திருந்த சில்லறையைக் கொடுத்துவிட்டு, அங்கிருந்து விலகி வந்து பரபரவென்று முதல் பக்கத்திலிருந்து புரட்ட ஆரம்பித்தான்.

வண்ணவண்ணமாய்ப் பளபளத்த படங்களும், செய்திகளும் அவன் கண்ணைக் கவர முயன்றன. அவன் ஒரு யோகியைப் போல அவற்றையெல்லாம் பிடிவாதமாய் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு, அடுத்த பக்கம், அடுத்த பக்கம் என்று போய்க் கொண்டே இருந்தான்.

ஒவ்வொரு பக்கத்திலும் அவன் பார்வை மேலும், கீழும் அலை பாய்ந்தது.

கடைசிப் பக்கத்தில் ஒரு குட்டி நடிகை பேட்டியும், சூரிய காந்தியெண்ணெய் விளம்பரமும் இருந்தது. அந்தப் பக்கத்திலிருந்து பார்வையைத் திருப்புவதற்கு மட்டும் அவனுக்குப் பல விநாடிகள் ஆனது. வெளிச்சத்துக்குக் கூசுகிறவன்போல் பாதி திறந்த கண்களோடு நிமிர்ந்து எதிரில் யாருமில்லாத வெறுமையைப் பார்க்கையில், அவன் முகம் பரிதாபமாய் இருந்தது. யாரிடமாவது மனம் விட்டு அழவேண்டுமென்று எதிர்பார்ப்பவன் போல தவிப்போடு இருபுறமும்



பார்த்தான். சுற்றிலும் அறிமுகமில்லாத கூட்டம் அவரவர் வேலையில். பிறகு தன் பலத்தையெல்லாம் இடது கையில் திரட்டி அந்தப் புத்தகத்தை தண்டவாளங்களின் பக்கமாக வீசினான். ரயில் நிலையத்தின் அதிசய அமைதியைக் கலைத்துக் கொண்டு அது மல்லாக்கக் கீழே விழுந்து, காற்றில் படபடவென்று பக்கங்களைப் புரட்டி அலறியது. பெட்டியும், கையுமாய் அங்கிருந்த சிலர் அவனை விநோதமாய்த் திரும்பிப் பார்த்தார்கள்.

அவன் யாரையும் கவனிக்காமல் ஏறிய படிகளில் இறங்க ஆரம்பித்தான். இந்த மாதிரி நேரத்தில் ரூமைவிட பாதுகாப்பான, நிம்மதியான வேறு இடம் இல்லை. ரூமுக்குப் போய்விட வேண்டும், எல்லாக் கதவுகளையும், ஜன்னல்களையும் அறைந்து சாத்திவிட்டு அழ வேண்டும்.

ஆனால், அறைக்குத் திரும்பி வந்தபிறகு ஏனோ அவனுக்கு அழுகையே வரவில்லை. அந்தப் புத்தகத்தை வீசி எறிந்திருக்க வேண்டாம் என்றுகூடத் தோன்றியது.

கட்டிலிலிருந்து எழுந்து, அலமாரியைத் திறந்து, அழகாய் அடுக்கியிருந்த புத்தகங்களுக்கு நடுவிலிருந்த அந்த ரோஜா வண்ண ஃபைலை எடுத்தான் அவன். ஒரு பொக்கிஷப் பெட்டியைத் திறக்கிற கவனத்தோடு அதைப் பிரித்து, முதல் பக்கத்திலிருந்த நீல நிற எழுத்துக்களை ஆசையோடு மெல்லமாய் வருடினான். அந்த எழுத்துக்கள் திடீரென்று உயிர்பெற்று எழுந்து வந்து தன்னோடு பேசாதா என்று ஆசையாய் இருந்தது அவனுக்கு. அவன் வேறு யாரிடம் சொல்வான் தன் கவலைகளை? யார் அவனைப் புரிந்து கொள்வார்கள்? ஆற்றாமையில் கவிழ்ந்து சுருண்டு படுத்துக் கொண்டான்.

கண்மூடிய இருட்டில் திரைப்படம் போல் எல்லாம் காட்சிகளாய் ஓடியது. பள்ளி நாட்கள், உள்ளூர் நூலகத்தை அறிமுகப்படுத்தி, தினமும் பத்துப் பக்கமாவது படிக்கச் சொல்லி ஊக்குவித்த அப்பா, ஜெயகாந்தன் புத்தகம் பரிசாய்த் தந்து, ஒரு நாள் தவறாமல் தெருக்கோடி ஆலமரத்தடியில் பொதுவுடைமைக் கோட்பாடுகளை அன்றாட நிகழ்வுகளோடு கலந்து அலசி, எளிமையாய், தோலுரித்து வாழைப்பழம் போல சாப்பிட, ஜீரணிக்கச் சுகமாய் விளக்கிச் சொல்லி, ஞானத்தையும், எண்ணங்களையும் விசாலம் செய்த மனோகர் அண்ணன் (தன்னைத் 'தோழர்' என்றுதான் கூப்பிட வேண்டும் என்று கட்டாயப்படுத்துவார்!), முதன் முதலாய்க் கதை எழுதினபோது அதைப் படித்துவிட்டு கட்டிக் கொண்ட தமிழாசிரியர், நண்பர்களோடு சேர்ந்து நடத்திய கையெழுத்துப் பத்திரிகை - இன்னும் பல நினைவுகள் ஒழுங்கில்லாமல் வந்து போயின.

அந்த நாட்கள் மீண்டும் வந்து சேராதா என்கிற



**என்.சொக்கன்**

ஏக்கம் பகுத்தறிவையும் மீறி அவனுள் புகுந்தது. வேலையின்றி, சுமைகளின்றி சுற்றித் திரிகிற இளமைப் பருவத்தோடு, நல்ல இலக்கிய ஆர்வமும் கலந்து கொண்டு, ஆனந்தத் தாண்டவமாடிய நாட்கள் அவை. அவன் அலைவரிசையிலேயே சிந்திக்கிற நண்பர்கள் இருந்தார்கள். சொல்லித் தருவதற்கு இயற்கை முதலான பல குருதேவர்கள் இருந்தார்கள், ஆழ்ந்து கற்றுக் கொள்ள நேரம் இருந்தது. கற்றதையும், சிந்தித்ததையும் படைப்புகளாய்ப் பயிற்சி செய்து பார்த்தால், அவற்றை வாசிக்கவும், விவாதிக்கவும், சண்டை போடவும், அற்புதமான திருத்தங்கள், யோசனைகள் சொல்லவும், அக்கறையும் ஆராதிப்பும் கலந்த நண்பர்கள் வாசகர்களாய் இருந்தார்கள். கதை, கவிதை, நாடகம், மொழி பெயர்ப்பு, கட்டுரைக் கவித்துறை, புதிர், புத்தக விமர்சனம் என்று எதுவானாலும், தயக்கங்கள் இல்லாமல் எழுதுகிற தைரியமான மனது இருந்தது, எழுதியதைப் பிரசுரிக்க வானமும், பூமியுமே எல்லைகளாய்க் கொண்ட (சொந்தப்) பத்திரிகை இருந்தது!

அந்த நாட்களையும், நண்பர்களையும், குடிசைத் தொழில் போல எல்லோரும் சேர்ந்து நடத்தின தனிச்சுற்றுப் பத்திரிகையையும் நினைக்கும்போதெல்லாம் அவனுக்குள் எழுகிற சந்தோஷப் பெருமிதம் இப்போதும் உண்டானது. கையெழுத்துப் பத்திரிகைதான் - நீ கதை எழுது, நான் கவிதை எழுதுகிறேன், அவன் படம் வரையட்டும், பிறகு எல்லாவற்றையும் நீயும், நானும், அவனும் சேர்ந்து படித்துச் சந்தோஷப்பட்டுக் கொள்வோம் என்கிற குழந்தை விளையாட்டுதான்.

காக்கைப் பொன்குஞ்சாய்ப் பராமரித்து, லைப்ரரியில் அதிசயமாய் யாராவது பார்த்து விட்டுச் சொல்கிற பாராட்டுகளில் உயிர் பிழைத்திருந்த அவர்களின் கையெழுத்துப் பத்திரிகை இருந்தவரைக்கும் அவன் எழுதத் தயங்கியதில்லை. சரசரவென்று மனத்தில் பட்டதை எழுதிக் கொடுத்துவிடுவான். வார்த்தைக்கட்டு, இலக்கணம், இலக்கியம் எதைப் பற்றியும் கவலைப்படாமல் உணர்ச்சி நிஜமாய் வந்து விழுந்த நேர்மைக் கங்குகள் அவை!

அதற்காக அவன் கதைகள் எதையும் மோசம் என்று சொல்லிவிடுவதற்கில்லை, 'பிரமாதமா எழுதறேப்பா! இந்த வயசில இத்தனை முதிர்ச்சியா?' என்று பழனிச்சாமி வாத்தியார் அவனுடைய ஒவ்வொரு கதைக்கும் உச்சிமுகந்து பெருமிதம் கொள்வார். இவ்வளவு ஏன், கோவையில் ஒரு கல்லூரி விழாவுக்கு வந்திருந்த பிரபல எழுத்தாளரும் பத்திரிகையாளருமான சிவசுப்ரமணியன் அவன் கதைகளை மேடையிலேயே பாராட்டிப் பேசி, முதல் பரிசு வழங்கி தோளோடு சேர்த்து அணைத்துக் கொண்டார்.

கூட்ட முடிவில் சில நிமிடங்கள் அவருடன் பேச முடிந்தது, 'உங்க கதை படிச்சேன், ப்ரில்லியன்ட் தீம், நடையும் ரொம்பப் பிரமாதம், இந்தக் கதையை ஒரு மணி நேரத்துக்குள்ள யோசிச்சு, இத்தனை அழகா எழுதியிருக்கீங்கன்னா மிகப் பெரிய விஷயம், நீங்க ஏன் 'ரேவதி'க்கு எழுதக் கூடாது?' என்று விஸிட்டிங் கார்ட் எடுத்துக் கொடுத்தார். 'ரேவதி' அவருடைய பத்திரிகை, லட்சக் கணக்கில் வந்த வேகத்தில் விற்றுத் தீர்கிற தமிழகத்தின் வாராந்திர மூச்சு.

விடைபெற்றுப் போகும்போது மீண்டும் ஒருமுறை ஞாபகப்படுத்தினார், 'பத்திரிகை அட்ரசுக்குக் கதை அனுப்ப வேண்டாம், ஆயிரத்தோட ஆயிரத்தொண்ணா இடப்பில போட்டுடுவாங்க, நேரா என்னோட அட்ரசுக்கே எழுதுங்க, வீட்டுக்கு எழுதினாலும் நோ ப்ராப்ளம்' என்று தட்டிக் கொடுத்தார்.

அவரது வாயால் பெற்ற பிரம்மரிஷி பட்டத்தின் மயக்கத்தாலும், பத்து பேர் மட்டும் படித்துக் கொண்டிருந்த அவன்

---

"புதிய ஆளுங்கட்சி வட்டச் செயலாளர் பயங்கர சுறுசுறுப்புன்னு சொல்லிக் கிறாங்களே, நிஜமாவா?

"சுறுசுறுப்பு இல்லாமலா பதவி கிடைச்ச ஒரே மாதத்தில் நாலு பங்களாவும், மூணு காரும் சம்பாதிச்சாரு?"

- உ. ராஜாஜி



கதைகளை லட்சம்பேர் படிக்கப் போகிறார்களா என்கிற உத்வேகத்தாலுமே அவன் கதைகள் எழுதினான், ஒவ்வொன்றாய் அவர் வீட்டு முகவரிக்கு அனுப்பி வைத்தான். பத்திரிகைகள் வாங்குகிற பழக்கமே இல்லாதவன், ஒவ்வொரு வாரமும் ரயில்வே ஸ்டேஷன் சென்று புதுக்கருக் கழியாமல் 'ரேவதி' வாங்கிப் படித்தான்.

படித்தான் என்பது சரியில்லை, 'பார்த்தான்' என்றுதான் சொல்ல வேண்டும். அவன் கதை வந்திருக்கிறதா என்று பார்த்தான், அவ்வளவே. வரவில்லை என்றதும் அந்த வண்ணமயமான புத்தகத்தின் பக்கங்கள் திடீரென சோபையிழந்து போயின அவனுக்கு. அந்த விநாடியிலிருந்து அடுத்த செவ்வாய்க்காக தவமிருக்க ஆரம்பித்தான்.

அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் பழகியிருந்த கல்லூரி நண்பர்களிடம் அவன் கதை ரேவதியில் வரப் போவதைச் சொல்லியிருந்தான். அவர்களும் மெல்ல மெல்ல அவனை நம்பாமல் பார்க்க, விலக ஆரம்பித்தார்கள். போன முறை ஊருக்குப் போன போது மனோகர் அண்ணன் கூட கேட்டு விட்டார், 'பெரிய பத்திரிகையில் கதை வருதுன்னு சும்மா அளந்துவிட்டீங்களா? ஏன் தோழரே, உங்களுக்கு இந்த ஆடம்பரப் பகட்டு?'

'ரேவதி' ஆபீசுக்கு எப்போது ஃபோன் செய்தாலும், 'பத்து நாள் கழிச்சுப் பண்ணுங்க சார்' என்றார்கள், அல்லது, 'நாங்களே லெட்டர் போடறோம் சார்' என்று தட்டிக் கழித்தார்கள். விசிட்டிங் கார்ட் கொடுத்து, எழுத அழைத்த பத்திரிகாசிரியரை ஃபோனில் பிடிக்கவே முடியவில்லை. ஒரே ஒரு முறை கெஞ்சிக் கேட்டபின் கனெக்ட் செய்தார்கள். அவனை அடையாளம் கண்டு கொண்டவர் போல, 'உங்க கதைகள் ஒவ்வொண்ணும் அபாரமா இருக்கு சார், இன்னும் எழுதுங்க' என்றார் அவர். அவன் தயங்கித் தயங்கி, 'பதினாலு கதை அனுப்பியிருக்கேன் சார்' என்றான்.

"வெரிகுட், வெரிகுட்"

"அதெல்லாம் எப்போ பப்ளிஷ் ஆகும்?" அவன் கேட்டு முடிப்பதற்குள் அவர் குறுக்கிட்டு, "சீக்கிரமே வந்துடும், கவலைப்படாதீங்க, நெக்ஸ்ட் இஷ்யூலயே உங்க கதை ஒண்ணு வருது" என்றார். அவன் சந்தோஷத்தில் திணறி நன்றி சொல்வதற்குள் இணைப்பு போய் விட்டது. இன்னொரு எஸ்.டி.டி. செய்ய அவனிடம் காசு இருக்கவில்லை.



"எங்கம்மாவுக்கு காப்பி தரும்போது மட்டும் சர்க்கரை போட மறந்துடறியே, நியாயமா விமலா?"

"என்னங்க பண்றது? எனக்குத்தான் செலக்டிவ் அம்னீஷியா ஆச்சே!"

- உ. ராஜாஜி

---

அந்த வாரம் ரேவதி பார்சல் வரும் முன் அவன் ஸ்டேஷனில் இருந்தான், முதல் பிரதியை அவதி அவதியாய்ப் பிடுங்கிக் கொண்டு ஒரு பக்கம் விடாமல் புரட்டிப் பார்த்தான. ம்ஹூம்!

அடுத்த இதழ், அதற்கடுத்த இதழ் எதிலும் அவன் கதை வரவில்லை. வேறு ஏதேதோ வந்தது. பிரபலமானவர்கள் எழுதினார்கள், புதியவர்கள் எழுதினார்கள், இரண்டுக்கும் இடைப்பட்டவர்கள் எழுதினார்கள், அவன் கதை மட்டும் காணவில்லை.

மெல்ல மெல்ல அவன் கதை அனுப்புவதை நிறுத்தினான், எழுதுவதை நிறுத்தினான், படிப்பதைக்கூட நிறுத்திவிட்டான். ஆனால் வாராவாரம் செவ்வாய்க்கிழமை சைக்கிள் பயணமும், ரேவதிக்கான செலவும் மட்டும் இன்னும் தொடர்கிறது.

போனவாரத்தில் ஒரு நாள் மெஸ்ஸில் அவனுடைய அழகிய முத்துமுத்தான கையெழுத்தில் ஒரு நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்தது, 'நம் கல்லூரி சார்பாக தமிழில் ஒரு கையெழுத்துப் பத்திரிகை தொடங்க விரும்புகிறேன், ஆர்வம் இருக்கிறவர்கள் அறை எண் 84ஐத் தொடர்பு கொள்ளலாம்'

தமிழமுகன், சிவநேசன், பிரபு போன்றோரில் பாதி கிடைத்தாலும், அவன் மீண்டும் அவனாகி விடுவான்.

ஆனால், அப்போதும் அவன் செவ்வாய்க் கிழமைகளில் ரயில் நிலையம் போவான்.

# சிவகாமியின் சபதம்

## ஐம்பதாம் அத்தியாயம்

## சிவகாமியின் சபதம்

உட்கார்ந்திருந்த சிவகாமி, சட்டென்று எழுந்து நின்றாள். அவளுடைய உதடுகள் துடித்தன; புருவங்கள் மேலேறின. கண்களிலிருந்து மின்னல் கிளம்பிப் புத்த பிக்ஷுவைத் தாக்கின.

"கள்ள பிக்ஷுவே! எதற்காக என்னிடம் மன்னிப்புக் கேட்கிறீர்? எனக்கு என்ன அபசாரம் செய்தீர்?" என்ற சொற்கள் சீறிக் கொண்டு பாயும் அம்புகளைப் போலச் சிவகாமியின் வாயிலிருந்து புறப்பட்டன.

பிக்ஷு திகைத்துப் போனார். தவறாக எதையோ சொல்லி விட்டோம் என்ற உணர்ச்சியினால் ஏற்பட்ட தடுமாற்றத்துடன், "ஆம், சிவகாமி! நான் உனக்குப் பெருந் தீங்குதான் செய்து விட்டேன். எல்லாம் விவரமாகச் சொல்ல வேண்டும். அவசரமாக இரண்டொரு வார்த்தையில் சொல்லக்கூடிய விஷயம் அல்ல. தயவு செய்து சற்றுச் சாவதானமாக உட்கார்ந்து கேள்!" என்றார்.

"ஐயா! விவரமாக எல்லாம் சொல்லுவதற்கு முன்னால் ஒரு விவரம் சொல்லும். நீர் யார்? கருணாமூர்த்தியான கௌதம புத்தரின் சங்கத்தைச் சேர்ந்து சர்வ பரித்யாகம் செய்த துறவியா? அல்லது வஞ்சக நோக்கத்துடன் காவித்துணி வேஷம் தரித்த சளுக்க குலத்துச் சக்கரவர்த்தியா? சிற்ப சித்திரக் கலைகளிலும் பரதநாட்டியக் கலையிலும் உண்மை அபிமானங் கொண்ட பரதேசியா? அல்லது ஓர் ஏழைச் சிற்பி மகளைக் கெடுப்பதற்காகப் பிக்ஷு வேஷம் பூண்ட இராவண சந்நியாசியா? நீர் யார்? நாக நந்தியா? புலிகேசியா?"

இவ்விதம் கேட்டுச் சிவகாமி நிறுத்தியபோது, வானமுகட்டில் ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலை வரையில்

**அமரர் கல்கி**

அதிர்ந்து நடுங்கும்படியாக மின்னல் மின்னி இடி இடித்து ஓய்ந்தது போலிருந்தது.

இவ்வளவு இடி மின்னல்களும் நாக நந்தியின் முகபாவத்தில் எவ்வித மாறுதலையும் உண்டு பண்ணவில்லை. அவர் அதிசயமான அமைதியுடன், "அம்மா சிவகாமி! உன்னுடைய சந்தேகங்களுக்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. ஆனால், உண்மையிலேயே நான் உலகப் பற்றறுத்த புத்த பிக்ஷுதான். உன்னுடைய பரத நாட்டியக்கலைக்கு என் உள்ளத்தைப் பறி கொடுத்தவன்தான். விலங்கு இனத்தைச் சேர்ந்த மக்களின் முன்னால் தெருவீதிகளில் உன்னை நடனமாடச் செய்த நிர் மூடப் புலிகேசி நான் அல்ல. பூர்வஜென்மத்தில் செய்த பாவத்தினால் அவனோடு உடன் பிறந்த துரதிருஷ்டசாலி நான். முன்னொரு சமயம், இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் என் தம்பி புலிகேசியைக் கொலைகாரனிடமிருந்து காப்பாற்றுவதற்காக அவனுடைய உடையை நான் அணிந்து நடித்தேன். மறுபடியும் இருபத்தைந்து வருஷங்களுக்குப் பின் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அவ்விதம் செய்தேன். ஆம், சிவகாமி காஞ்சிக் கோட்டைக்கு வெளியே காட்டின் நடுவே எனக்கு முன்னால் நீ கைகூப்பி வணங்கி, 'என் தந்தையைக் காப்பாற்றுங்கள்!' என்று வேண்டிக் கொண்டாய். அதை நிறைவேற்றுவதற்காகத் துறவியின் காஷாயத்தைக் களைந்து விட்டுச் சக்கரவர்த்தியின் ஆடைகளை அணிந்து கொண்டேன்...!"

சிவகாமி பரபரப்புடன் பிக்ஷுவின் அருகில் ஓடி வந்தாள். மண்டியிட்டுக் கை கூப்பிய வண்ணம், "சுவாமி! இந்த அபலைப் பெண்ணின் ஆத்திர மொழிகளை மன்னித்து விடுங்கள். என் தந்தையைத் தாங்கள் காப்பாற்றினீர்களா? அவர் உயிரோடிருக்கிறாரா? எங்கேயிருக்கிறார்? எப்படியிருக்கிறார்?" என்று அலறினாள்.

"அம்மா! உன்னுடைய தந்தையின் உயிரைக் காப்பாற்றினேன். உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டேன். கொஞ்சம் அமைதியாக உட்கார்ந்து கேட்டால் விவரங்களும் சொல்கிறேன்" என்றார் பிக்ஷு.

சிவகாமி உட்கார்ந்தாள். புலிகேசியைப் போல் வேஷந் தரித்துச் சென்று, கையும் காலும் வெட்டப்படுவதற்கிருந்த ஆயனரைக் காப்பாற்றியதையும், ஆனால், அவர் தவறி மலை மீதிலிருந்து கீழே விழுந்ததையும், அதனால் கால் முறிந்ததையும், உணர்விழந்த நிலையில் அரண்ய வீட்டுக்குக் கொண்டு போய் அங்கு அவருக்கு உணர்வு வந்த பிறகு விடைபெற்று வந்ததையும், புத்த பிக்ஷு சொல்லி வந்தபோது சிவகாமிக்கு அவரிடம் எல்லையற்ற நன்றி உணர்ச்சி உண்டாயிற்று. தான் அவரைக் குறித்துச் சந்தேகித்ததெல்லாம் எவ்வளவு தவறு என்று அடிக்கடி நினைத்துப் பச்சாத்தாபப்பட்டாள். நீர் ததும்பிய கண்களினால் பிக்ஷுவைப் பார்த்துச் சொன்னாள்: "சுவாமி! என் அருமைத் தந்தையைக் கொடிய தண்டனையிலிருந்து மீட்டு அவருடைய உயிரையும் காப்பாற்றிய தங்களுக்கு என் ஆயுள் உள்ள வரையில் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். அப்படியிருக்கும்போது தாங்கள் இங்கு வந்ததும் என்னிடம் மன்னிப்புக் கேட்டீர்களே, அது ஏன்? தங்களை அநியாயமாகச் சந்தேகித்ததற்காக நான் அல்லவா தங்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்! சளுக்க சக்கரவர்த்தியும் தாங்களும் ஒருவரேதான் என்று தவறாக எண்ணியதனால், தங்களைப் பற்றி அநியாயமாகச் சந்தேகப்பட்டேன். என்னை இந்த வாதாபிக்கு அழைத்து வந்தவரும் நாற்சந்தியில் நடனமாடச் செய்தவரும் தாங்கள்தான் என்று எண்ணிக் கோபம் கொண்டிருந்தேன். சுவாமி! என்னை மன்னித்து விடுங்கள்!" என்று சிவகாமி கூறியபோது, அவளுடைய கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது.

"சிவகாமி! நான் உன்னை மன்னிக்க

வேண்டிய அவசியமில்லை. உண்மையிலேயே நீதான் என்னை மன்னிக்க வேண்டும். உனக்கு நான் பெரிய துரோகம் செய்திருக்கிறேன். இன்று இந்தத் தூர தேசத்தில் நீ தன்னந்தனியாகச் சிறைப்பட்டிருப்பதற்குக் காரணம் நான்தான்! என்னை மன்னித்து விடு!''

இவ்விதம் புத்த பிக்ஷு உணர்ச்சியினால் கம்மிய குரலில் கூறியபோது, சிவகாமி தன் கண்களில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நாகநந்தியின் முகத்தை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

''ஆம், சிவகாமி! நான் சொல்வது சத்தியம், வாதாபி சைனியம் காஞ்சியின் மீது படையெடுத்து வருவதற்கே காரணமாயிருந்தவன் நான்தான். என் சகோதரன் புலிகேசிக்கு முதலில் அந்த உத்தேசம் இருக்கவில்லை. வாதாபிச் சைனியம் முழுவதும் வேங்கியை நோக்கிப் போவதாயிருந்தது. வாதாபிச் சைனியத்தை இரண்டாகப்



பிரித்துப் புலிகேசியைக் காஞ்சிக்கு விரைந்து வரும்படி கூறியவன் நான் தான். வேங்கி ராஜ்யத்தின் மீது படையெடுக்கத் தம்பி விஷ்ணுவர்த்தனனை அனுப்பினால் போதும் என்றும் எழுதினேன்... அதன் பலன் என்ன விபரீதமாயிற்று, தெரியுமா? விஷ்ணுவர்த்தனனுடைய பத்தினி இன்று விதவையாகியிருக்கிறாள். அவளையும், அவளுடைய சின்னஞ்சிறு புதல்வனையும் இன்றைய தினந்தான், இந்நகரில் பத்திரமாய்க் கொண்டு வந்து சேர்த்தேன்...!"

"சுவாமி! இத்தனை நாளும் இந்த நகரில் தாங்கள் இருக்கவில்லையா?" என்று சிவகாமி கேட்டாள்.

"இல்லை, சிவகாமி! இருந்திருந்தால் உன்னுடைய தெய்வீக நடனக்கலை இப்படி சந்தி சிரிப்பதற்கு விட்டிருப்பேனா? கலை உணர்ச்சியில்லாத நிர்மூடப் புலிகேசி இப்படிச் செய்துவிட்டான்! அவன் இவ்விதம் செய்வான் என்று தெரிந்திருந்தால் வடபெண்ணைக் கரையில் உன்னை அவனிடம் ஒப்படைத்திருக்க மாட்டேன்...!"

பிக்ஷு வடபெண்ணைக் கரையைப் பற்றிக் கூறியதும் அன்றொரு நாள் இரவு, சிவகாமி கண்ட கனவுத் தோற்றம் அவள் நினைவுக்கு வந்தது. "வடபெண்ணைக் கரையில் என்னை விட்டு விட்டுப் போனீர்களா? அது எப்படி? உங்களைக் காஞ்சிக்குப் பக்கத்தில் அல்லவா நான் பார்த்து வரம் கேட்டேன்?" என்றாள்.

"சக்கரவர்த்தி வேஷம் பூண்டு உன் தந்தையைக் காப்பாற்றிய பின் உடனே என் வேஷத்தைக் கலைத்துவிடவில்லை, சிவகாமி! அதே வேஷத்தில் மகேந்திர பல்லவனுடன் போரிட்டேன். மணிமங்கலத்தில் அவனை முறியடித்துவிட்டு உன்னைத் தொடர்ந்து வந்தேன். பொன்முகலி நதிக்கரையில் நீ என்னைப் பார்த்து, சிறைப்பட்ட பல்லவ நாட்டுப் பெண்களையெல்லாம் விடுதலை செய்ய வேண்டும் என்று வரங் கேட்டாய். வாதாபிக்கு நீ மனத் திருப்தியுடன் வருவதாய் இருந்தால் அவர்களை விடுதலை செய்வதாகச் சொன்னேன். நீயும் சம்மதித்தாய். அப்போது உன்னையும் நான் விடுதலை செய்து உன் தந்தையிடம் சேர்ப்பித்திருக்கலாம். அப்படி நான் செய்யவில்லை. உன்னை வஞ்சித்து வாதாபிக்குக் கொண்டு வந்தேன்...! ஆனால், நான் இல்லாத சமயத்தில் இந்த மூடன் புலிகேசி இப்படி உன்னை அலங்கோலப்படுத்துவான் என்று மட்டும் நினைக்கவேயில்லை. உன்னிடம் நான் மன்னிப்புக் கேட்டுக் கொண்டது ஏன் என்று தெரிகிறதா சிவகாமி!" என்றார் பிக்ஷு.

"தெரிகிறது, சுவாமி! இதற்கு முன் எனக்குக் குழப்பம் அளித்துக் கொண்டிருந்த இன்னும் பல விஷயங்களும் விளங்குகின்றன. ஆனால் ஒரே ஒரு சந்தேகம் மட்டும் இன்னும் தீரவில்லை, எதற்காக இவ்வளவெல்லாம் நீங்கள் செய்தீர்கள்? எதற்காக இவ்வளவு சூழ்ச்சிகளும் பிரயத்தனங்களும் செய்து, இந்த அபலைப் பெண்ணை இங்கே கொண்டு வந்து சேர்த்தீர்கள்? உலகத்தைத் துறந்த பிக்ஷு விரதம் பூண்ட தங்களுக்கு இந்த ஏழைப் பெண்ணால் என்ன உபயோகம்...? கால் ஒடிந்து ஆதரவற்றுக் கிடக்கும் என் தந்தையிடமிருந்து என்னைப் பிரித்துக் கொண்டு வந்ததில் தாங்கள் என்ன லாபத்தைக் கண்டீர்கள்? என்ன பலனை உத்தேசித்து என்னை இங்கே சிறைப்படுத்தி வைத்திருக்கிறீர்கள்...?"

"சிவகாமி! சொல்கிறேன், கேள்! என் சொற்படி காலமல்லாத காலத்தில் காஞ்சி மேல் படையெடுத்த காரணத்தினால் வாதாபியின் வீரசைனியத்தில் பாதிக்கு மேல் அழிந்து விட்டது. வேங்கியை வென்று சென்று வருஷம் மகுடம் சூடிய விஷ்ணுவர்த்தனன் அந்த வெற்றியை நிலை நாட்டிக் கொள்ள முடியாமல் மாண்டான். இந்த விபரீதங்களுக்கெல்லாம் காரணமானவன் நீதான்! உன்னை முன்னிட்டுத்தான் இதையெல்லாம் நான் செய்தேன். ஏன் என்று சொல்லுகிறேன், கேள்!"

அந்தப் பூர்வ பீடிகையுடன் நாக நந்தி பிக்ஷு தமது கதையைக் கூறத் தொடங்கினார். அஜந்தா குகைகளில் தாம் கழித்த இளம் பிராய வாழ்க்கையைப் பற்றிக் கூறினார். அஜந்தா குகைச்சுவரில் தாம் பார்த்த பரதநாட்டியப் பெண் சித்திரத்தைக் குறித்தும், அதைப் பற்றித் தாம் கண்ட மனோராஜ்யக் கனவுகளைக் குறித்தும் சொன்னார். தென்னாட்டின் நிலைமை எப்படியிருக்கிறதென்று அறிந்து கொள்ளத் தாம் யாத்திரை வந்தது பற்றியும், அப்போது ஆயனர் வீட்டில் அஜந்தா சித்திர கன்னிகை உயிர் பெற்று வந்து நடனமாடிய காட்சியைக் கண்டு பிரமித்தது பற்றியும் உணர்ச்சி ததும்ப விவரித்தார்.

"சிவகாமி! அன்று முதல் நான் ஒரு புது மனிதன் ஆனேன். சளுக்க சாம்ராஜ்யத்தின் மகோன்னதத்தைப் பற்றி அதுவரை நான் கட்டிக் கொண்டிருந்த ஆகாசக் கோட்டைகள் தகர்ந்து விழுந்தன. இந்தப் பரந்த பரத கண்டம் முழுவதையும் புத்த சங்கத்தின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வர வேண்டும் என்றும், அப்பேர்ப்பட்ட மகா புத்த சங்கத்துக்கு நான் தலைமைப் பிக்ஷு ஆக வேண்டும் என்றும் நான் கொண்டிருந்த மனோரதங்களும் மறைந்தன. 'சாம்ராஜ்யங்களும் புத்த சங்கங்களும் எப்படியாவது போகட்டும். உன்னை நடனமாடச் சொல்லிப் பார்த்துக் கொண்டே என் வாழ்நாளைக் கழித்து விடுவது' என்று சங்கல்பம் செய்து கொண்டேன். அதற்குப் பிறகு உன்னை எப்படி இந்த வாதாபி நகருக்குக் கொண்டு சேர்ப்பது என்பது ஒன்றே என் மனக்கவலை ஆயிற்று. அதற்காக என்னவெல்லாமோ சூழ்ச்சிகள் செய்தேன். எத்தனையோ உபாயங்களைக் கையாண்டேன்..."

இப்படிப் பிக்ஷு சொல்லி வந்த போது, சிவகாமியின் உள்ளத்தில் ஏற்கெனவே குடி கொண்டிருந்த பெருமித மான கர்வமும் பரிதாப உணர்ச்சியும் சேர்ந்தாற்போல் பொங்கிக் கொண்டு வந்தன. 'ஆகா! இந்த ஏழைச் சிற்பியின் மகள் காரணமாக இரண்டு பெரிய சாம்ராஜ்யங்கள் சண்டை போட நேர்ந்ததல்லவா?' என்ற பெருமித கர்வத்தை அடுத்து, 'ஐயோ! காஞ்சியிலிருந்து வாதாபி வரும்போது நான் பார்த்த அத்தனை கொடுமைகளும் என் காரணமாக ஏற்பட்டனவா?' என்ற பரிதாப உணர்ச்சியும் மேலிட்டு வந்தது.

"சிவகாமி! உன்னுடைய கலையின் மேல் நான் கொண்ட மோகத்தினால் ஒரு பெரிய யுத்தத்தையே உண்டு பண்ணினேன். பயங்காளியும், கோழையுமான அந்த அற்பன் மாமல்லனிடமிருந்து உன்னைக் காப்பாற்ற இவ்வளவு பிரம்மப் பிரயத்தனங்களும் செய்தேன். ஆனால் அவ்வளவும், இப்போது நிஷ்பலனாயின. நான் இல்லாத சமயத்தில் உன்னைத் தெரு வீதிகளின் நாற்சந்தியில் ஆடச் செய்து, உன்னையும் உன் கலையையும் நிர்மூடன் புலிகேசி கேவலப்படுத்திவிட்டான். சிவகாமி என்னை மன்னித்துவிடு. நீ பட்ட அவமானத்திற்கும் நீ அடைந்த துன்பத்திற்கும் பரிகாரம் செய்து விடுகிறேன். உன்னை உன் தந்தை வீட்டில் கொண்டுபோய் விட்டுவிட ஏற்பாடு செய்கிறேன். சக்கரவர்த்தியிடம் போராடி இதற்கு அனுமதியும் பெற்று வந்துவிட்டேன்."

இதைக் கேட்டதும் சிவகாமி நியாயமாகத் துள்ளிக் குதித்துக் குதூகலமடைந்திருக்க வேண்டுமல்லவா? விதி வசத்தினாலோ அல்லது விசித்திரக் கோணல்கள் நிறைந்த பெண் மனோபாவத்தினாலோ, சிவகாமி அவ்விதம் மகிழ்ச்சியடையவில்லை. மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

"சிவகாமி! ஏன் பேசாமலிருக்கிறாய்? எப்போது புறப்படலாம், சொல்! உன்னைப் பல்லக்கில் ஏற்றித் தக்க பாதுகாப்புடன் அனுப்பி வைக்கிறேன். உனக்குப் பணிவிடை புரியப் பணிப்

பெண்களையும் உன்னைப் பாதுகாப்பதற்கு வீரர்களையும் அனுப்பி வைக்கிறேன். பொன்முகலி ஆறு வரையில் உன்னைக் கொண்டு போய் விட்டு விட்டு அவர்கள் திரும்புவார்கள்...'' என்று புத்த பிக்ஷு



## அருள்வாக்கு!

தேவை என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு விட்டோமானால், அப்புறம் அதைப் பூர்த்தி செய்து கொள்ளும் ஓயாத பிரயாசை ஏற்படத்தான் செய்கிறது. இது திருப்திக்கும் சாந்திக்கும் பங்கம்தான். போதுமென்ற மனமே பொன்னான திருப்தியைத் தருவது. சமீப காலம் வரை படாடோப (luxury) வஸ்துக்களாக இருந்த ரேடியோ ஃபோன் மாதிரியானவற்றைக்கூட இப்போது அவசியமாக்கிக் கொண்டு (necessaries), இவை கிடைக்கவில்லையே என்று தாபப்படுவதும், அதிருப்திப்படுவதுமாக இருக்கிறார்கள். தேவையை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகப்படுத்திக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு சாந்தி குறையும். சௌக்கியம் குறையும், நிம்மதியும் திருப்தியும் குறையும். தரித்திரம், துக்கம் உண்டாகும். Standard of living என்பதை 'வாழ்க்கைத் தரம்' என்று மொழி பெயர்ப்பதே சரியல்ல. 'வாழ்க்கைத் தரம்' என்பது மிகவும் உயர்ந்த விஷயம். நல்ல குணங்களுடன், ஈசுவர பக்தியுடன் வாழ்கிற வாழ்வே 'தரமான' வாழ்வு. வாழ்க்கைத் தரத்தை Quality of life என்று சொல்ல வேண்டும். தற்போது பொருளாதாரத் தேவைகளை அதிகமாக்கிக் கொண்டே போவதைத்தான் 'வாழ்க்கைத் தரம்' என்கிறார்கள். இதைவிட மனசினால் உயர்ந்து, வாஸ்தவமாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதைத்தான் பெரிதாக எண்ண வேண்டும்.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

கூறிவந்தபோது, அதுகாறும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த சிவகாமி சட்டென்று எழுந்து நின்று, ஆவேசம் ததும்பிய குரலில் பின்வரும் பயங்கர மொழிகளைக் கூறினாள்:

''அடிகளே! கேளுங்கள். இந்த வாதாபி நகரத்தை விட்டு நான் எப்போது கிளம்புவேன். தெரியுமா? பயங்கொள்ளி என்று நீங்கள் அவதூறு சொல்லிய வீர மாமல்லர் ஒரு நாள் இந்நகர் மீது படையெடுத்து வருவார். நரிக்கூட்டத்தின் மீது பாயும் சிங்கத்தைப் போலச் சளுக்க சைனியத்தைச் சின்னா பின்னம் செய்வார். நாற்சந்தி மூலைகளில் என்னை நடனம் ஆடச் செய்த பாதகப் புலிகேசியை யமன் உலகத்துக்கு அனுப்புவார். தமிழகத்து ஸ்திரீ புருஷர்களைக் கையைக் கட்டி ஊர்வலம் விட்ட வீதிகளில் இரத்த ஆறு ஓடும். அவர்களை நிறுத்திச் சாட்டையால் அடித்த நாற்சந்திகளிலே வாதாபி மக்களின் பிரேதங்கள் நாதியற்றுக் கிடக்கும். இந்தச் சளுக்கர் தலைநகரின் மாட மாளிகை, கூட கோபுரங்கள் எரிந்து சாம்பலாகும். இந்த நகரம் சுடுகாடாகும். அந்தக் காட்சியை என் கண்ணால் பார்த்துவிட்டுப் பிறகுதான் இந்த ஊரை விட்டுக் கிளம்புவேன். சளுக்கப் பதர்களை வென்று வெற்றி மாலை சூடிய மாமல்லர் என் கரத்தைப் பிடித்து அழைத்துக் கொண்டு போவதற்கு வருவார். அப்போதுதான் புறப்படுவேன். நீர் அனுப்பிப் போக மாட்டேன். பல்லக்கில் ஏற்றி அனுப்பினாலும் போக மாட்டேன். யானை மீது வைத்து அனுப்பினாலும் போக மாட்டேன்!''

இந்தப் பயங்கரமான சபதத்தைக் கேட்ட நாகநந்தியின் முகத்திலே புன்னகை தோன்றியது. தம்முடைய சூழ்ச்சி மீண்டும் பலித்துவிட்டது என்று எண்ணி அந்தப் பொல்லாத பிக்ஷு உள்ளுக்குள் உவகையடைந்தார் போலும்!

(தொடரும்)

# ரவுண்ட்ஸ் பாய்

"சமீப காலத்தில் வந்த அரை சதம் காதல் படங்களை எடுத்துக்குங்க, அந்தப் படங்களில் காதலுக்கு இருந்த எந்தப் பிரச்னையும் இதில் இருக்காது. முறை மாமன், வில்லன் மாதிரி வழக்கமான பஞ்சாயத்துக்கள் இல்லாமல் ஒரு காதல் படம் பண்ணியிருக்கோம். இந்தப் படம் ஜெயித்தால், கொஞ்ச காலத்திற்கு, கோடம்பாக்கத்து காதல் ட்ரெண்ட் இதுதான்" தமது முதல் படமான 'மனசெல்லாம்' குறித்து இப்படிப் பெருமிதம் பேசுபவர் இயக்குனர் சந்தோஷ்.

பார்த்திபன், 'சொல்லாமலே' சசி, எழில் என்று யதார்த்தம் நேசிக்கும் இயக்குனர்களிடம் பாடம் பயின்றிருக்கும் சந்தோஷ், "படத்தில் கடைசி இருபது நிமிடங்களுக்கு வசனமே கிடையாது. காட்சி மொழியிலேயே கதையைச் சொல்லியிருக்கிறோம்" என்கிறார். "சவுக்குக் கட்டையால் நிஜமாக அடிவாங்கி, நிஜமாகவே தீக்கங்குகளில் கைகளைக் கொடுத்து, நடிப்பில் மேலும் ஒரு படி முன்னேறியிருக்கிறார் நாயகன் ஸ்ரீகாந்த்'' என்று பாராட்டுப் பத்திரம் வாசிக்கிறார். படத்தின் தயாரிப்பாளர் ஆஸ்கர் ரவியோ, ''நிறைய இளைஞர்கள் நல்ல திறமையோடு இங்கே வருகிறார்கள். இந்தப் படம் ஜெயித்தால், சந்தோஷ் மாதிரி புதிய இளைஞர்களை வைத்து, வருடத்திற்கு இருபத்தைந்து படம் தயாரித்து ரிலீஸ் பண்ண வேண்டுமென லட்சியம் வைத்திருக்கிறேன்" என்கிறார். அட! கேட்கறதுக்கே 'மனசெல்லாம்' சந்தோஷமா இருக்கே!

'நாலு பாட்டு, நாலு ஃபைட்டு பாணியில் படமெடுத்தால் இனிமேல் ஓடாது. ஜனங்களை தியேட்டருக்குக் கொண்டு வரக்கூடிய படங்களைத்தான் இனி ஒப்புக்கொள்ளப் போகிறேன்' என்றார் 'அரசு' படப்பிடிப்பில் அப்பா, பிள்ளை வேடங்களில் நடித்துக் கொண்டிருக்கும் சரத்குமார்.

'அரசியலில் சாதிக்க வேண்டும் என்றால் சினிமாவில் தொடர்ந்து பிரபலமாக இருக்க வேண்டியிருக்கிறது. எனவே நடிப்பில் இனி அதிக கவனம் செலுத்தப் போகிறேன்' என்கிறார். 'அரசு' படத்தில் தியேட்டருக்கு மக்களை வரவழைக்கும் அயிட்டம் என்னவென்று விசாரித்த வகையில், அழுத்தமான கதைக்கு ஏகப்பட்ட 'கிளு கிளு' சமாசாரங்கள் சப்போர்ட் என்றார்கள். அதாவது சிம்ரன் ஒரு கதாநாயகி என்றால் ஒற்றைப் பாடலுக்கு நடனம் ஆட கிரண்!



அரசு • சரத்குமார்

இரண்டு, மூன்று வருடங்களாகப் படத் தயாரிப்பில் ஈடுபடாமல் இருந்த அன்பாலயா பிரபாகரன், இப்போது பரசுராம் படத்தோடு வந்து உன்னேன்



• 'இன்று முதல்' படத்தில்...

ஐயா சொல்கிறார். அதுவும் அர்ஜுன், கிரண், கவுண்டமணி - முப்பெரும் நட்சத்திரங்களின் அணிவகுப்போடு, ஏ.ஆர். ரஹ்மான் இசையமைக்கிறார். உலக இசைப் பயணம் தொடங்கிய ரஹ்மான் எப்போது ஒத்துக் கொண்டார் என்றால், நட்பின் நிமித்தம் இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒத்துக் கொண்டு, இப்போது ஐந்து பாடல்களைப் போட்டுக் கொடுத்து விட்டாராம். ஓ! ரஹ்மான் இன்னும் சென்னைவாசிதானா?



• பரசுராம் - அர்ஜுன், கிரண்



• ஆதித்யா

கல்லூரி மாணவர்கள் மட்டும் தான், பாக்கெட் மணியோடு தியேட்டருக்கு வருகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு எடுக்கப்படும் படங்களின் வரிசையில், எம்.ஏ. முருகேஷ் இயக்கும் படம் 'இன்று முதல்'. கோலிவுட்டில் இப்படம் குறித்து நல்ல டாக். படிப்புச் செலவுக்குப் பெற்றோரிடம் கேட்காமல், பகுதி நேர வேலை செய்து பணம் சம்பாதித்துப் படிக்கும் இளைஞன், யுவதி பற்றி மெசேஜ், மசாலா கதை என்கிறார் இயக்குனர். பூகம்பத்தால் மண்மேடிட்டுக் கிடக்கும் குஜராத் பூஜ் மாவட்டத்தில் படத்திற்கான பிளாஷ்பேக்கை எடுத்து திரும்பியிருக்கிறது படக்குழு. இந்தப் பகுதிக்காகவே படத்தை மக்கள் வெற்றி பெறச் செய்வார்கள் என்பது எதிர்பார்ப்பு.

# "அரசியல்ல சாதிக்க சினிமாவேணும்!"

ஹீரோ கனவுகளோடு, காய்கறி லாரியிலோ, தர்ம ரயிலிலோ சென்னை வருகிறவர்கள் ஒரு ரகம். அப்பா, அம்மாக்கள் ஏற்கெனவே போட்டு வைத்த ரோட்டில் சுலபமாய் நுழைந்து விடுபவர்கள் இரண்டாவது ரகம் என்றால், டாலர்கள் கொட்டும் சாஃப்ட்வேர் தொழிலைத் தம்பியிடம் ஒப்படைத்துவிட்டு, மலேஷியாவிலிருந்து நடிக்க வந்திருக்கும் 'அன்பு' பட இரண்டாவது நாயகன் ஆதித்யா, இன்னொரு ரகம். முதல் படத்திலேயே பணக்கார மாப்பிள்ளை பாத்திரத்திற்காக பதினைந்து கிலோ எடையை ஏற்றி நடித்தேன், என்று சொல்லும் ஆதித்யா, ஹீரோதான் என்று அடம் பிடிக்காமல் மனத்தில் நிற்கிற எந்த கேரக்டரிலும் நடிக்கத் தயார் என்கிறார். ஆனால் இயக்குனர் யாரென்று பார்த்து தான் ஒப்புக் கொள்வேன் என்று தடாலடியாக ஸ்டேட்மெண்ட் விடுகிறார்.

கீப் இட் அப் ஆ'தில்'யா!



• மனசெல்லாம் - த்ரிஷா, ஸ்ரீகாந்த்

• ஜாகிர்கான்



மும்பை மசாலா

# காணும் காணும் வைத்தார் போல!

'பாம்... பாம்' என்று எழுதினால் கூட யாரும் ஹார்ன் ஒலியாக நினைப்பதில்லை; எங்கே குண்டு வெடித்து விட்டதோ என்று அலறுகிறார்கள். முலுண்டு குண்டு வெடிப்பு அப்படி எல்லோரையும் கலக்கிவிட்டது; சி.எஸ்.டி.யிலிருந்து கர்ஜத்துக்கு புறப்பட்ட ரயிலில், லேடீஸ் முதல் வகுப்புப் பெட்டிக்கு அருகிலிருந்த பெட்டியில் வைக்கப்பட்ட சக்தி வாய்ந்த குண்டு, முலுண்டு ஸ்டேஷனுக்குள் நுழையுமுன் வெடித்து, பன்னிரண்டு நபர்களை (பெரும்பாலானவர் பெண்கள்) பலி கொண்டு, அறுபதுக்கும் மேற்பட்டவர்களை மருத்துவமனையில் அடைத்திருக்கிறது. தன் திருமணத்திற்கென்று அழைப்பிதழ்களை விநியோகிக்கச் சென்ற இளம் பெண்ணிலிருந்து, பத்தாவது பரீட்சை எழுதும் குழந்தைக்காக ஆபீசிலிருந்து அடித்துப் பிடித்துக் கொண்டு ரயிலேறிய அன்னை வரை, கண்ணீர்க் கதைகள் ஏராளம்! தடை செய்யப்பட்ட சிமி (simi) இயக்கம்தான் காரணம் என்கிறார்கள். முன்பே புலனறியாமல் விட்ட காவல்துறையைச் சாடுகின்றார்கள்; திறமைக்கு முன்னுரிமை இல்லாமல், அரசியல்வாதிகளுக்கு அனுசரணையாயிருக்கும் அதிகாரிகள் நியமிக்கப்படுவதை நிந்திக்கிறார்கள். என்ன சொல்லி என்ன? மூன்று மாதங்களில் நான்கு குண்டு வெடிப்புகள் என்பது மும்பையின் பாதுகாப்பற்ற நிலையைத்தான் பறை சாற்றுகிறது! "கைச்சுமைகளை வைப்பதற்கென்று ரயிலில் பக்கவாட்டில் அமைந்திருக்கும் 'லக்கேஜ் ராக்'குகளையே எடுத்துவிட்டால் என்ன? அங்கேதானே குண்டு வைத்தார்கள்?" என்ற புஜ்பாலின் வாதத்திற்கு "சீட்டுக்கு அடியில் கூட வைக்கலாம்; சீட்டுகளையே எடுத்து விடுவீர்களா?" என்ற எதிர்வாதம் கிளம்பியுள்ளது... ம்...போகிற போக்கில் ரயிலையே எடுத்து விட்டால்...?

விட்டால் போதுமென்று எல்லோரும் பிய்த்துக் கொண்டு ஓடுகையில், பிரீத்தி ஜிண்டா தைரியமாக அண்டர் வர்ல்டை எதிர்த்து, பரத்ஷா கேஸில் சாட்சி சொன்னதற்காக அவருக்கு

'கோட் ஃப்ரி ஃபிலிப்ஸாரின் 'ரெட் அண்ட் ஒயிட்' ப்ரேவரி அவார்டு கொடுக்கப்பட இருக்கிறது. ஆனால் வேடிக்கை என்னவென்றால், அவார்டு கொடுப்பவர்களே, எதற்காக பிரீத்திக்கு அவார்டு கொடுக்கிறார்கள் என்பதை தைரியமாக வெளியிட பயப்படுகிறார் கள்... எல்லாம் கிழுலகக் கவலைகள்தாம்! வீரத்துக்கு அவார்டு கொடுப்பவர்கள் கோழைகளாக இருந்தால் எப்படி?

எப்படி மும்பை இப்படி மாறிய தென்று தெரியவேயில்லை; ஹோலியும் அதுவுமாக 'ஹோ' என்று இரைச் சலுடன் சுவரில் தண்ணீர் பலூன்களை பீச்சியடிக்கும் கூட்டம் இந்த வருடம் 'சுப்சாப்'பாக, இருந்த இடம் தெரியாமல் மௌனமாகிவிட்டதே? சொஸைட்டி களுக்குள் சின்ன அளவில் கலகலத்தார் களேயன்றி, வீதிகள் வெறிச்சோடிக் கிடந் தன. 'பந்த்' நடக்கிறதோ என்று சந்தேகப் படுமளவுக்கு, 'அளவான' கொண்டாட் டங்கள். நல்லவேளை, ஹோலியை ஒட்டி குருடானவர்கள் பற்றிய செய்திகள் இம்முறை காதைச் செவிடாக்கவில்லை; குண்டு வெடிப்பை மனத்தில் இருத்தி அதீத பாதுகாப்புகள் வேறு; மொத்தத்தில் சப்தமில்லாத சுத்தமான ஹோலி என்பது மும்பைக்காரர்களுக்கு நனவாகப்பட வில்லை! கனவுதான்!

கனவுக்கன்னிகளை ஈர்க்கவென்றே நனவுக்கன்னி, மும்பை வந்திருந்தார். ஆம்! உ.பி முதல்வர் மாயாவதி, ஷத்ருகன் துணையோடு, மும்பைக்கு வந்து இங்குள்ள படாதிபதிகளை அயல்நாடுகளுக்குச் செல் வதற்குப் பதிலாக அயல் மாநிலத்துக்கு வந்து படமெடுக்கும்படி அழைப்பு விடுத் தார். உ.பி.யின் இயற்கை அழகுகளை வர்ணித்ததுடன், தாம் அளிக்க நினைக்கும் வரி விலக்குகளையும் பட்டியலிட்டு வலை விரித்தார். சிக்குபவர் சிக்கலாம்!

சிக்கலாம்... சிக்காமலும் போக லாம்... ஜாகிர்கானைப் பற்றித்தான் சொல்கிறோம்! கௌஹர்கான் என்றொரு புது மாடல்; 'சிக்' கென்றிருக்கும் இந்தப் பெண்ணை, வழக்கம் போல், ஒரு 'காமன் ஃப்ரெண்ட்' (இங் கிலீஷ் 'காமன்'ங்க!) யுவராஜ்சிங்குக்கு அறிமுகப்படுத்த, யுவராஜ் தம்முட னிருந்த ஜாகிரை அவருக்கு அறிமுகப் படுத்த... 'ஒன்றும் பிறக்கவில்லை' என்று அடித்துச் சொல்கிறார் கௌஹர். சும்மா ஃப்ரெண்ட்தான் என்று சொல்லிவிட்டு, இங்கிருந்து அவருக்கு sms விடாமல் அனுப்பிக் கொண்டிருக்கிறார். தென் ஆப்பிரிக்காவில் நடத்தப்பட்ட ஒரு வாக் கெடுப்பின்படி, 'மோஸ்ட் ஹாண்ட்ஸம் கிரிக்கெட்டர்'களில், டாப் டென்னில் இருக் கும் ஒரே இந்தியர் ஜாகிர்கான்தான் என் பதில் கௌஹர் பூரித்துப் போகிறார். நியூசி லாந்து போட்டியில் 'மேன் ஆஃப் தி மாட்ச்' அவார்டு வாங்கியதில் உச்சி குளிர்ந்திருக் கிறது. ஆனாலும்... ஒன்றுமில்லைதானாம்... ஏதோ காணும் காணும் வைத்தாற்போல் காதலித்து விட்டுப் போகட்டும்!

- ஜெய்ஸ்ரீ ராஜ்



• ப்ரீத்தி ஜிண்டா

ஹைதராபாதில் தென்னிந்திய கலா சாரக் கழகத்தின் நாற்பத்தி மூன்றாவது இசை விழா.

இந்த ஆண்டு கௌரவிக்கப்பட்ட நேத நூரி கிருஷ்ணமூர்த்தி, கச்சேரி ஆரம்பிக்கும் முன்னால், தாம் புதிதாக சுமார் பதினைந்து தியாகராஜர் கிருதிகளைச் சமீபத்தில் கண் டெடுத்ததாகவும், அதில் மூன்றுக்கு மெட் டமைத்து விட்டதால், அந்த மூன்றையும் அன்று பாடப் போவதாகவும் அறிவித்தார்.

தலைமை தாங்க வந்திருந்த ஆந்திர அமைச்சர் விஜயராமராவ், தாம் இன்னொரு விழாவுக்குப் போக வேண்டியிருப்பதால், அதை முடித்துவிட்டு, ஒன்பது மணி அளவில் திரும்ப கச்சேரிக்கு வந்து விடுவ தாகவும், அதன் பிறகே நேதநூரி அந்தப் பாடல்களைப் பாட வேண்டும் என்றும் ஒரு வேண்டுகோள் விடுத்தார். நேத நூரி ஒப்புக் கொண்டார். சொன்னது போலவே அமைச் சர் திரும்ப வந்து சேர்ந்தார். பிறகு தான் அந்தப் புதிய தியாகராஜர் கிருதி களைப் பாடினார் நேதநூரி!

"ஆரம்பித்த 45 வருடங்களில், இரண்டு வருடங்கள் மட்டுமே இசை விழா நடக்க வில்லை" என்கிறார் கழகத்தின் செயலர் சக்ரபாணி. "அப்போது தெலுங்கானா போராட்டம் நடந்து கொண்டிருந்ததுதான் காரணம்!"

ஆளுநர் ஸி.ரங்கராஜன் ஹைதரா பாதில் பதவியில் இருந்தவரை, சௌத் இந்தியன் கல்சுரல் அசோசியேஷன் என்றால் உடனே வந்து விடுவாராம்! ஒரு முறை அவர் மனைவிக்கு அறுவைச் சிகிச்சை சென் னையில் நடந்த போதும், கூடவே இருந்து விட்டு, மறுநாள் ஹைதராபாதில் ஆண்டு விழாவுக்கு மட்டும் வந்து நடத்திக் கொடுத்து விட்டுச் சென்றாராம்! அப்போது விருது பெற்றவர் லால்குடி.

இந்த ஆண்டு என்ன விசேஷம்?

இருக்கிறது. 'கல்கி' சார்பில், ரசிகர்களின் கேள்விகளுக்குச் சுவாரசியமாகப் பதில் அளித்தார்கள் பாம்பே ஜெயஸ்ரீயும், வீணை காயத்ரியும். கச்சேரி முடிந்த போது இரவு 9.30 மணி. ஆனாலும் திர ளான கூட்டம்.



• பாம்பே ஜெயஸ்ரீ



• வீணை காயத்ரி

# ஆனந்த வைபவியாழ் ஆந்திர வைபவியாழ்

"கேள்விகளைக் கேட்க ஆரம் பியுங்கள்!" என்று அறிவித் ததுதான் தாமதம். எழுந்து நின்று கொண்டு ஒவ்வொருவராகக் கேள்விக் கணை களைத் தொடுத்தார்கள்.

பாம்பே ஜெயஸ்ரீக்கு வந்த கேள்விகள் – பதில்கள் இதோ:

● *நீங்கள் உங்கள் குரலை ஏற்றி இறக்கி, மாற்றி மாற்றிப் பாடுகிறீர்களே, நீங்கள் எப்படி வாய்ஸ் கன்ட்ரோல், டைம் கன்ட் ரோல் எல்லாம் செய்கிறீர்கள்?*

எல்லாம் கடவுளின் அருள். அவருடைய தயை. கருணை. நானாக எதுவும் செய் வதில்லை. என் குரலைப் பாராட்டியதில் எனக்கு மகிழ்ச்சி. மிக்க நன்றி.

● வசீகரா மாதிரி சினிமாவில் பாடுகிறீர்கள். சுதா ரகுநாதனுடன் சேர்ந்து வேறு ஒரு திரைப்படத்தில் இளையராஜா இசையில் பாடுகிறீர்கள். கர்நாடக இசைக் கச்சேரியும் செய்து கொண்டு, சினிமாவிலும் எப்படிப் பாட முடிகிறது?

சினிமாவில் நான் அதிகம் பாடல்கள் பாடுவதில்லை. மிகக் குறைச்சலாகவே பாடுகிறேன். அதனால் கர்நாடக சங்கீதக் கச்சேரிகளுக்குத்தான் நான் நிறைய நேரம் ஒதுக்குகிறேன். அதில் எனக்கு நிறையவே மனநிறைவு கிடைக்கிறது.



● ஆனந்த பைரவி ராகத்தை யார் கண்டுபிடித்தார்கள்? அதனுடைய ஜன்ய ராகம் எது? யார் இதில் அதிகக் கீர்த்தனைகள் இயற்றி இருக்கிறார்கள்?

ஆனந்த பைரவியை நட பைரவி என்றும் குறிப்பிட்டு வந்திருக்கிறார்கள். 'பண்'ணிலிருந்துதான் இது



• நடன நிகழ்ச்சி...

வந்திருக்கிறது. சியாமா சாஸ்திரி இதில் நிறைய கீர்த்தனைகள் இயற்றியிருக்கிறார்கள்.

● ஒரு வேளை ஆனந்த பைரவி என்பது ஆந்திர பைரவி என்பதிலிருந்து வந்திருக்குமா?

(இந்தக் கேள்விக்குப் பலத்த சிரிப்பும், கைத்தட்டலும். பாம்பே ஜெயஸ்ரீயும் சிரிப்பில் கலந்து கொண்டார்!)

● ஏன் இப்போதெல்லாம் அசாவேரி ராகப் பாடல்களையும், கல்யாண வசந்தம் ராகப் பாடல்களையும் யாரும் அதிகம் பாடுவதில்லை? அதே போல் ஹரிகாம்போதியையும் யாரும் அதிகம் பாடுவதில்லையே?

இல்லையே, யார் சொன்னது? நான் நிறையக் கச்சேரிகளில் அசாவேரியும், கல்யாண வசந்தமும் பாடிக் கேட்டிருக்கிறேன். அப்படி ஒன்றும் நீங்கள் குறிப்பிடுவது போல் பாடாமலே இருப்பதில்லை. அடிக்கடி பாடுவதில்லையாக இருக்கலாம்.

காம்போதி ஒரு ரக்தி ராகம். அதை அதிகம் கச்சேரிகளில் பாடுவதால், ஹரிகாம்போதியை அதிகம் பாடுவதில்லையோ என்னவோ?

• ஆனந்தா சங்கர் ஜெயந்த்
(படம் : அவினாஷ் பஸ்ரிசா)



• ஜெயஸ்ரீ கச்சேரிக்குப்பின்..

காத்திருந்தார் ஜெ. வைத்தியநாதன். ஆபோகியில் 'சபாபதிக்கு', வராளியில் ராகம் – தானம் – பல்லவியில் வரதா, வர வெங்கடரமணா, வாரணா, பய நிவாரணா என்று தொடங்கி, ஹம்சாநந்தி, வலஜி, பெஹாக் என்று ராகமாலிகையாக அசர வைத்தார். மனதிற்குகந்தது முருகன் ரூபமும், ஹரிதும் ஹரோவும் பாடி, மாண்ட் தில்லானாவில் முத்தாய்ப்பு வைத்தார் ஜெயஸ்ரீ. குரலில் இனிமை மட்டும் கூடவில்லை; அழுத்தமும் கூடியிருந்தது.

வயலினில் ஆர்.கே.ஸ்ரீராம்குமார் பாடகிக்கு வலது கரமாக விளங்கினார். நிழல்போல் தொடர்ந்தார். சஹானாவிலும், சங்கராபரணத்திலும் தமது வழி தனிவழி என்று நிரூபித்தார்.

● *இசையில் உங்களை அதிகம் கவருவது எது, சாகித்தியமா, லயமா?*

என்னைப் பொறுத்தவரை பாவம்தான். அதுதான் நம் கர்நாடக இசையின் முக்கிய அம்சமாகப் பாடுகிறது.

● *உங்கள் இசையை ரசிப்பது போல் என்னால் வேறு யாருடைய இசையையும் ரசிக்க முடியவில்லையே, ஏன்?*

(சிரிப்பு) இதற்கு நான் எப்படி பதில் சொல்ல முடியும்?

● *கர்நாடக சம்பிரதாய இசையில் தொடர்ந்து இருப்பதற்கு, ஆன்மிகச் சிந்தனையும் கூடவே வளர்ந்தாக வேண்டுமா? நீங்கள் எப்படி இதை பிராக்டிஸ் பண்ணுகிறீர்கள்?*

இசையில் லயித்துப் பாடத் தொடங்குகிற அந்தக் கணத்திலிருந்தே ஆன்மிகத்தில்தான் ஒன்றிவிடுகிறோம். அதில் ஆன்மிகம் என்று அப்போது தனியாகப் பிரித்துப் பார்ப்பதில்லை, அவ்வளவு தான். ஆன்மிகம் அந்த இசையோடு கலந்து விடுகிறது!

**பா**ம்பே ஜெயஸ்ரீ மாயா மாளவ கௌளையில் மாயா தீத ஸ்வரூபிணி' என்று தொடங்கி, தர்பாரில் 'முந்து வெநுக' சிம்மாசனம் போட்டு அமர்ந்து, சரண் புகுந்தவரைக் காக்கும் சங்கரனைத் துதித்துத் 'சம்போ மகாதேவ' என்று பணிவுடன் பந்துவராளியில் சஞ்சாரம் செய்தார்.

சஹானா ராக ஆலாபனை ஹைதராபாத் சாலை மாதிரி சுகமாக வளைந்து கொடுக்க, 'ஈ வஸுத நீ வண்டிடி தைவமு'; ஆனந்தபைரவியில் 'ஓ ஜகதம்பா நன்னுவில் குழையக் குழையப் பாடி; சங்கராபரணத்தை விஸ்தாரமாக ஆலாபனை செய்து; 'எந்துகு பெத்தல' பாடி முடித்த போது 'தனி'க்குக்

**வீ**ணை காயத்ரிக்கு ஆந்திரக் கலைஞர் லட்சுமிநாராயண ராஜு மிருதங்கமும், நேமணி சோமராஜுலு கடமும் வாசித்தார்கள். மிருதங்கக்காரர் அடித்த அடியில், நம்மூர் புருஷோத்தமனின் கஞ்சிரா அடங்கி ஒடுங்கிப்போய் இருந்தாலும், 'தனி'யில் புருஷோத்தமன் தன் திறமை என்ன என்று காண்பித்து விட்டார்.

நாடாளுமன்றத்தில் பிரச்னை எழுப்ப சபாநாயகரை நோக்கி எல்லாரும் நின்று சுற்றி வளைத்தது மாதிரி, ரசிகர்கள் நின்று வீணை காயத்ரியிடம் கேள்விகளை வீசினர்:

● *வயலின் போன்ற வாத்தியங்கள் வாசிக்கும் பல இசைக் கலைஞர்கள் வாய்ப்பாட்டுக்கு மாறி வருகிறார்கள். அதில் சக்கைப்போடும் போடுகிறார்கள். நீங்கள் வீணையை விட்டுவிட்டு, பாட ஆரம்பிக்கலாமே?*

என்னால் பாட முடியாது. நீங்கள் சொல்வது புரிகிறது. வாத்தியத்திலிருந்து வாய்ப்பாட்டுக்கு வந்தால் இன்னும் புகழ் கிடைக்கும்தான். ஆனால் என்னைப் பொறுத்தவரை என் வீணையின் மூலமாகவே நான் பாட விரும்புகிறேன்!

● *இந்துஸ்தானி பாடல்களில் கவிதை நயம் மிகுந்திருக்கிற மாதிரி இருக்கிறதே?*

இருக்கலாம். நான் மறுக்கவில்லை. ஆனால் நம் தியாகராஜர், தீட்சிதர், சியாமா சாஸ்திரி கிருதிகளில் நிறையவே கவிதை உணர்வு பளிச்சிடுவதாகத்தான் நான் கருதுகிறேன். சிரத்தையுடன் கவனித்தால் இது உங்களுக்குப் புரியும்.

● *1975 ஜனவரி முதல் தேதியன்று, நீங்கள் சென்னை சாஸ்திரி ஹாலில் இன்று போலவே மோஹனத்தை விஸ்தாரமாக வாசித்து, ராகம் - தானம் - பல்லவி வழங்கினீர்கள். சரிதானா?*

ரொம்பச் சரி! உங்கள் நினைவு ஆற்றலுக்குப் பிடியுங்கள் ஒரு கங்கிராட்ஸ்!

● *வீணை வாசிக்கிறவர்கள் வலது கை விரலில்தானே மெட்டல் கிளிப் போட்டுக் கொள்ளுவார்கள்? நீங்கள் ஏன் இடது கை விரல்களிலும் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?*

இடது கை ஆள் காட்டி விரலில் ஒரு தடவை காயம் ஏற்பட்டு விட்டது. அதனால்தான் இடதுகை விரல்களிலும் கிளிப் போட்டுக் கொண்டிருக்கிறேன். ஆனால் அது எனக்கு சௌகரியமாகத்தான் இருக்கிறது.

● *நீங்கள் ஏன் பக்கவாத்தியமாக வயலின் வைத்துக் கொள்ளவில்லை? பல வீணை வித்துவான்களும், சித்ர வீணை ரவிகிரணும் கூட வயலின் பக்கவாத்தியம் வைத்துக் கொள்ளுகிறார்களே?*

இந்த விஷயத்தில் நான் உங்கள் கருத்தோடு மாறுபடுகிறேன்.

இது மீட்டுகிற (ப்ளக்கிங்) வாத்தியம். வயலின் இழுக்கிற (போயிங்) வகை வாத்தியம். இரண்டும் சேரும்போது, வீணையின் துல்லியமான நாதம் - ஒளாரிடி - கேட்காது. வீணை வாசிக்கிறவருக்கு இடை இடையே ஓய்வு கிடைக்கும் என்பதை வேண்டுமானால் ஒப்புக் கொள்ளுகிறேன். (பலத்த சிரிப்பு)

● *வீணையில் இந்துஸ்தானி இசை வாசிக்க முடியுமா?*

எது வேண்டுமானாலும் வாசிக்க முடியும். வெஸ்டர்ன் மியூசிக், கஜல், சினிமா இசை – எது வேண்டுமானாலும் வாசிக்க முடியும்.

● *உங்கள் வீணைக் கச்சேரி எந்த ஊரில் நடந்தாலும் நான் ஆஜராகி விடுவேன். உங்கள் முதல் குரு யார்? ஒரு நாளைக்கு எத்தனை மணி நேரம் சாதகம் செய்வீர்கள்?*

என் தாயார் அசுவத்தம்மாதான் என் முதல் குரு. ஒரு நாளைக்கு நான்கு முதல் ஆறு மணி நேரம் பிராக்டிஸ் பண்ணிக் கொண்டிருந்தேன். இப்போது மூன்று மணி நேரம்தான் முடிகிறது!

இடையே ஒருவர், "நீங்கள் கஞ்சிரா வாசித்தது போலவே கேட்கவில்லையே?" என்று புருஷோத்தமனிடம் ஒரு கேள்வியை வீசினார்.

"பாட்டு முழுக்க கஞ்சிரா வாசிப்பது கிடையாது. அவ்வப்போதுதான் நடையை ஒட்டி வாசிக்க வேண்டும். ஆனால் 'தனி ஆவர்த்தனத்'தில் நன்றாகக் கேட்டிருப்பீர்களே?" என்று பதில் சொன்னார் புருஷோத்தமன்.

"டீ.வியில் பிலிம் மியூசிக்குக்குத் தனி சானல் இருப்பது போல, கர்நாடக இசைக்கு என்று ஒரு தனி சானல் வேண்டாமா?" என்ற கேள்விக்கு, காயத்ரியின் பதில்:

"கட்டாயமாக இருக்க வேண்டும். அதற்கான நேரம் வந்து விட்டது என்று நினைக்கிறேன்!"

• சஞ்சய் சுப்ரமண்யன்



வர்ணமும், தெலிசிராமசிந்தன (பூர்ண சந்திரிகா), ஆனந்த நடமாடுவார் தில்லை (பூர்வி கல்யாணி), ஒக்கபரி (கரகரப்ரியா), அநாதுடனு கானு (ஜிங்களா) மாயூரநாதம் (தன்யாசி), ராகம் தானம் பல்லவியில் மோகனம், குறையொன்றும் இல்லை, பிருந்தாவனத்தில் கண்ணன் வளர்ந்த (கல்கி பாடல்), முடிந்து வேத கோஷத்தை வீணையில் வாசித்து அப்ளாஸ்களை ஒட்டு மொத்தமாக வாங்கிக் கொண்டார் காயத்ரி.

கேள்வி பதில் நிகழ்ச்சிக்கு ஆனந்தா சங்கர் ஜெயந்த் 'மாடரேட'ராக இருந்து உதவினார். பால்கனியில் இருந்து குரல் கொடுத்தவர்களையும் விட்டு விடாமல், அவர்கள் குரல் வளத்தைச் சோதித்தார்!

ஆனந்தாவின் நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றது. கச்சேரியைப் போலவே கேள்வி பதிலிலும் தூள் கிளப்பினார் சஞ்சய் சுப்ரமண்யன். விவரமாய் அடுத்த வாரம் படியுங்கள்.

– சாருகேசி





• திருமுருகன்

**அ**து ஒரு திருமண வரவேற்பு நிகழ்ச்சி. கிராமத்திலிருந்து சென்னைக்கு வந்திருந்த உறவினர்களில் இருவர் ஆச்சர்யமாய் பேசிக் கொண்டிருந்தனர். ''என்னய்யா இது! நாளைக்கு நடக்கப் போகிற கல்யாணத்துக்கு இன்னிக்கே வரவேற்பு வெச்சுட்டாங்க!''

''அட அதை விடுய்யா, இன்னும் கல்யாணமே நடக்கலே. அதுக்குள்ளே பொண்ணும், மாப்பிள்ளையும் இப்படிச் சிரிச்சு, சிரிச்சுப் பேசிக்கிறாங்க!'' - இவர்களுக்கு இடையே மூக்கை நுழைக்கிறார் ஒரு சென்னை உறவினர். ''என்னங்க பண்றது. வரவேற்பைக் கல்யாணத்துக்கு அப்புறம் வெச்சுக்கிட்டா, ஹாலுக்கு இன்னொரு தரம் பணம் கட்டணுமே... இதான் சிட்டி கல்சர்!''

நமது பார்வைக்கு அந்த வரவேற்பில், புதிதாகப் பட்டது, அங்கே திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டிருந்த ஒரு பாடல். என்ன பாடல்?

'மெட்டி ஒலி... தொடரின் டைட்டில் பாடல். 'வாராயோ! தோழி வாராயோ!' பாடலைப் போல திருமண வீடுகளில் ஒலித்துக் கொண்டிருந்த சினிமா பாடல்களுக்கு மாற்றாக டீ.வி சீரியல் பாட்டா?! நம்புவதற்குக் கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது.



• ஜீவா

டீ.வி மெகா தொடர்களின் தாக்கம் தமிழர்களின் வாழ்க்கையில் எத்தனை ஆழமாய் ஊடுருவிச் சென்றிருக்கிறது என்பதற்கு மேலோட்டமாகத் தெரியும் சின்ன உதாரணம் இது. இன்று சினிமா கவரொட்டிகளைவிட, சீரியல்



• ராஜ நாயகம்



தாய்மார்கள் மட்டும் பதினைந்து சதவிகிதம் பேர், என்று புள்ளி விவரம் தெரிவிக்கிறது ஒரு மீடியா ஆய்வு.

'பெண்கள் விரும்புகிற மாதிரி சினிமா எடுத்தால் ஃப்ளாப். பெண்கள் விரும்புகிற மாதிரி சீரியல் எடுத்தால் டாப்' என்ற தலை கீழ் மாற்றம் எப்படி நிகழ்ந்தது? இந்த மெகா தொடர்களின் வெற்றிக்கு என்ன காரணம்? சீரியல்கள் மீது மெகா காதலோடு இருக்கும்

# மெகா தொடர்களின் வெற்றி ரகசியம்!

களைப் பார்க்கச் சொல்லும் சுவரொட்டிகளைத்தான் அதிகம் காண முடிகிறது. காரணம் பெண்கள் சினிமா பார்க்கத் தியேட்டருக்கு வருவதை நிறுத்தி விட்டு, சீரியல்களில் திருப்தி அடைந்து விடுவது தான்.

சன், ராஜ், விஜய், ஜெயா உள்ளிட்ட தமிழ் சாட்டிலைட் சேனல்களில் மட்டும் தினசரி நாற்பத்தாறு தொடர்கள் ஒளிபரப்பாகின்றன என்றால் கொஞ்சம் பிரமிப்பாகத்தான் இருக்கிறது. இதை விட பிரமிப்பான இன்னொரு விஷயம், இவற்றில் பத்து முதல் பன்னிரண்டு தொடர்களைத் தினமும் பார்த்து விடுகிற இல்லத்



• ராதிகா

தாய்க்குலத்திடமிருந்தே தொடங்கினோம்.

"பொம்பளை மட்டும் தனியா தியேட்டருக்குப் போய்ப் படம் பார்க்க முடியாதுங்க! கூட வீட்டுக்காரரோ, இல்லை பசங்களோ வரணும். இப்போ விக்கிற விலையிலே டிக்கெட்டுக்கு மட்டும் குறைஞ்சது இருநூறு தேவைப்படுது. மாசம் ஒரு படம் பார்க்கிறதுக்கு இத்தனைச் செலவு செய்யறதைவிட, மாசம் இருநூறு ரூபாயை கேபிளுக்குக் கட்டிட்டு, நிம்மதியா சீரியல் பார்க்கிறோம். வர்ற ஏப்ரல் மாசத்திலிருந்து, நாம விரும்புற சேனலுக்கு மட்டும் பணம் கட்டினாப் போதும்ன்னு சொல்றாங்க... அப்போ



* மலர்க்கொடி



* சாந்தி

இன்னும் செலவு குறையும்'' என்று தமது குடும்ப பட்ஜெட் மீது கண்ணும் கருத்துமாக இருக்கும் மலர்க்கொடிக்குச் பொதுவாக தமிழ் சேனல்களில் வரும் எல்லா மெகா சீரியல்களுமே பிடித்திருக்கிறது. என்றாலும் தன்னைப் பார்க்கத் தூண்டும் சீரியல்களை இங்கே பட்டியல் போட்டுக் காட்டுகிறார்.

"காலைல அஞ்சரை மணிக்கு எழுந்துடுவேன். பிள்ளைகளை ரெடி பண்ணி ஸ்கூலுக்கு அனுப்பிட்டு, மதியத்துக்கும் சேர்த்து சமைச்சு முடிக்கிறேன். வீட்டுக்காரருக்கு லஞ்ச் பேக் பண்ணிக் கொடுத்து அனுப்பிட்டு, வீட்டை ஒழுங்கு பண்ணி, குளிச்சு நிமிர்ந்தா பத்தே முக்கால். காலை டிபனையே டி.வி முன்னாடிதான் உட்கார்ந்து சாப்பிடுறேன். காலையிலே பதினொன்றரை மணிக்கு சன் டி.விலே 'அம்பிகை', பன்னிரண்டு மணிக்கு விஜயிலே 'பயணம்', பன்னிரண்டரைக்கு 'கதையல்ல நிஜம்', ஒன்றரை மணிக்குச் சாப்பிட்டு விட்டு கொஞ்சம் தூக்கம். 'மூணு மணிக்கு ஸ்கூல் போய் பசங்களைக் கூட்டிக்கிட்டு வந்தால் மூணே முக்கால் ஆயிடும். வீட்டு வேலைகள் முடிச்சு, ஆறரை மணிக்கு உட்கார்ந்தால் 'அச்சம், மடம், நாணம்' பார்ப்பேன். ஏழு மணிக்கு 'வரம்' பார்க்கிறோமோ இல்லையோ, 'மெட்டி ஒலி' பார்க்க எனக்கு முன்னாடி என் வீட்டுக்காரர் வந்து உட்கார்ந்துடுவார். செய்தி நேரத்துலே எல்லோருக்கும் டிபன் கொடுத்துருவேன். ஏன்னா எட்டரைக்கு விஜய்லே நீ, நான், அவன்' பார்க்கணுமே! ஒன்பது மணிக்கு சன்லே 'அலைகள்' ஒன்பதரைக்கு 'அண்ணாமலை' முடிஞ்சு 'உதயம்' பார்க்கலாம்ன்னா... 'கதையல்ல நிஜம்' பார்க்கணும்னு கணவர் ரிமோட்டை பிடிங்கிக்குவார்" என்று மூச்சிரைக்க சொல்லி முடித்த மலர்க்கொடியால், எப்படி இத்தனைத் தொடர்களின் கதைகளைக் குழப்பம் இல்லாமல் நினைவில் வைத்துக் கொள்ள முடிகிறது?

"அது ஒண்ணும் கஷ்டம் இல்லீங்க... முன்னாடி நிறைய தொடர்கதை படிச்சேன்... இப்போ தொடர்கள் பார்க்கிறேன். அதான் வித்தியாசம்." என்கிறார்.

ஆனால் அலுவலகம் போய்வரும் திருமதி சுகன்யா, "என்னால நான்கு தொடர்கள்தான் பார்க்க முடியுது. ஏகப்பட்ட தொடர்களைப் பார்த்து மண்டையைக் குழப்பிக்கிறதுலே எனக்கு இஷ்டமில்லை" என்கிறார். இவரது தர வரிசையில் மெட்டி ஒலி, காவ்யாஞ்சலி, அலைகள், அண்ணாமலை ஆகிய தொடர்கள் இடம் பிடித்துக் கொண்டிருக்கின்றன.

வீடு, அலுவலகங்களுக்குச் சென்று பூ விற்பதை முழு நேரத் தொழிலாகச் செய்துவரும் சாந்தி, சீரியல் பார்ப்பதற்காகவே கறுப்பு வெள்ளை டி.வியை விற்று விட்டு, கலர் டி.வி வாங்கினேன் என்கிறார்.

''காலையிலே பதினொன்றரை மணிக்கு 'அம்பிகை' பார்க்கலேன்னா பைத்தியம் புடிச்சுரும்ங்க... ஜீவா மொகத்தைப் பார்த்துட்டுக் கிளம்பினா, வியாபாரம் அமோகமாக இருக்கும்" என்று சீரியல் சென்டிமெண்ட் பேசும் இவர்களைப் போன்ற தமிழ்ப் பெண்களை மெஸ்மரிசம் செய்து வைத்திருப்பது, அந்தந்தத் தொடர்களில் வரும் பிரதான பெண் பாத்திரங்கள்தான். மெட்டி ஒலி என்றால் சரோ, ராஜம் பாத்திரங்கள். அலைகளில் சௌம்யா (விதி விலக்காக அலைகள் ரங்கா போன்ற ஆண் பாத்திரங்களையும் விரும்பி ரசிக்கிறார்கள்). அண்ணாமலையாக வரும் ராதிகா, பலருக்கு காவ்யா என்றால் நிறையப் பேருக்கு அஞ்சலி. அம்பிகை தொடர் என்றால் ஜீவா. சினிமாவில் சித்திரிக்கப் படுவதுபோல கிளாமர் எதுவும் இல்லாத, நடுத்தரக் குடும்பங்களைச் சேர்ந்த பெண்களின் பிரதிநிதிகளைப் போல, இயல்பாய்த் தோன்றும் இந்தப் பாத்திரங்களுக்கு மனசுக்குள் வழிபாடே நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பாத்திரங்களில் தோன்றும் நடிகையர் படுகிளாமரான சினிமா நடிகையாக இருந்தவர் என்றாலும், இப்போது அவர்கள் தோன்றும் பாத்திரம் காரணமாக அவர்களின் பழைய இமேஜ் அடிபட்டு, போய் விடுவது வரவேற்கத் தக்க மாற்றம். இதற்கு அம்பிகை தொடரின் கதாநாயகியரில் ஒருவரான ஜீவா நல்ல உதாரண மனுஷி! முன்பு தப்பு தப்பான

மலையாளப் படங்களிலும், ஆபாசமான தமிழ்ப் படங்களிலும் தோன்றி வந்த இவர், சீரியல்களில் மரியாதைக்குரிய பெண் பாத்திரங்களில் நடிக்கத் தொடங்கிய பிறகு- பொது இடங்களில் இவருக்குக் கிடைக்கிற மரியாதை அபாரம்.

"கசப்பான எனது பழைய இமேஜை நான் மறக்க விரும்புகிறேன்" என்று கேட்காமலேயே இதுபற்றிப் பேசும் இவர், "இனி பெண்களின் ஒரே பொழுதுபோக்கு மெகா சீரியல்கள்தான்" என்கிறார்.

எல்லாப் பெண்களும் சீரியல் பார்ப்பவர்களாக இருக்கிறார்களா? என்றால் இல்லை. பள்ளி, கல்லூரி மாணவிகளுக்கு மெகா சீரியல்கள் என்றால் வேப்பங்காய். "என்னது சீரியலா? சரியான தலைவலி சார்! ஆனால் சீரியல்களில் வர்ற டைட்டில் பாடல்களைப் பார்க்கறதுண்டு. குறிப்பா மெட்டி ஒலி டைட்டில் பாட்டுக்கு சினேக் சாந்தின்னு ஒரு பொண்ணு சூப்பரா டான்ஸ் ஆடியிருக்கு. அதைப் பார்த்துட்டு எழுந்து போயிடுவேன். அம்மாவும், அப்பாவும் கண்டினியூ பண்ணுவாங்க'' என்று தடாலடியாகச் சொல்கிறார் கல்லூரி மாணவி பிரசன்னா.



* பிரசன்னா



* சுகன்யா

இருபத்தெட்டு வயதிற்கு மேற்பட்ட பெண்கள் சீரியல்களை விரும்பிப் பார்க்கத் தொடங்கியதில், "புரனி பேசுதல் ஒழிஞ்சு போச்சுப்பா!" என்று தந்தைகுலம் ஜோக் உதிர்த்தாலும், அதிகம் பயனடைவது மார்கெட்டிங் நிறுவனங்கள்தான். விரும்பிப் பார்க்கும் சீரியல்களை ஸ்பான்சர் செய்து, தங்கள் தயாரிப்புகளை விளம்பரம் மூலமாக நுகர்வோரிடம் எடுத்துச் சொல்வதில் இவர்கள் கண் மூடிக்கொண்டு ஆர்வம் காட்டுகிறார்கள். அதிகம் விரும்பிப் பார்க்கப்படும் சீரியல்களை வரிசைப்படுத்த, ஒவ்வொரு வாரமும் ஆய்வு செய்து சுடச்சுட ரிப்போர்ட்டும் தருகிறார்கள். டி.வி.ஆர். அல்லது டி.ஆர்.பி ரேட்டிங் எனப்படும் இந்த மீடியா ஆய்வில், பாரபட்சம் காட்டப்படுகிறது என்ற தொடர் குற்றச்சாட்டு இருந்து வருவது ஒரு பக்கம் இருக்க... உண்மையான டி.ஆர்.பி என்பது 'மவுத்டாக்' என்று செல்லமாக அழைக்கப்படும் மக்களின் பொதுக்கருத்துதான் என்கிறார்கள் விவரம் தெரிந்த விளம்பரத் துறையினர்.

டி.ஆர்.பி ரேட்டிங், மவுத் டாக் இரண்டிலுமே இப்போது முன்னணியில் இருக்கும் மெகா தொடர் மெட்டி ஒலி. வெற்றிகரமான இருநூற்று ஐம்பதாவது நாளை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கும் இந்தத் தொடர், மத்தியதரக் குடும்பத்தில், சிதம்பரம் என்பவருக்குப் பிறந்த ஐந்து பெண்களின் மண வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறது. சிதம்பரத்தின் இரண்டாவது மகளான சரோ, அவளது கணவர் மாணிக்கம், மாணிக்கத்தின் அம்மா ராஜம் ஆகிய மூன்று பாத்திரங்கள் முக்கிய இடத்தை வகித்தாலும், தொடரில் வரும் சிறிய பாத்திரம்கூட அன்னியோன்யமாகச் சித்திரிக்கப்படுவதில் தொடர் காந்தமாய் வசீகரிக்கிறது.

மெட்டி ஒலி வெற்றிக்கு இது ஒரு காரணம்தான். வேறு பல காரணங்களும் இருக்கின்றன என்கிறார் தொடரின் இயக்குனர் திருமுருகன்.

"முதல் காரணம் தொடரின் தயாரிப்பாளர் சித்திக். கதையிலோ, திரைக்கதையிலோ, படப்பிடிப்பு தளத்திலோ எந்தத் தலையீடும் செய்யாதவர். அடுத்து கதை. வாழ்க்கையில் நாம் நேரடியாகப் பார்த்த, பார்த்துக் கொண்டிருக்கிற பல நிஜ கேரக்டர்களை மையமாக வைத்து உருவாக்கினேன். இந்தக் கதையை, தேவையில்லாமல் இழுத்து விடாமலும், வேண்டுமென்றே சுருக்கி விடாமலும் இயல்பாய் நகர்த்துகிற திரைக்கதையை முத்துச் செல்வன் எழுதுகிறார். வசனம் எழுதும் எழுத்தாளர் பாஸ்கர் சக்தி, தமது புத்திசாலித்தனங்களை காட்டுகிறேன் என்று 'பன்ச்' டயலாக் எதுவும் எழுதாமல், வீட்டிலும், வெளியிலும் பயன்படுத்தும் வார்த்தைகளைப் போட்டு இயல்பாக எழுதுகிறார். அடுத்து மிக முக்கியமான விஷயம் ஒளிப்பதிவு. பாத்திரங்கள் போகிற இடங்களுக்கெல்லாம் கேமராவைத் தோளில் சுமந்து சென்று ஹாண்டில் ஷாட்டுகளிலே தொடரைச் சுட்டுத் தள்ளும் அசாத்திய திறமைசாலி ஒளிப்பதிவாளர் சேவிலோ ராஜா. நடிகர்கள் பெரும்பாலும் புதியவர்களாக இருப்பதால் நேயர்கள் பாத்திரத்தோடு பொருத்திப் பார்க்கிறார்கள். இது ஒரு கூட்டு முயற்சி" என்று அடக்கமாய்ப் பேசும் திருமுருகன், சென்னை தரமணி அரசு திரைப்படக் கல்லூரியில் சினிமா இயக்கம் பயின்றவர்.

சீரியல் உலகைக் கலக்கிக் கொண்டிருக்கும் இவருக்கு, மெட்டி ஒலி என்ற டைட்டில் மட்டும் மிகைப்படுத்தப்பட்டது என்பதில் சின்ன வருத்தம். ஆனால் மெட்டி ஒலியின் கதை போல் இல்லாது மிகைப்படுத்தப்பட்ட சித்திரிப்புகளோடு வரும் தொடர்கள், தொடங்கப்பட்ட சில வாரங்களிலேயே டி.ஆர்.பி ரேட்டிங்கில் படுத்துவிடுவதை உணர்ந்து, மெகா தொடர்களுக்கான நல்ல கதைகளைத் தேடத் தொடங்கியிருக்கிறார்கள் சீரியல் தயாரிப்பாளர்கள்.

"இவற்றை நல்ல கதைகள் என்று சொல்வதைவிட, சமூக உளவியல் ரீதியாக, பெண்களைப் புரிந்துகொண்டு, அவர்களை ஆராதிப்பது போன்ற போலித் தோற்றத்தைத் தரும் போதை மிகுந்த கதைகள் என வகைபடுத்தலாம்" என்கிறார் லயோலா கல்லூரியின் காட்சித் தகவலியல் பேராசிரியரும், டி.வி மீடியா குறித்து தொடர் ஆய்வுகளை நிகழ்த்தி வருபவருமான அருட் திரு ராஜநாயகம்.

"நவீன மயம், தாரள மயம், உலக மயம் ஆகியவற்றின் விளைவாக, பெண்கள் தன்னிச்சையாகவும் சுதந்திரமாகவும் செயல்படுவது போன்ற தோற்றம் தெரிந்தாலும், ஆண்கள் எப்படிப் பெண்களைப் பார்க்கிறார்களோ, அதை அப்படியே ஆழ்மனத்தில் தன்வயப்படுத்தியவர்களாகத்தான் பெண்கள் இருக்கிறார்கள். இப்படியொரு இறுக்கமான மனநிலையில், டி.வி தொடரில் வரும் வெற்றிகரமான பெண் மீதும், அடங்கிப் போகிற பெண் மீதும் தங்களை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்கிறார்கள். ஒரு விதத்தில் இது கனவுதான் என்றாலும், இந்தக் கனவும் அவர்களுக்குத் தேவைப்படுகிறது. மனவியல் ரீதியாக இது தற்காலிக ரிலீஃப் என்றாலும் இதுவே நிரந்தரத் தீர்வல்ல" என்று சுட்டிக் காட்டும் ராஜநாயகம் "சீரியல் பார்ப்பவர்களைத் திருத்த முடியாது என்று விமர்சிப்பதை விட்டு விட்டு, இதிலிருந்து மீண்டு வாருங்கள்" என்ற பாசிட்டிவ் அணுகு முறையைப் பெண் அமைப்புகள் கையிலெடுத்துக் கொள்ள வேண்டும்" என்கிறார்.

**- ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள் : டிஜிட்டல் சண்முகம்

## ஹாலிவுட் ஆகிறது கோலிவுட்?



பண்டிட் குயின், லகான், மாதிரி உலகத் தரத்தில் படங்கள் வரத் தொடங்கிவிட்ட இந்திய சினிமாவில், ஹாலிவுட் தரத்தில் தொழில் நுட்பம் கிடைக்கிறதா? என்றால்... யெஸ்! என்று காலரைத் தூக்கிவிட்டுக் கொள்கிறது புகழ்பெற்ற பிரசாத் லேப் மற்றும் ஸ்டுடியோ நிறுவனம். இந்தியாவில் முதல் முறையாக, கேமராவை முக்கோணங்களில் நகர்த்திச் செல்லக் கூடிய டிஜிட்டல் ரிமோட் ஹெட், 48 அடி உயரமுள்ள ஜீராஃப் லாங்ரேஞ்சர் கிரேன், ஒரு வினாடிக்கு இரண்டாயிரம் பிரேம்களை சுட்டுத் தள்ளும் போட்டோ சோனிக் கேமரா என்று, ஐந்து லேட்டஸ்ட் ஹாலிவுட் தொழில் நுட்பங்களை இறக்குமதி செய்து அசத்தியிருக்கிறது. இனி இயக்குனர்களும், ஒளிப்பதிவாளர்களும் அசத்த வேண்டியதுதான் பாக்கி.

**- விஷுவல்**



**பித்ரு தோஷ நிவர்த்தி வம்ச விருத்திக்கு வழிகாட்டும்!**

**தடைப்பட்ட திருமணம், பிள்ளைப்பேறு, கடன் தொல்லை நீங்கி ஆயுள் விருத்தியாக**

# பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில் அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். திருமாலின் அவதாரங்களான ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலனை கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை,பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.

★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

## நீங்கள் நினைக்கும் நாளில் இராமேஸ்வரத்தில் அன்னதானம்!

இராமேஸ்வரத்தில் நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்வதற்கு எமது அறக்கட்டளை சிறப்பான ஏற்பாடுகள் செய்துள்ளன. ஆகவே, நீங்கள் நினைக்கும் தேதியில் இராமேஸ்வரத்தில் அந்தணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழை எளியவர்களுக்கும் அன்னதானம் செய்யலாம். ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎: (044) 24900303, 24900603, 24416122 Fax: (044) 24916316**

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# தொடரும் 'அயோத்தி' ஆட்டம்!

**மா**ளவ நாட்டை ஆண்ட போஜராஜன் கட்டியதாகச் சொல்லப்படும் பாடசாலையொன்று மத்திய பிரதேசம் தாரா நகரில் இருக்கிறது. அந்த பாடசாலையை 'போஜ் சாலா' என்கிறார்கள். அரசன் பெயரில் அந்த பாடசாலை அமைந்ததா இல்லை, இலவச அன்ன தானம் (போஜனம்) போடப்பட்டு வந்ததால் இந்தப் பெயர் நிலைப்பட்டு விட்டதா என்பது ஆராய்ச்சிக்குரிய ஒன்று. கல்வி நிலையமாதலால் அங்கு கல்விக் கடவுள் சரஸ்வதியின் சிலை வைக்கப்பட்டு வழிபாடுகள் நடந்ததாகவும் சங்க அமைப்பு சொல்கிறது. 1923ல் லார்டு கர்ஸன் கவர்னர் ஜெனரலாக இருந்தபோது, இந்தச் சிலை லண்டனுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்குள்ள மியூசியத்தில் வைக்கப்பட்டதாகச் சொல்கிறார்கள். ஆனால் வரலாற்றுக் குறிப்புகளில் போஜராஜன் அழகான சரஸ்வதி சிலையை செய்ததாக குறிப்பு இருக்கிறதே தவிர, அதைப் பாடசாலையில் பிரதிஷ்டை செய்ததாக ஆதாரம் இல்லை. மகா பெரியவர் தமது 'தெய்வத்தின் குரல்' அருளுரையில் 'இந்தப் பாடசாலையை வாக்தேவி (சரஸ்வதியின் மற்றொரு பெயர்) கோயில்' என்று குறிப்பிட்டுள்ளார். இந்த பாடசாலையில் சக்கர



வடிவில் சமஸ்கிருத அறிஞர் பாணினியின் இலக்கண வியாக்ரணங்கள் செதுக்கப்பட்டிருப்பதாகவும் சொல்லியிருக்கிறார் மகா பெரியவர். இந்தியாவில் தமிழ்நாடு மற்றும் கேரளாவில் சரஸ்வதிக்கு ஆலயங்கள் உண்டு.

**போ**ஜ்சாலாவின் நான்கு புறமும் தாழ்வாரங்கள் இருக்கின்றன. நடுவில் ஒரு கல் மேடை இருக்கிறது. அந்த மேடை ஆசிரியர் அமருவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால் அதில்தான் சரஸ்வதி தேவியின் சிலை இருந்ததாக வி.ஹெச்.பி சொல்கிறது. தொல்பொருள் இலாகாவின் துணை இயக்குனரான ஸ்வரூப் கார்க் என்பவர் ''பாடசாலைக்கும் சரஸ்வதி சிலைக்கும் தொடர்பு இருப்பதற்கான சாட்சியங்கள் இல்லை'' என்று சொல்கிறார். பாடசாலையில் உள்ள தூண்களில் பல கல்வெட்டுகள் இருக்கின்றன. கல்வி போதிக்கப்பட்ட இடமாதலால், சரஸ்வதியை சம்பந்தப்படுத்தியிருக்கலாம் என்கிறார் அவர்.

**ப**தினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்து




மறைந்தார் முஸ்லீம் துறவியான கமல் மௌலானா சிஷ்டி. இவர் காலமான பிறகு அவரை இப் பாடசாலையை ஒட்டி அடக்கம் செய்து, தர்க்கா கட்டி விட்டார்கள். முஸ்லிம்கள் தொழுகை பாடசாலையில் நடந்தது. இது ஔரங்கஸீப் காலத்திய வரலாறு. அதன் பிறகுதான் இரண்டு சமுதாயத்துக்கும் மோதல் துவங்கியது. 1935ல் தார் பகுதியை ஆண்டு வந்த தேவன் நட்கர் என்ற இந்து அரசன், முஸ்லீம்கள் பாடசாலையில் தொழுகை நடத்திக் கொள்ள பெருந்தன்மையாக அனுமதி கொடுத்தார். அதற்குக் காரணம் அது வரலாற்றுப்படி பாடசாலையாக இருந்ததுதான். 1952ல், தொல்பொருள் இலாகா பாடசாலையையும் அதனை ஒட்டியிருந்த தர்காவையும் தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டது. அதன் பிறகும் இரு சமுதாயங்களுக்குமிடையே உரசல்கள் தொடர்ந்த வண்ணம் இருந்தன. 1992ல் பாபர் மசூதி இடிக்கப்பட்ட பிறகு, பாட சாலையின் உள்ளே சிலை வைத்து வழிபாடு செய்யும் முயற்சியில் இறங்கின சங்க அமைப்புகள். செவ்வாய்க் கிழமைகளில் பஜனை, உபந்நியாஸங்கள் நடத்தப்பட்டன. அதன் பிறகு மாநில அரசின் பரிந்துரையின் பேரில் வெள்ளிக்கிழமைகளில் மட்டும் முஸ்லிம்கள் தொழுகை நடத்த அனுமதிக்கப் பட்டார்கள். இந்துக்கள் வருடம் ஒருமுறை வசந்த பஞ்சமி தினத்தன்று உள்ளே சென்று வழிபாடு செய்ய அனுமதிக்கப்பட்டார்கள். மற்ற நாட்களில் யாரும் உள்ளே புகா வண்ணம் தடுப்புக் கட்டைகள் போடப்பட்டன.

இப்போது மத்தியப் பிரதேச மாநில சட்ட மன்றத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருப்பதால், இந்தப் பிரச்னையை ஊதி, பெரிதாக்கி வெற்றிக்கனியைப் பறித்து விட, பா.ஜ.கவும் சங்கக் குடும்பமும் கூட்டுச் சதியாக களத்தில் குதித்திருக்கின்றன. "எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல், பாடசாலைக்குள் அனுமதிக்க வேண்டும், சரஸ்வதி தேவி சிலையை அங்கு வைக்க வேண்டும் என்று சொல்கிறது. வி.ஹெச்.பியின் துணை அமைப்பான ஹிந்து ஜாக்ரன் மன்ச். எது எப்படியோ, மத நல்லிணக்கத்துக்கு வேட்டு வைத்து, அரசியல் ஆதாயம் தேடும் பணி தொய்வில்லாமல் தொடர்கிறது. இந்த நிலையில் பெரும்பான்மை சமூகத்தின் கோபத்துக்கு ஆளாகி விடப் போகிறோம் என்று பயந்து ம.பி. முதல்வர் திக்விஜய்சிங், செவ்வாய்க் கிழமைகளில் மட்டும் வழிபாட்டுக்குத் திறந்து விட ஏற்பாடு செய்திருக்கிறார். ஆனால் சங்கக் குடும்பம் இந்த ஏற்பட்டால் திருப்தியடையாது என்றும், தேர்தல் நெருங்கும் போது, இன்னமும் உஷ்ணத்துடன் பிரச்னையைக் கிளப்பும் என்றும் எதிர்பார்க்கலாம்.

- கௌசி

# படிப்பில் ஜமாய்ங்க!

ஒரு மாணவனுக்கு, பள்ளிக் கல்லூரி வாழ்க்கை என்பது படிப்பு, நண்பர்கள், வேடிக்கை - இவை மூன்றும்தான். படிக்கிற போது நமக்கு வேண்டியது, வேண்டாதது என்று ஒரு பட்டியலே இருக்கும். ஆனால் யோசித்துப் பார்க்கையில், எதற்கு இப்படி எல்லாம் பாகுபாடு பார்க்கிறோம் என்று நமக்கே தோன்றும்!

நாம் ஏன் எல்லா சப்ஜெக்ட்டுகளையும் ஒரே மாதிரி மகிழ்ச்சியோடு கற்பதில்லை? இதை யோசித்தால், ஏன் சில சப்ஜக்ட்டுகளை வெறுக்கிறோம் என்ற உண்மை வெளிப்படும். அந்தக் கேள்வியை நமக்குள் எழுப்பினால், பதில்கள் இப்படிக் கிடைக்கும்.

- "சப்ஜெக்ட் எனக்குப் புரியவில்லை!"
- "முன்னால் படித்தவர்கள், ஆசிரியர், பெற்றோர் எல்லாரும் ஒரேயடியாக பிரஷர் கொடுக்கிறார்கள்!"
- "பள்ளிக்கூடத்தில் என்ன சொல்லித் தந்தார்கள் என்றே புரியவில்லை!"
- "பிற்காலத்தில் எந்தப் பயனும் தராத சப்ஜெக்ட்டை ஏன் படித்துத் தொலைக்கணும்?"
- "இது ரொம்பக் கஷ்டமான சப்ஜெக்ட்!"

– இவை எல்லாமே மனத்தில் நாமாக ஏற்படுத்திக் கொண்ட தடைகள். நாமாகவே, நம் மனசு சொல்லுகிறது என்று நினைத்துக் கொண்டிருக்கும் தடைகள்.

நமக்கு ஏன் ஒரு குறிப்பிட்ட சப்ஜெக்ட் பிடிக்கவில்லை என்று கண்டறிந்து விட்டால், பாதி வேலை முடிந்த மாதிரிதான். ஒரு பாடத்தில் வெறுப்பு கொண்ட ஒரு மாணவன், பிற்காலத்தில் அதே சப்ஜெக்ட்டில் ஈடுபாடு கொண்டு அதிக மதிப்பெண்கள் பெற்ற உண்மையைப் பல ஆராய்ச்சியாளர்கள் சுட்டிக் காட்டி இருக்கிறார்கள். ஒரு சப்ஜெக்ட்டை நன்றாகச் செய்வதற்கு, நாம் கற்கும் சப்ஜெக்ட்டின் தன்மையைப் புரிந்து கொண்டால் போதும். ஈடுபாடு, கற்பது, நினைவு வைத்துக் கொள்ளுவது எல்லாம் அப்புறம்தான்.

பாடத்தைப் புரிந்து கொள்ளுவது எப்படி? அதில் வெற்றி காண்பது எப்படி?

இதோ, சில சிம்பிள் வழிகள்:

1. ஆரம்பத்திலிருந்து துவங்குங்கள். சப்ஜெக்ட்டின் அடிப்படை அம்சங்களில் நீங்கள் கெட்டிக்காரராக இருந்தால், பிறகு சிக்கலான விஷயங்கள் எல்லாமே கொஞ்சம் எளிதாகப் புரிந்து விடும்.

2. ஒரு நடைமுறையையோ (ப்ரொஸீஜர்), விரிவான பதிலையோ நீங்கள் புரிந்து கொள்ள வேண்டுமானால் - படிப்படியாக அவற்றைப் பிரித்துக் கொள்ளுங்கள். அடுத்த படிக்குப் போகுமுன் அவற்றில் ஒவ்வொன்றிலும் தேர்ச்சி பெறுங்கள்.

3. நிறைய நேரம் செலவிடுங்கள். ஒரு முறைக்கு இருமுறை படித்துப் பாருங்கள். ஒவ்வொரு முறை படிக்கும்போதும், மேலும் மேலும் பாடம் தெளிவாகிக் கொண்டே வரும். ஒவ்வொரு பாரா படித்து முடித்ததும், 'இப்போது நான் இதிலிருந்து என்ன தெரிந்து கொண்டேன்?' என்று உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்.

4. ஸில்லி டவுட் என்பார்களே, அந்த மாதிரி அற்ப சந்தேகம் என்று எதுவுமே கிடையாது. வெளியாரிடம் உங்கள் சந்தேகத்தை எழுப்புங்கள். ஆசிரியர், பெற்றோர், உடன் படிக்கும் மாணவர்கள் இவர்களிடம் விளக்க முடியுமா என்று கேளுங்கள். தெரிந்து கொள்ளவும், புரிந்து கொள் ளவும் உங்களுக்கு உரிமை உண்டு. எனவே உங்கள் சந்தேகங்களைத் தெளிவு படுத்திக் கொள்ளுங்கள்.

5. 'ஐயோ, ரொம்பக் கஷ்டமான சப்ஜெக்ட்!' என்று உங்கள் மனசு





சொல்லும்போது, உட்கார்ந்து சிந்தியுங்கள்: நம் மனசுதான் மிகச் சக்தி வாய்ந்த கருவி. மூளையைக் கசக்கிக் கொண்டு யோசியுங்கள். நெப்போலியன் ஹில் சொன்னதையே நானும் இங்கு சொல்லுகிறேன்: "மனசு எதையெல்லாம் நினைக்கிறதோ, நம்புகிறதோ, அதை எல்லாம் சாதிக்க முடியும்!"

நாம் எப்போதும், நம் மனசுடன் உரையாடிக் கொண்டுதான் இருக்கிறோம். எனவே, 'கடவுளே', இது நம் மண்டையில் ஏறாது! நான் இதை நினைவில் வைத்துக் கொள்ளவே முடியாது!' என்று மனசு சொல்லும்போது, அப்படியே நடக்கத்தான் வாய்ப்புகள் அதிகம். நம் தலைக்குள் அது புகவும் புகாது. நாம் அதை நினைவில் வைத்துக் கொள்ளவும் மாட்டோம்!

இதற்குப் பதிலாக, இப்படிச் சொல்லிப் பாருங்கள்: 'நான் இதைப் புரிந்து கொள்ளப் போகிறேன். அரை மணி நேரத்தில் இந்தப் பகுதியைப் படித்துப் புரிந்து கொண்டு விட்டுத்தான் அடுத்த வேலை!' என்று தீர்மானம் செய்யுங்கள். நீங்கள் எவ்வளவு பாஸிடிவ் ஆக நினைக்கிறீர்களோ, அவ்வளவு பாஸிடிவ் ஆக நிகழ்வுகளும் அமையும். இதை 'பாஸிடிவ் செல்ஃப் டாக்' என்பார்கள்.

6. எப்போதும் உல்லாசமான மன நிலையிலேயே இருக்க வேண்டும். படிக்கும் போதோ இன்னும் மகிழ்ச்சியான மன நிலையில் இருப்பது நல்லது. வேறு நினைப்புகளையும், பாதிப்புகளையும், கவலைகளையும் துடைத்து ஒதுக்குங்கள். படிப்பதற்கு ஏற்ற மூட் இல்லாதபோது - படிப்பில் அதிகக் கவனம் இருந்த நிகழ்ச்சிகளையும், பிரமாதமாகப் படித்து நினைவில் வைத்திருந்த நிகழ்ச்சிகளையும் மறுபடி நினைத்து அசை போடுங்கள்.

மீண்டும் உங்களுக்குள்ளேயே, 'இப்போது படிப்பதையும் கவனமாகப் படித்து, நினைவில் வைத்துக் கொள்ளுவேன்' என்று சொல்லிக் கொள்ளுங்கள்.

7. பாடத்தில் உண்மையான ஈடுபாடு காண்பியுங்கள். ஈடுபாடு இருந்து விட்டாலே, படிக்கிற நேரத்தை அது அதிகரிக்கச் செய்யும். கவனத்தைக் கூடுதலாக்கும். முயற்சியைத் தீவிரமாக்கும். இது போல ஈடுபாட்டுடன் படிக்கிற திறனையும், உத்திகளையும் மேலும் தெரிந்து கொண்டால், இன்னும் கூடுதல் பயன் உங்களுக்குத்தான்!

8. எல்லாவற்றுக்கும் மேலாக, கடின உழைப்புக்கும், முயற்சிக்கும், படிக்க வேண்டும் என்ற மன உறுதிக்கும், சாதிக்க வேண்டும் என்ற தீர்மானத்துக்கும் மாற்றே வேறு எதுவும் கிடையாது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

**பா**டத்தைக் கற்கவும், நேசிக்கவும் சொல்லிவிட்டுப் போவது வெகு எளிது. ஆனால் அவற்றைச் செயலில் முயன்று பார்த்தால் மட்டுமே வெற்றியைக் காண முடியும். எனவே, அப்படிப்பட்ட முக்கிய - ஆனால் சிறிய மாற்றங்களை இப்போதே தொடங்குவோம். முடிவுகளும் சாதகமாகவே அமையும்.

அடுத்த வாரம் - உங்களைத் தெரிந்து கொள்ளுங்கள்!

**ஆர். கண்ணன்**

# தமிழ்த் தொண்டுக்கு ஆர்வமா?





வலை பாயுதே

தமிழ்க் கணினிதான் எவ்வளவு தூரம் முன்னேறி யுள்ளது? தமிழில் விதம் விதமாகத் தளங்கள். வழக்கமாக வெளிவரும் பத்திரிகைத் தளங்கள் தவிர பல தளங்கள் உள்ளன. Project Madurai என்ற தளத்திற்குச் சென்றால் தமிழில் உள்ள பல இலக்கியங்களை அனுபவிக்கலாம். புறநானூறு போன்ற சங்க கால இலக்கியங்களை கணினியில் டைப் செய்து, இணையத்தில் சேர்க்கும் இந்தப் பணியைத் தொடங்கி வைத்தவர் ஸ்விட்சர்லாந்தில் ஓர் ஆராய்ச்சி மையத்தில் பேராசிரியராக இருக்கும் கல்யாண சுந்தரம். தமிழ்க் கணினியின் ஆரம்ப நாளிலிருந்து தமிழை இணையத்தில் கொண்டு வரும் முன்னோடிகளில் இவர் குறிப்பிடத் தகுந்தவர். ஒரு வேளை உங்களுக்கும் தமிழ்த் தொண்டு ஆற்றும் ஆர்வம் இருக்குமானால், இந்தத் தளத்தில் தொடர்பு கொண்டு நீங்களும் தமிழ் இலக்கியங்களை இணையத்தில் ஏற்றும் பணியைச் செய்ய இந்தத் தளம் அழைப்பு விடுக்கிறது. (http ://tamil.net/projectmadurai)

ஒரு குறிப்பிடத் தகுந்த விஷயம் என்னவென்றால், தமிழ்க் கணினி, இணையம் இவற்றில் மிகுந்த ஆர்வத்துடன் பணி செய்து, புதுப் புது கண்டுபிடிப்புகளைச் செய்பவர்கள் அத்தனை பேரும் வேறு ஏதோ தொழிலில் ஈடுபட்டு இருப்பவர்கள். இவர்கள் தமிழ்ப் பண்டிதர்களாக இல்லாமல் இருக்கலாம். ஆனாலும் தமிழில் இருக்கும் ஆர்வத்தினால் - தமிழை உலகெங்கும் பரப்பும் நோக்கத்தில் இப்படி தமிழ்ப் பணி ஆற்றுகின்றனர். வரும் காலத்தில் இணையம்தான் தொடர்பு சாதனம் என்கிற நிலையில், எதிர்கால சந்ததியினர் தமிழை மறந்து விடாமல் இருக்க, இப்படி ஆர்வத்துடன் இவர்கள் பணியாற்றுகின்றனர். இதே போல் தமிழை மின் அஞ்சலில் கொண்டு வரும் பெரும் பணியைச் செய்ததில், சிங்கப்பூரைச் சேர்ந்த, காலம் சென்ற நா.கோவிந்தசாமி மற்றும் மலேஷிய மென்பொருள் வல்லுனரான முத்து நெடுமாறன் இவர்களுக்குப் பெரும் பங்கு உண்டு. முத்து நெடுமாறனின் புதிய முரசு அஞ்சல் மூலம், (www.murasu.com) நாம் சாதாரணமாகப் பயன்படுத்தும் அவுட்லுக் எக்ஸ்பிரசிலேயே தமிழை நன்றாக உபயோகிக்கலாம். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இந்தத் தளத்திலிருந்து புதிய மென் பொருளை இறக்க வேண்டியதுதான். இதைத் தவிர அஞ்சலிலும் 'மிதி' தமிழ் மென் பொருள் உள்ளது. உபயோகித்து தமிழில் அஞ்சல் அனுப்பலாம்.

இணையத்தில் குறளின் குரல் கேட்பதாக தகவல் உள்ளது (www.thisaigal.com) லண்டனில் வசிக்கும் சட்டத்தரணி யோகராஜா என்பவர் திருக்குறளை, 133 வெவ்வேறு ராகங்களில் அமைத்துக் குறுந்தகடாக வெளியிட்டிருக்கிறாராம். இதன் சில பகுதிகளை http://www.tamil-heritage.org/music/luvmusic.html என்ற வலைப் பக்கத்தில் கேட்கலாம், இதே தளத்தில் கமலஹாசனின் கவிதையும் சுஜாதாவின் கட்டுரையும் உள்ளது. யூனிகோட் எழுத்துருவில வரும் முதல் தமிழ் மின் இதழான இதை, எந்தக் கணினியிலும் - netscape, internet explorer போன்ற எந்தவித browser உபயோகித்தும் படிக்க முடியும்.

- அருணா ஸ்ரீநிவாசன்

# கண்ணுக்குத்தான் மை; கட்டைவிரலுக்குமா?

திருச்சி மத்திய சிறைச்சாலையில் உள்ள பெண்களுக்கான தனி சிறைச்சாலையில் நூறு பெண் கைதிகள் உள்ளனர். அவர்களில் 240 பேர் முற்றிலுமாக எழுதப் படிக்கத் தெரியாதவர்கள். அவர்களுக்கு அடிப்படைக் கல்வி போதிக்கும் திட்டத்தை மாவட்ட நிர்வாகம் தொடங்க, கடந்த நான்கு மாதங்களாக பெண் கைதிகள் புத்தகமும் சிலேட்டுமாக வளைய வருகின்றனர் சிறைகளில்.

"இந்தியாவில் உள்ள மத்திய சிறைச்சாலைகளில் முதன் முறையாக, எழுதப் படிக்கத் தெரியாத பெண் கைதிகளுக்கு அடிப்படைக் கல்வி போதிக்கும் திட்டமும், வாழ்க்கைத் தொழிற்பயிற்சி திட்டமும் இங்குதான் செயல்பட்டு வருகின்றது" என்கிறார் திருச்சி கலெக்டர் டாக்டர் க. மணிவாசன்.

ஒரு வகுப்புக்கு முப்பது பெண்களென எட்டு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு, காலையில் இரண்டு மணி நேரம் நான்கு வகுப்புகள். மாலையில் இரண்டு மணி நேரம் நான்கு வகுப்புகள். சனி, ஞாயிறு



* டாக்டர் க. மணிவாசன்



தவிர்த்து, நூற்றியெண்பது நாட்களை மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பாடங்களை, போதித்து வருகின்றனர். இவர்களுக்கு எழுத்தறிவு கற்பிப்பதுடன், சமூகக் கல்வியும், மனத்தைப் பக்குவப்படுத்தும் வகையில் நீதி போதனைக் கதைகளும், பொது அறிவும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது.

"எழுத்தறிவு பெற்று வரும் பெண் கைதிகள் தமிழில் புத்தகங்களைச் சரளமாகப் படிக்கவும், கடிதங்கள் எழுதவும், கணக்குகள் போட்டுப் பார்க்கவும் முழு அளவில் தயாராகி விடுவார்கள்" என்கிறார்கள் இங்கு பயிற்றுவிக்கும் ஆசிரியைகள்.



• பாடம் படிக்கும் கைதிகள்

எழுத்துக்கூட்டிப் படிக்கத் தெரிந்திராத பெண் கைதிகளில் பலர், இப்போது கரும் பலகையில் எழுதிப் போடும் வாசகங்களைப் பிழையின்றி வாசித்துக் காட்டுகிறார்கள். தங்கள் பெயருக்கு வரும் கடிதங்களைப் பிறர் துணையின்றி தாங்களே படித்துப் புரிந்து கொள்கிறார்கள். தங்கள் வீட்டாருக்கு அனுப்ப வேண்டிய கடிதங்களைத் தம் கைப்படவே எழுதி விடுகிறார்கள்.

> **"கைத் தொழில் பயிற்சி பெற்றால், விடுதலையான பிறகு நேர்மையாய்ச் சம்பாதிக்க உதவுமே."**

வாசிக்க, எழுதக் கற்றுக் கொடுத்தாயிற்று. நல்வழி வாழ கற்றுத் தர வேண்டாமா? வாழ்க் கைத் தொழிற்பயிற்சியும் அங்கேயே உரு வாகி விட்டது இப்போது. கை வேலைப் பாடுகளால் வாழ்த்து அட்டை தயாரிக்கும் பயிற்சியில் முப்பது பெண்கள் ஈடுபட்டுள்ள னர். மூன்று மாத வகுப்பு. இதற்காக ஒரு நபருக்கு ஆயிரம் ரூபாய் வீதம் முப்பதாயிரம் ரூபாய், மாவட்ட வளர் கல்வி திட்ட நிதியி லிருந்து ஒதுக்கப்பட்டுள்ளது. தமிழ்நாடு மகளிர் நல மேம்பாட்டு நிறுவனம் இத் திட்டத்துடன் இணைந்து செயல்படுகிறது. அந் நிறுவனம் இவர்கள் தயாரிக்கும் வாழ்த்து அட்டைகளை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வருவாய் ஈட்டித் தர முன் வந்துள்ளது. கைத் தொழில் பயிற்சி பெற் றால், விடுதலையான பிறகு நேர்மையாய்ச் சம்பாதிக்க உதவுமே.

"தனிச் சிறையில் இருக்கும் பாதிக்கு மேற்பட்டோர் எழுதப் படிக்கத் தெரியாதவர் கள் என அறிந்த பிறகே, மாவட்ட நிர்வாகத்துக்கு இத்திட்டம் உதயமானது. கண்ணுக்குத்தான் மை; கட்டை விரலுக்குமா மை? என்கிற கேள்வியே எழக்கூடாது என்கிற எண்ணம் தோன்றியது. மனித வள மேம்பாட்டு மையத்தின் ஆலோசனை பெற்று, பெண்கள் தனிச்சிறை நிர்வாகத்தின் ஒத்துழைப்புடன் திட்டத்தை நடத்தி வரு கிறோம்" என்கிறார் மணிவாசன்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**







# புக் பேங்க்

**ஒற்றைக் கனவும் அதை விடாத நானும் - ராஜா சந்திரசேகர்**

உதிர்ந்த இலையையும், இழந்த காகிதத்தையும்கூட ரசிக்கும் கவிதைகள், சுற்றியிருக்கும் இயற்கையை வாழ்வோடு இணைத்து, ரசனையோடு வடித்து, வாசிப்பவர் ரசனையைக் கூட்டும் தொகுப்பு.

**காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை 600024, விலை. ரூ.70/-**

**கைலாஸ் - மானசரோவர் யாத்திரை சுவாமி கமலாத்மானந்தர்**

'இதற்கு மேல் ஒரு தீர்த்த யாத்திரை இல்லை' என்று இந்துக்கள் அனைவராலும் கொண்டாடப்படும், யாத்திரையின் உபயோகமான பல தகவல்களைக் கூறுவது. மானசரோவருக்கு நல்ல வழிகாட்டி.

**ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை 600004. விலை ரூ. 40/-**

**இந்து - முஸ்லிம் மோதல்கள் என்னும் பிரச்னை - எஸ்.ஆர்.பட், தமிழில்: பொன்னீலன்**

சுதந்திரம் பெற்றது முதல் வகுப்புவாதம் வளர்ந்த விதம், காரண காரியங்கள், சரித்திர, அரசியல், சமூகக் காரணங்கள் என்று அனைத்தையும் ஆதாரங்களோடு விளக்கி, வேற்றுமை மறையவும் வழி கூறும் நூல்.

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,41-பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 98 விலை: ரூ.35/-**

**தமிழில் அடிக்கடி நேரும் பிழைகளும் திருத்தங்களும் - தமிழண்ணல்**

தமிழை எழுதும்போது ஏற்படக்கூடிய பிழைகளும் அவற்றிற்கான திருத்தங்களும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ள நூல்.

**மீனாட்சி புத்தக நிலையம், 48, தானப்ப முதலி தெரு, மதுரை - 1. விலை ரூ.20**

**ஊர் கலைஞ்சு போச்சு - மா. நடராசன்**

கொங்கு நாட்டின் மண் வாசனை கமழ, எளிய கிராமப்புறத்தின் ஒரு நல்ல மனிதரை மையமாக வைத்து பின்னப்பட்ட நாவல். கொங்கு மண்ணின் அடையாளங்களைப் பிரதிபலிக்கிறது.

**தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட், 41- பி. சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை - 98. விலை ரூ. 69/-**

**தம்பி - நான் ஏது செய்வேனடா? பாரதிபுத்திரன்**

**நேர்காணல்: பா.இரவிக்குமார், இரா. பச்சியப்பன்**

பாரதியை ஒரு அரசியல்வாதியாக, கவிஞனாக, வேதாந்தியாக, அத்வைதியாக, இந்துவாக, இந்தியனாக என வெவ்வேறு கோணத்தில் படம் பிடித்துக் காட்டும் நேர்காணலின் தொகுப்பு.

**பொன்னி, 2/1758, சாரதிநகர், என்ஃபீல்டு அவென்யூ, மடிப்பாக்கம், சென்னை - 91.**

- விஷ்வக்

"இந்தப் பயல இன்னும் காணோமே! ஒரு நாளைக்காவது சீக்கிரம் வந்தோமுன்னு உண்டா?"

கடையை விட்டு வெளியே வந்து எட்டிப் பார்த்துவிட்டு, மறு படியும் உள்ளே போனார் மணி வேல்.

ஆறுக்கு எட்டு சைசில் கடை. அதில் வாடிக்கையாளர்கள் உட்கார ஒரு நீள பெஞ்சு, ஒரு பிளாஸ்டிக் சேர், ஒரு ஸ்டூல், சுவரை அடைத்த மாதிரி செவ்வக வடிவில் கண்ணாடி. அதற்கு முன் குஷன் வைத்த பெரிய சுழலும் நாற்காலிகள் இரண்டு.

காலை ஐந்து மணிக்கே வந்து கடையைப் பெருக்கி சுத்தம் செய்து, மூலையில் குவிந்திருந்த முடிகளை அள்ளிக் குப்பையில் போட்டு, சீப்பை யும் கத்தரிக் கோலையும் சுத்தம் செய்து, பாட்டிலில் தண்ணீர் ஊற்றி... என எல்லா வேலைகளையும் முடித்து விட்டார் மணிவேல். வையாபுரி இன்னும் வரவில்லை.

"இன்னும் என்ன பண்ணிகிட்டி ருக்கான்."

இப்போதெல்லாம் அவருக்கு வையாபுரியை நினைத்தாலே எரிச்ச லாக இருந்தது. ஒரு துணியை எடுத்து கண்ணாடியை அழுத்தித் துடைத்தார். துடைத்து விட்டு, கண்ணாடியின் மிக அருகே நின்று முகம் பார்த்தார். சொட்டு நீலம் போட்டு வெளுத்த மாதிரி தலை முடி வெள்ளையாய் இருந்தது. கத்தரிக்கோலை எடுத்து மீசையின் ஓரத்தை ஒழுங்குபடுத்தி னார்.

வாசலில் ஒரு சைக்கிளை ஸ்டாண்ட் போடும் சத்தம் கேட்டது. மணிவேல் எட்டிப் பார்த்தார். ஒரு இளைஞன் உள்ளே வந்தான்.

"பவுடர் இருக்கா?"

மணிவேல் டிராயரைத் திறந்து 'பாண்ட்ஸ்' டப்பாவை எடுத்து நீட்டி னார். வந்தவன் கைகளில் பவுடரைக்



**பாலு சத்யா**

"வையாபுரி இல்லியா?"

"இந்தா... இப்ப வந்துருவாப்ல. உக்காருங்க. ஷேவிங்கா, கட்டிங்கா?"

அவன் பதில் பேசாமல் கண்ணாடி முன் நின்று சீப்பை எடுத்து தலை வாரினான். சீப்பால் மீசையை நீவி விட்டுக் கொண்டான்.

கொட்டி நிதானமாக முகத்தில் பூசிக் கொண்டான். கர்சீப்பால் முகம் துடைத் துக்கொண்டான்.

"வையாபுரி கிட்ட லட்சுமிபுரம் பாலு, முருகன் வந்துட்டு போனாப்லனு சொல்லுங்க. அப்புறம் வரேன்" சைக்கிளில்

# காலி நாற்காலி



ஏறி விருட்டென்று போனான்.

மணிவேல் திரும்ப ஒருமுறை வெளியே எட்டிப் பார்த்துவிட்டு வந்தார். அன்றைய பேப்பர் பிரிக்கப்படாமல் கிடந்தது. அவரால் கண்ணாடி போடாமல் பேப்பர் படிக்க முடியாது. கண்ணாடி போட்டால் இவரிடம் முடிவெட்ட வருகிற ஒன்றிரண்டு வயதான வர்கள்கூட வர மாட்டார்கள். அதென்னவோ கண்ணாடி போட்டவன் சரியாக முடிவெட்ட மாட்டான் என்ற எண்ணம் எல்லோருக்கும் இருந்தது. அதனாலேயே இவர் கண்ணாடி போடுவதில்லை. வீட்டிலிருக்கிற சமயங்களில் மட்டும் போட்டுக் கொள்வார்.

சேதுராமன் வந்து தான் இவருக்கு செய்திகளை படித்துச் சொல்வார். அதுவும், வையாபுரி சாப்பிட்டுவிட்டு ரெஸ்ட் எடுக்கப் போகும் மதிய நேரத்தில் வருவார். படித்துவிட்டு இருவரும் நாட்டு நடப்புகளை சுவாரஸ்யமாக பேசிக் கொண்டிருப்பார்கள். அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் எதிர்பாராத விதமாக வையாபுரி வந்துவிட்டான்.

"மதிய நேரத்துல என்ன வெட்டி அரட்டை வேண்டிக் கெடக்கு?" என்றான். சேதுராமன் அப்படியே எழுந்து போய் விட்டார். இவர் அவன் வார்த்தைகளில் கூனிக் குறுகி நின்றார்.

'எத்தனை வருட உறவு! இவனால் எப்படி இத்தனை எளிதாய் வெட்டி எறிய முடிகிறது!' இவர் பதைத்துப் போனார். ஆனால், அதற்காக சேதுராமன் இவரைப் பார்க்க வருவதை நிறுத்தி விடவில்லை. இவன் இல்லாத சமயங்களாய் பார்த்து வருவார். அவனைப் படிக்க வைக்க வேண்டும் என்று

வலியுறுத்தியதே அவர்தான்.

மணிவேலின் ஒரே பிள்ளையான வையாபுரிக்கு ஒன்பதுக்கு மேல் படிப்பு ஏறவில்லை. அந்தப் படிப்புக்கு அவன் கற்றுக் கொண்ட உருப்படியான விஷயங்கள், சிகரெட்டும், சினிமா பார்ப்பதும். இப்படியே விட்டால் இவன் கெட்டுப் போவான் என்றுதான் இவனைக் கடையில் போட்டார் மணிவேல்.

சுவரில் மாட்டியிருந்த சிம்ரன் காலண்டர் காற்றுக்கு அசைந்தது. தொப்புள் தெரிகிற மாதிரி படம். பக்கத்திலேயே சிநேகா, மும்தாஜ், லைலா, ஜோதிகா படங்கள்.

''இதெல்லாம் எதுக்குப்பா?'' என்று ஒருமுறை கேட்டதற்கு, "உங்களுக்கு என்ன தெரியும்? உங்க சோலியப் பாத்துகிட்டு போங்க" என்று எரிந்து விழுந்தான்.

அவருக்குத் தெரிந்து இந்த இடத்தை எத்தனை படங்கள் அலங்கரித்திருக்கின்றன! என்.எஸ். கிருஷ்ணன், அண்ணா, சிவாஜி கணேசன், எம்.ஜி.ஆர், கலைஞர்... எல்லாமே ஃபிரேம் போட்டவை. அப்போதெல்லாம் யாராவது "நீங்க எந்தக் கட்சி?" என்று கேட்டால், சிரித்துக் கொண்டே, "நமக்கு எல்லாரும் வேண்டியவங்கதான்" என்பார். வையாபுரி அந்த ஃபிரேம் போட்ட படங்களைக் கழற்றிவிட்டு இந்தக் காலண்டர்களை மாட்டும்போது எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அவன் கேட்கவில்லை.

வாசலில் சைக்கிள் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. வெளியே பார்த்தார். சைக்கிளை ஸ்டாண்ட் போட்டுக் கொண்டிருந்தான் வையாபுரி. வாசலருகே வந்து இவருடைய தேய்ந்து போன ஹவாய் செருப்பைக் காலால் தள்ளி வைத்துவிட்டு, தன் புதிய பேட்டா செருப்பைக் கழற்றி வைத்தான்.

"என்னய்யா இம்புட்டு நேரம்?"

அவன் இவர் கண்களை உற்றுப் பார்த்தான். இவர் கண்களை தாழ்த்திக் கொண்டார்.

''மூணு பேரு வந்துட்டு திரும்பிப் போய்ட்டாங்க."

"ம்..."

உள்ளே வந்து சட்டையின் மேல் பட்டனைக் கழற்றி மார்பில் ஊதிக் கொண்டான். ஃபேன் ரெகுலேட்டரை ஐந்தில் வைத்தான்.

"சரி... போயி ஒரு டீ வாங்கிட்டு வாங்க."

ஐந்து ரூபாய்த் தாளை நீட்டினான்.

"புது டீத்தூள் போட்டு நல்லா போடச் சொல்லுங்க. கழனித் தண்ணி மாதிரி வாங்கிட்டு வந்துராதீங்க."

மணிவேல் தலையை ஆட்டிவிட்டு கையில் சொம்பை எடுத்துக் கொண்டு நடந்தார். பஸ் ஸ்டாண்டில் வேலைக்குப் போகிறவர்கள், கட்டட வேலைக்கு போகிறவர்கள், பருத்தியாபீசுக்குப் போகிறவர்கள்... என கலவையாய் மனிதர்கள் 'தேனி' பஸ்ஸுக்காகக் காத்திருந்தார்கள். எதிரே டிராக்டரில் வந்த ராமையா இவரைப் பார்த்து சிநேகமாக சிரித்துவிட்டுப் போனான். ராமையா வையாபுரியோடு ஸ்கூலில் படித்தவன். வையாபுரி மட்டும் எப்படி மாறிப் போனான் என்று இவருக்கு ஆச்சரியமாயிருந்தது. டீ வாங்கிக் கொண்டு திரும்புகையில் தேனி பஸ்ஸில் ஜனங்கள் முண்டியடித்து ஏறிக் கொண்டிருந்தார்கள்.

கடையில் இரண்டு வாடிக்கையாளர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஒருவனுக்கு சிகை அலங்காரம் நடந்து கொண்டிருந்தது. மற்றவன் பேப்பர் படித்துக் கொண்டிருந்தான். இருவருமே மேட்டுத் தெருக்காரர்கள். சிறு வயதில் இவரிடம் முடிவெட்டிக் கொண்டவர்கள்.

மணிவேல் சொம்பை ஓரமாக வைத்துவிட்டு பேப்பர் படித்துக் கொண்டிருந்தவனைப் பார்த்து சிரித்தார். அவன் கவனிக்காத மாதிரி பேப்பரில் தலையைப் புதைத்துக் கொண்டான். இவர் மர ஸ்டூலை வெளியே எடுத்துப் போட்டு உட்

''அரை நாள் லீவு போட்டுட்டு மானேஜர் வீட்டுக்கு ஓடறாரே, எதுக்கு...?

''தெருவில் தண்ணீர் லாரி வந்திருக்கிறதா செல்ஃபோனில் சேதி கிடைச்சுதாம்!''

– பம்மல் நாகராஜன்



கார்ந்துகொண்டார்.

ஒருவனுக்கு முடிவெட்டு முடிந்து, அடுத்தவன் நாற்காலியில் உட்காரும் இடைப்பட்ட நேரத்தில் வையாபுரிக்கு டீ ஊற்றிக் கொடுத்தார். ஷேவிங் பிரஷ்ஷைக் கழுவி வைத்தார். அவரும் ஒரு கிளாஸ் டீ குடித்து, டம்ளர்களையும் சொம்பையும் கழுவி வைத்தார்.

வையாபுரி இவரைக் கூப்பிட்டான்.

"அந்தா...! மூலைல இருக்குற பைல வசந்தாவோட அளவு ஜாக்கெட்டு, ஜாக்கெட் பிட்டும் இருக்கு. 'ராயல்' டெய்லர் கடையில குடுத்துட்டு வந்துருங்க. நாளைக்கு வேணும்னு சொல்லுங்க."

இவர் தலையாட்டிவிட்டு பையைத் தூக்கிக் கொண்டு நடந்தார். வசந்தா மணிவேலின் சொந்த அக்கா பெண். சிறு வயதில் 'மாமா! மாமா!' என்று சுற்றி வருவாள். இவரிடம் அவ்வளவு ஒட்டுதல். மனைவி இறந்த பிறகு வீட்டைக் கவனித்துக் கொள்ள ஆள் வேண்டுமே! என இவர்தான் கட்டாயப்படுத்தி வையாபுரிக்கு வசந்தாவைக் கல்யாணம் செய்து வைத்தார்.

'இந்த மனுசங்கதான் எப்படி மாறிப் போயிடுறாங்க.'

"ஆகாத மருமக நின்னா குத்தம்; நடந்தா குத்தம்' என்பது போல் வசந்தா இவரை நடத்தினாள். மணிவேலின் மேல் படிப் படியாய் ஒரு துவேஷம் அவளுக்கு வளர்ந்து வந்திருந்தது. இவருடைய இத்தனை வருட சம்பாத்தியத்தில் சேமிப்பு என்பதே இல்லை என்ற ஆதங்கம் அவளுக்கு.

எதிரே நடேசன் வாத்தியார் வந்து கொண்டிருந்தார். இவருடைய நிரந்தர வாடிக்கையாளர்கள் சிலரில் ஒருவர். ரிடையரானாலும் இன்னும் பிள்ளைகள் கையை எதிர்பார்க்காமல் மனைவியுடன் இங்கேயே வசிப்பவர்.

"வணக்கம் சார்."

"என்ன மணி! எப்படியிருக்க?"

"நல்லாருக்கேன் சார். பசங்கட்டருந்து கடுதாசி எதும் வந்துச்சா?"

"ஆமா, அவனுங்க கடுதாசி போட்டுகிட்டுதான் இருக்கானுங்க, 'மெட்ராஸுக்கு வாங்க, மெட்ராஸுக்கு வாங்கன்னு'! எனக்குத்தான் போகப் பிடிக்கலை. அங்க போனோம்னு வையி, அரை டம்ளர் காபிக்கிக்கூட மருமக கைய எதிர்பாத்துகிட்டு நிக்கணும். இப்போ 'வா! வா!'ன்னு கூப்புடுறவனுக்கு நாளாவட்டத்துல ஒரு



"வானிலை அறிவிப்பாளர் கிரிக்கெட் ரசிகர் போலிருக்கு!"

"ஏண்டா?"

"சச்சின் அடித்த பந்தின் வேகத்தில் புயல் ஆந்திராவிலிருந்து ஒரிஸ்ஸா நோக்கி சென்று கொண்டிருக்கிறதுன்னு அறிவிக்காரே!

— உ. ராஜாஜி

வெறுப்பு தானா வந்துடும். அவங்க வாழ்க்கய அவங்க வாழ்ந்துகிட்டு இருக்காங்க. நாம ஏன் தொந்தரவு பண்ணனும். எப்பவுமே தூரத்துப் பச்சதான் கண்ணுக்குக் குளிர்ச்சி. இப்ப எனக்கு என்ன குறை? பென்ஷன் பணம் வருது. எனக்கும் என் பொண்டாட்டிக்கும் தாராளமா அது போதும். புள்ளைங்கள வளத்து ஆளாக்கறது நம்ம கடமை. அதை சரியா செஞ்சுட்டேன். இன்னும் அவங்களை எதிர்பாத்துகிட்டிருக்கறது சரியா? என்ன நான் சொல்றது?"

"உண்மைதாங்க." மணிவேலுக்கு எங்கேயோ குத்தியது.

நடேசன் வாத்தியார் குடையை விரித்துக் கொண்டு நடந்து போனார்.

'இவர மாதிரி அரசாங்க வேலை கெடச்சுருந்து எனக்கும் பென்ஷன் பணம் வந்துச்சுன்னா இவ்ளோ பிரச்னை இல்லியோ; பென்ஷனா? முடி வெட்டுறதுக்கு யாரு பென்ஷன் குடுப்பா!"

சிரித்துக் கொண்டார்.

டெய்லர் கடையில் வேணு இருந்தான். இவர் கொடுத்த பையை வாங்கி, ஜாக்கெட் பிட்டை டேப்பால் அளந்தான்.

"வையாபுரி நாளைக்கி வேணும்னு சொல்லச் சொன்னான்."

"ம்... நாளைக்கி சாயந்தரம்தான் கெடைக்கும்."

இவர் திரும்பி நடந்தார். கடையில்

இப்போது நான்கைந்து பேர் உட்கார்ந்திருந்தார்கள். அதில் தன்னிடம் முடிவெட்டத் தயாராய் இருப்பவர்கள் யார்? என ஒவ்வொரு முகமாய் ஆராய்ந்தார். ஒன்றுகூட இல்லை. இன்னொரு சுழலும் குஷன் நாற்காலி காலியாகவே இருந்தது. இவர் உள்ளே போய் கீழே உதிர்ந்து கிடந்த முடிகளை விளக்கு மாற்றால் கூட்டி ஓரத்திற்குத் தள்ளினார். கடைக்குப் போய் சவா பிளேடு ஒரு பாக்கெட் வாங்கி வந்தார்.

பெருமாள் நாயக்கர் வந்தபோது கடையில் மூன்றுபேர்தான் இருந்தார்கள். பெருமாள் நாயக்கர் ஊர்ப் பெரியவர். வையாபுரி அவரைப் பார்த்ததும் வணங்கி, பவ்யமாக பிளாஸ்டிக் நாற்காலியை இழுத்துப் போட்டான்.

## சொக்கர் பாலி!



பெங்காலி இயக்குனர் ரிதுபூர்ணா கோஷ் இயக்கும், 'சொக்கர் பாலி' என்ற படத்தில் நடிக்கிறார் ஐஸ்வர்யா ராய். இந்தக் கதை ரவீந்தரநாத் தாகூர் எழுதியது. காசியில் வசிக்கும் இளம் விதவையைப் பற்றிய கதை. விதவையாக நடிக்கிறார் ஐஸ். "படம் ரிலீஸ் ஆனதும் பெரும் பரபரப்பை ஏற்படுத்த போகிறது பாருங்களேன்" என்கிறார் ஐஸ். பார்ப்போமே!

— எம்.

"என்ன வையாபுரி! கூட்டம் ஜாஸ்தியா?"

"இல்லீங்கய்யா... இந்தா பத்து நிமிஷம்... ஆய்டும்."

நாற்காலியில் அமர்ந்தார்.

"என்ன மணி! எப்படியிருக்க?"

"நல்லாருக்கேங்கய்யா." மணிவேல் குழைந்து சிரித்தார்.

"ம்... பையன் தலையெடுத்தாச்சு. அப்புறம் என்ன? வீட்ல அக்காடான்னு ரெஸ்ட் எடுக்க வேண்டியதுதானே!"

மணிவேல் மழுப்பலாகச் சிரித்தார்.

மணிவேலைப் பார்க்க வையாபுரிக்கே ஒரு மாதிரியாக இருந்திருக்க வேண்டும்.

"இந்தாங்க... வீட்டுக்குப் போயி சோறு ஆய்டுச்சுன்னா எடுத்துட்டுப் போயி கார்த்திக்குக் குடுத்துட்டு வந்துருங்க."

மணிவேல் தளர்ந்து போய் நடந்தார். கடையிலிருந்து நான்கு தெரு தள்ளி இருந்தது வீடு.

வசந்தா டிபன்பாக்ஸ் கூடையை இவரருகே வைத்துவிட்டு உள்ளே போனாள். இவர் உள்ளே போய் பானையிலிருந்து தண்ணீரெடுத்து 'மடக், மடக்'கென்று குடித்தார். திண்ணையிலிருந்த வயர்க் கூடையை கையில் எடுத்துக் கொண்டு வெயிலில் இறங்கினார்.

இவர் போனபோது பள்ளிக்கூடம் விட்டிருந்தது. பிள்ளைகள் வெளியே குச்சி ஐஸ் தின்று கொண்டு, இலந்தைப் பழ வியாபாரியை சூழ்ந்து கொண்டு, அங்குமிங்கும் ஓடிக் கொண்டு குதித்துக் கொண்டிருந்தார்கள்.

கார்த்திக் எங்கிருந்தோ ஓடிவந்து, "தாத்தா!" என்று இவர் காலைக் கட்டிக் கொண்டான். இவர் அவனை அள்ளித் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு ஒரு மரத்தடிக்கு போனார்.

"இன்னிக்கு நல்லா படிச்சியா?"

"ம்..."

"என்ன படிச்ச?"

"ரைம்ஸ். ரெயின் ரெயின் கோ அவே."

"அப்படின்னா?"

"ம்... அப்படின்னா... மழை இல்ல, மழை... அதை போய்ட்டு வான்னு சொல்றோம்."

"மழைய போய்ட்டு வான்னா, அப்புறம் விவசாயம் எப்படி பண்ணுவாங்களாம். நாம எப்பிடி தண்ணி குடிக்கறது... சாப்புடுறது?"

இவர் சிரித்தார். அவன் சிணுங்கினான்.

"போ! தாத்தா"

இவர் சாதத்தைப் பிசைந்து அவனுக்கு ஊட்டினார்.

"ஏன் தாத்தா, ஒருநாள் கூட அப்பா சாப்பாடு எடுத்துட்டு வர மாட்டேங்கறாங்க."

"ம்... அவருக்கு வேல இருக்குல்ல..."

"அப்போ...உனக்கு வேல இல்லியா?"

"ப்ச், ம்ஹூம்" இவர் உதட்டைப் பிதுக்கினார்.

"கவலைப்படாத தாத்தா. நான் நல்லாப் படிச்சு பெரிய ஆளாயி, ஒனக்குத் தனியா கடை வச்சுத் தரேன். என்ன?"

மணிவேல் டிபன்பாக்ஸை கீழே போட்டுவிட்டு, அவனைக் கட்டிக் கொண்டு குழந்தை மாதிரி கேவிக் கேவி அழுதார்.

## மேஷம்



இரண்டாவது சுற்று ஏழரைச் சனி நடைமுறையில் உள்ளவர்களுக்கு, சுபப் பலன்கள் நடக்கும். குடும்பத்தில் குதூகலமான நிலைமை அமையும். சிலர், புதிய வீடு வாங்கும் முயற்சியில் வெற்றி காண்பார்கள். பெண்களுக்கு உற்சாகமான மனநிலை ஏற்படும். குருபகவான், சுக்கிரனைப் பார்ப்பதால், திருமணம் போன்ற சுபகாரியங்கள் சடுதியில் நடைபெறும். தெய்வீகப் பிரார்த்தனை நிறைவேறும். எதிர்பார்த்த பொருளாதார உதவி கிடைக்கும். பயணத்தால் அனுகூலம் உண்டு.

## ரிஷபம்



உங்கள் ராசிநாதன் சுக்கிரனுக்கு, சும்மா ஒரு சல்யூட் அடிச்சு வையுங்க. அவர்தானே 9ம் இடத்தில் அமர்ந்து, குருவுக்கு சம சப்தம பார்வையும் பெற்று உலவுகிறார்? அப்படியானால் எல்லா வகையிலும் அனுகூலமான போக்கு தென்படும்படி செய்து விடுவார். சனியுடன் பரிவர்த்தனை வேறு 'ஆஹா ஓஹோ' என நடப்பதால், தேவையான பண வசதியும் ஜம்மென்று வாய்க்கும். தெய்வீக ஈடுபாடு ஏற்படும். குடும்பத்தில் கணவன் - மனைவி உறவுநிலை மிகச் சீராக இருக்கும்.

## மிதுனம்



'நீசபங்க ராஜயோகம்'னு பலரும் பிரமாதமாகச் சொல்லக் கேட்டிருப்பீங்க. அந்த விசேஷ அம்சம் இந்த வாரம் உங்க கிரக சஞ்சாரத்தில் அமைஞ்சிருக்கிறதனாலே, சர்வம் சந்தோஷமயம்தான். வியாபார விஷயத்திலும், சகல வகையிலும் அனுகூலம் உண்டாகும். அலுவலகத்தில் ஆரோக்கியமான சூழ்நிலை நிலவும் என்பதால் டென்ஷன் இல்லாமல் வேலை செய்வீங்க. புதிய உத்தியோகம், பதவி உயர்வு என மனசுக்குப் பிடிச்ச விஷயங்களா நடக்கும். கூட்டுத் தொழில் அனுகூலம் தரும்.

## கடகம்



கடக ராசிக்குரிய மாணவச் செல்வங்களே... இந்த வாரம் முன்னேற்றப் படிகளில் கிடுகிடு என ஏறி, சாதனைச் சிகரத்தைத் தொடும் முயற்சிகளில் இறங்குவீங்க! படிப்பு, கல்வி கேள்விகளில் எதிர்பாராத வெற்றியும், சரளமான பண வசதியும் கைகோத்து வருவதால், உற்சாகமான மனநிலை ஏற்படும். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், கெமிக்கல்ஸ், மருத்துவம், ஜவுளி ஆகிய வகைகளில் ஆதாயம் ஏற்படும். குடும்பத்தில் சுபமங்கள காரியங்கள் நடைபெறும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

## சிம்மம்



“ஏதோ காலா காலத்துலே கல்யாணம்னு பண்ணிக்கிட்டு, லைஃபிலே செட்டில் ஆகலாம்னு பார்த்தா முடியுதா? இழுத்துக்கிட்டே போகுதே!' என்று இனியும் கவலைப்படத் தேவையில்லை. திருமணமாகாதவர்களுக்கு அதற்கான வாய்ப்புகள் கூடி வரும். புதிய பொருள் சேர்க்கை, தெய்வப் பிரார்த்தனை, புனித ஸ்தல யாத்திரை ஆகியவை உண்டாகும். பெரியோர்களின் ஆலோசனை ஏற்று மதித்து அதன்படி நடப்பது நல்லது. வெளிநாட்டுத் தொடர்பு உடைய தொழில் வர்த்தகம் ஆதாயம் தரும்.

## கன்னி



ஒரே ஒரு குழப்பத்துக்கே குழம்பிப் போய் நிற்கிற நீங்க, பந்து மித்ர பரிவாரங்களுடன் குழப்பக் கடல் ஒண்ணு நீந்தி வந்தா, திகைச்சுத்தானே போவீங்க. இனி குரு பலம் பரிபூரணமான சிக்னல் காட்டுவதால், இருப்திகரமான குடும்ப வாழ்க்கை அமையும். கூட்டுத் தொழில் நன்மை தரும். கலைத் துறை, சினிமா, சங்கீதம் போன்ற இனங்களில் எதிர்பாராத லாபம் உண்டு. பெண்களுக்கு உற்சாகமான மனநிலை உண்டாகும். மக்களால் மகிழ்ச்சி உண்டாகும்.

## நடக்குமென்பார் நடக்கும்!



சமையல் ராணி மல்லிகா பத்ரிநாத்துக்கு (கடகம்) வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

## துலாம்



''யார் பார்த்தா என்ன? எதைப் பார்த்தா என்ன? நம்ப பிழைப்பு நல்லா இல்லே'' என்று வெறுத்துப் போய் புலம்பு வது நியாயமில்லைதான். ஏன்னா, இந்த வாரம் ராசிநாதனாகிய சுக்கிரன், சனி பரிவர்த்தனை ஆன சஞ்சாரம் என்பதால், தெளிவான மனநிலையோடு எடுத்த காரியங்களில் வெற்றிக் கொடி கட்டப் போறீங்க. அரசு விவகாரங்களில் எதிர் பார்த்தபடி அனுகூலம் உண்டாகும். சுப மங்கள காரியங்கள் சட்புட்டென்று நடந்து சந்தோஷம் கூட்டும்.

## விருச்சிகம்



''புதிய தொழில் ஆரம்பிக் கணும். இப்ப சரியான நேரந் தானா?'' என்று சகுனம் பார்த்துக் காத்துக் கிடந்திங்க இல்லையா? இதோ தவிடு தொட்டாலும், சொக்கத் தங்கமாக மாறும் அயனான அமைப்பு அப்படியே அல்வா மாதிரி வந்து அமர்ந் திருக்கிறது. ஆரம்பிங்க, உற்சாகத்துடன். சுயதொழில் ஏற்றம் தரும். பொருளாதார அபிவிருத்தி உண்டாகும். வர வேண்டிய தொகை வசூலாகும். உத்தியோக வகை யில் சிறு குழப்பங்கள், பிரச்னை ஏற்பட்டு உடனடி நிவாரணமும் கிடைக்கும்.

## தனுசு



உடல்நிலை ஆரோக்கிய மாக இருந்தால், மனநிலை யும் உற்சாகமாக இருக்கும். எனவே, உடல் நலத்தில் நீங்கள் கவனம் செலுத்தியே ஆக வேண்டும். குறிப்பாக பெண்கள் மன அழுத்தத்தைத் தவிர்த்து, புத்துணர்ச்சி கொள்வது அவசியம். உங் கள் ராசிநாதன் குரு 8ல், உச்சம் பெற்றும் ராசியில் செவ்வாய் 6ல் சனி / ராகு சஞ் சாரம் என்பதால், எதிரிகள் ஓடி ஒளிவார் கள். எதிர்ப்புகள் மறையும். தேவைக்கேற்ப பணவசதி, தெய்வ பலம் கிடைக்கும் என்பதால், சமாளியுங்க.

## மகரம்



உங்கள் ராசிநாதனாகிய சனி பகவான், பூர்வ புண் ணியஸ்தானத்தில் அமர்ந்து சுக்ரனுடன் பரிவர்த்தனை பெற்று சஞ்சாரம் புரிகிறார். இதனால் உங்க மதிப்பும் புகழும் ஓஹோன்னு உசரப் போகுது. உத்தியோக சமாசாரத் திலும் எதிர்ப்புகள் விலகி, அமைதியான சூழ் நிலையே ஏற்படும். வழக்கு விவகாரங் களில் அனுகூலமான திருப்பம் ஏற்பட்டு வெற்றி ஏற்படும். புதிய முயற்சிகள் கூடிவரும். பதறாமல் காரியங்களில் ஈடுபடவும்.

## கும்பம்



''கை நிறைய 'டப்பு' இல் லேன்னா, கப்சிப்னு ஓரமா முடங்கிக் கிடக்க வேண்டி யதுதான்..''னு என்னமா புலம்பித் தவிச்சீங்க? இதோ உங்களுக்கு புதிய திருப்பம் வரப்போகிறது பொருளா தார நிலைமையில்! குறிப்பாக பெண் களுக்கு புதிய பொருள் சேர்க்கை, ஆரோக்கிய மேன்மை ஏற்படும். வெளி நாட்டிலிருந்து எதிர்பார்த்த நல்ல செய்தி இப்போது வந்து சேரும். மாணவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். பூர்வீக சொத்து, விவகாரம், வழக்கு அனு கூலமாகும்.

## மீனம்



உத்தியோகத்தில் மிகச் சிறந்த பலன்கள் ஏற்படும் என்பதால், அனுகூலமான திருப்பங்களை வரவேற்கத் தயாரா இருங்க. நிறுவன நிர்வாகத் துறையில் உள்ளவர்கள் மிகவும் மேன்மை அடைவார்கள். பயணத்தால் ஆதாயம் உண்டு என்றாலும், போக்குவரத்து சமயத்தில் கவனம் தேவை. பழைய கடன் தொல்லை மறையும். கையிருப்பு அதி கரிக்கும் மன அமைதி கூடும். மனை, நிலம், ரியல் எஸ்டேட் இனங்களில் எதிர் பாராத லாபம் கிடைக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சிக்குக் குறைவில்லை.

மார்ச் 26 முதல் ஏப்ரல் 1 வரை

# யாரிடம் சொல்வேனடி தோழி!

**வா**சலில் நின்றிருந்த மரத்தின் காலடியில் விழுந்து கிடந்த நிழல், காற்றின் வீச்சில் மெல்ல மேலெழுந்து வீட்டினுள்ளே எட்டி எட்டிப் பார்த்தபடியிருந்தது.

உணர்வுகளின் உச்சத்தில் வார்த்தைகள் குழறின. நெற்றி, கன்னம், கழுத்து என முக மெங்கும் ஈரமாயின.

'சாரிப்பா... சாரிப்பா...' வார்த்தைகள் உள் ளுக்குள் முணுமுணுத்தபடியிருந்தன.

ஒருவரையொருவர் பார்த்தபடி நின் றிருந்தனர் சுந்தரும், அஞ்சலியும்.

'நறுக்'கென்று அவனின் கையைப் பிடித்துக் கிள்ளினாள் சுந்தர்.

"அய்யோ... பாவி, எப்படி கிள்ற..." வலி யோடு சிணுங்கினாள்.

"எவ்ளோ அழுத்தம் உனக்கு. காலையில சொல்லாமக்கூட பிள்ளையைத் தூக்கிக் கிட்டு கிளம்பிப் போறே...!"

"ஆமா, நீ மட்டும் என்னவாம்? கிளம்புற வரைக்கும் உம்முனு முகத்தை வச்சுக்கிட்டுப் படுத்து கிடப்பே...!"

இடைமறித்தான் சுந்தர்.

"ப்ளீஸ்... வேண்டாம்ப்பா, ஏட்டிக்குப் போட்டி பேசிப் பேசி, அப்புறம் அது சண் டையா முடிஞ்சிடுது. சண்டைப் போட் டுட்டு அப்புறம் இந்த மனசு படுற பாட்டை சமாளிக்க முடியலே..." சொல்லும்போதே கண்கள் கலங்கின சுந்தருக்கு.

"பசிக்குதுப்பா... எனக்கு!" என்றாள் அஞ்சலி.

"ஆமாம்ல, நீ ராத்திரி கூட சாப்பிடலைத் தானே! இரு, உனக்கு சாதம் பிசைஞ்சு தர்றேன்..."

சொல்லிவிட்டு சமையலறைக்குள் நுழைந்தான்.

தூணோரமாய்ச் சாய்ந்து உட் கார்ந்தாள் அஞ்சலி.

சாதத்தைப் பிசைந்து கொண்டே வந்த சுந்தர், "ம்ம்... கைய நீட்டுப்பா...!" என் றான்.

"ம்ஹூம்... வேணாம்..." தலை யாட்டி மறுத்தாள் அஞ்சலி.

"பசிக்குதுன்னு சொன்னே, சாதம் பிசைஞ்சு தந்தா வேண்டாங் குறியே...!" குழப்பமாய்க் கேட்க,

'ஆ...' என்று வாயைத் திறந்து காட்டி னாள்.

"ஓஹோ... குழந்தையாயிட்டீங்களா...?" என்று கிண்டலாய்க் கேட்டபடியே சாதத்தை உருட்டி, உருட்டி ஊட்டி விட்டான்.

அவள் சாப்பிட்டு முடித்ததும், தட்டை எடுத்துக் கொண்டு தோட்டத்திற்கு வந்தான் சுந்தர்.

பின்னாலேயே ஓடி வந்து, அவனை முது கோடு சேர்த்தணைத்துக் கொண்டாள் அஞ்சலி.

"விடுப்பா... கை கழுவணும்...!" என்றான்.

அஞ்சலி பக்கெட்டில் தண்ணீர் எடுத்து வந்து, அதில் அவனது கையை விட்டு, தன் கையால் அழுந்தத் துடைத்து தேய்த்து விட் டாள். அவளது புடைவை முந்தானையில் கைகளைத் துடைத்தான்.

தோட்டத்து வாசற்படியில் சாய்ந்து உட் கார்ந்தாள் அஞ்சலி. அவள் நெஞ்சில் தலை வைத்துச் சாய்ந்து கொண்டான் சுந்தர். அவளுடைய கைகளை எடுத்து, தன் கழுத்தைச் சுற்றிக் கொண்டு, விரல்களால் பின்னிக் கொண்டான்.

"அஞ்சலி..."

"ம்ம்..."

"என்னைப் பிடிக்குந்தானே உனக்கு?"

இது என்ன புதுக்கேள்வி என்பது போல், பதிலுக்கு அவள் கேட்டாள்.

"என்னை உனக்குப் பிடிக்குமா?"

"எதிர்க்கேள்வி கேட்காம, பதில் சொல் லுப்பா...!"

"அப்புறம்... பிடிக்குமான்னு கேட்டா, என்ன அர்த்தம்?"

"அய்யோ... சொல்லேன்...!"

தலையைக் குலுக்கிக் கொண்டே அஞ் சலி சொன்னாள்...

அ. வெண்ணிலா

"பிடிக்கும்ன்னு சொல்றது சாதாரண வார்த்தை... ம்ம்... இந்த காற்று, வானம், பூமி, கவிதை, மழை, பூக்கள்... எல்லாம், எல்லாத்தையும் உன் மூலமாத்தான் நான் பார்க்கணும். என்னோட ஆரம்பப்புள்ளியே நீதான்...!"

உடல் சிலிர்த்தது சுந்தருக்கு.

அஞ்சலியின் இடது கையை, தன் வலது கையால் இறுகப் பிடித்தான். ஒரு நிமிட மௌனத்திற்குப் பிறகு கேட்டான்.

"அப்புறம் ஏம்ப்பா, என்னோட சண்டை போட்டு கோவிச்சுக்கிட்டுப் பேசாம இருக்க?"

"நானா சண்டை போடுறேன், நீதானே என்னைத் திட்டுற? உனக்குப் பிடிக்கலேங்கிறதுக்காக என்னோட இயல்புகளை எல்லாம் உடனே நான் மாத்திக்கணுங்கிறது என்ன நியாயம்? எல்லாஞ் சேர்ந்தது தானே நான்! என்னை எனக்காகத் தானே நீங்கப் பார்க்கணும்..."

"நான் எதுவுமே உன்னைச் சொல்லக் கூடாதா? நீ சொல்ற, செய்ற எல்லாத்தையும் சரின்னு ஏத்துக்கிடணுமா? அதுதான் அன்புன்னு சொல்றியா?"

"சொல்ற விதம் இருக்கில்ல...!" அஞ்சலி சொல்ல சட்டென்று சுந்தர் கேட்டான்.

"அப்படியென்னா, நா தப்பா சொல்லிட்டேன்!"

சுந்தரின் தலைமுடியைக் கோதி விட்டபடியே, சொன்னாள் அஞ்சலி.

"வழக்கமான கணவன், மனைவியை அதிகாரம் பண்ற மாதிரி, அதட்டல் தொனியில சொல்நீங்க. எனக்கு அது அறவே பிடிக்கல. நான் என்ன நீ சொன்னா கேட்க மாட்டேனா...? பிறகு ஏன் அப்படிச் சொல்லணும்? நீ என்னதான் பேசினாலும்,

## 12



யோசிச்சாலும் அடிப்படையில ஆம்பளைக் குணம் உங்கிட்ட மாறாமத்தானிருக்கு. அதான் பிரச்னை...!"

"சராசரி ஆம்பள மாதிரியா நானும் உங்கிட்ட நடந்துக்கிறேன்...!"

"சராசரி இல்லைன்னு நீ எதை வச்சு சொல்ற? மோசமான வார்த்தைகள்ல திட்டறது, வாடி, போடின்னு சொல்றது, அடிக்காம இருக்கிறது... இதெல்லாம் இல்லேன்னு இருக்கிறதுனால, உடனே நீங்க சராசரி இல்லேன்னு நினைச்சுக்கிறீங்களா...?"

"இதையெல்லாம் தாண்டி, உன்னை நான் உயர்வா நடத்தலையா?"

"உயர்வு, தாழ்வுங்கிற பேச்சுக்கே இடமில்லை. அனுகுமுறைதான் அவசியம். இப்ப அதுதான் பிரச்னையே. குடும்பம்ன்னா அது ஏதோ ஒரு கட்டுப்பாடான வெறும் நிறுவனம்ங்கிற மாதிரி நினைச்சுடுறோம். அது தப்பு. அது மட்டுமில்லாம, அந்த நிறுவனத்தோட ஒழுங்கும், நிர்வாகமும் என்னோடது போலவும், அதோட பெருமையும், சிறுமையும் மட்டுமே உன்னோடது போலவும், நீங்களே நினைச்சுக்கிறது அதைவிட மகா தப்பு. இதனால தான், அதிகாரம் பண்ற இடத்துல உங்களையும், கீழ்ப்படிஞ்சு வேலை செய்ற இடத்துல என்னையும் வச்சு பார்க்கப் பழகிக்கிறீங்க. அதிகாரங்கிறது சுத்தமான குரல்ல மிரட்டிச் சொன்னாலும் ஒண்ணுதான். ஒரு சின்ன முகச் சுளிப்புல காட்டினாலும் ஒண்ணு தான்..!"

"என்ன அஞ்சலி, இப்படியெல்லாம் பேசுற?" இலேசாய் சமாளித்தவனாய்க் கேட்டான் சுந்தர்.

"ஆமாம்ப்பா, நாம சேர்ந்து வாழணுங்கிற முடிவுலத்தான் ஒண்ணா சேர்ந்தோமேயொழிய, குடும்பத்தைக் கட்டிக் காக்கணும், அதோட ஒழுங்குகள் குலைஞ்சிடாம பார்த்துக்கணும்னு கட்டாயமெல்லாம் நமக்கில்லேயில்ல. ஒரு சின்ன இலை அசைவுக்குக்கூட நம்ப ரெண்டு பேர்க்கிட்டேயும், ஒருத்தர் மேல இன்னொருத்தர் அதிகாரம் பண்ணணுங்கிற எண்ணம் வரவே கூடாது. இது ஏதோ உன்னோட தப்பு மட்டுமில்ல, நம்ம சமூகத்தோட வளர்ப்பில இருக்கிற தப்பு. ஒருத்தர் மேல ஒருத்தர் அன்பு வைக்கிறோம்னாலே, ஏதோ அவர்களுடைய ஆளுமை மொத்தமும் நமக்கு அடிமைன்னோ, சொந்தம்ன்னோ நினைச்சுக்கிறோம். தனிப்பட்ட முறையில அவரவர்களுடைய தனித்துவம் காக்கப்படணும். அதுக்கு உரிய மரியாதையும், கவனிப்பும் கட்டாயம் கிடைக்கணும். இதுதான் அன்பு செய்யறதோட அடிப்படையா இருக்கணுமேயொழிய, அடுத்தவரை தனக்குக் கீழ்ப்படிய வைக்கிறதா இருந்தா, அது எப்படிச் சரியா வரும்?"

பேசப் பேச அஞ்சலியின் தொண்டை அடைத்தது. அஞ்சலியைப் புதிராய்ப் பார்ப்பது போல் உற்றுப் பார்த்தான் சுந்தர். அவள் பேசுவதெல்லாம் அவனுக்கும் உடன்பாடான ஒரு விஷயம்தான். இருந்தாலும் நம்மையும் மீறி எங்கே தவறு செய்கிறோம்... என்கிற குழப்பம் வந்தது.

"அன்புங்கிறது ரொம்பவும் மென்மையா கையாளப்பட வேண்டிய ஒரு விஷயம். நம்ம நாட்டில இன்னைக்கு அன்புகூட வன்முறையா மாறிட்டிருக்கு. ஒரு தாய் தன் குழந்தை மேல அன்பு வைக்கிறதுனாலேயே, குழந்தை முழுக்க முழுக்க அம்மாவோட பராமரிப்புல, பொறுப்புல தான் இருக்கணும்னு பெண்கள் மேல கூடுதல் அழுத்தம் தரப்படுது. தாய்மைங்கிறது இயற்கையிலேயே பெண்களுக்குக் கிடைச்சிருக்கிற ஒண்ணு. அதைப் புனிதப்படுத்துறதா நினைச்சுக்கிட்டு மீண்டும், மீண்டும் பெண்கள் மேல வன்முறையைத்தான் ஆதிக்கமா செலுத்துறாங்க. குடும்பத்தில, குடும்பத்தில உள்ளவங்க மேல அவளுக்குள்ள அன்பையே காரணங்காட்டி, அவளைக் குடும்பக் கைதி மாதிரி மாத்திடுறோம்..!"

சற்றே பேச்சை நிறுத்திவிட்டு, சுந்தரின் முகம் பார்த்தாள் அஞ்சலி. அவன் முகத்தில் குழப்ப ரேகைகள் விலகி, ஒளி படர்வதைப் போலிருந்தது.

---

"அவர்தான் எதிர்வீட்டுக்கு வந்த புது மாப்பிள்ளையா?"

"ஆமாம். எதுக்குக் கேட்கறீங்க?"

"பாவம்! வீடு ரெண்டு பட்டா மாப்பிள்ளைக்குத் திண்டாட்டம்!"னு புது மொழி சொல்றாரு!

- சாவித்திரி வேங்கடசுப்ரமணியன்



மறுபடியும் தொடர்ந்தாள்.

"வேறு வேறுபட்ட கருத்துகள் கொண்ட இரண்டு பேராலும் சேர்ந்து வாழ முடியும். ஒருத்தர் அடுத்தவரோடு உணர்வுகளைப் புரிஞ்சுக்கிட்டா, அதை மதிச்சு நடந்துக் கிட்டா... பிரச்னைக்கு இடமேயில்லை. எப்ப 'தான்'ங்கிற உணர்வு மேலோங்குதோ, அப்பவே பிரச்னைக்கு ஆரம்பப்புள்ளி துவங்கிடுது. நான் ஆம்பளை, நீ பொம் பளை... நா சொல்றதை நீ கேளு, நா சொல்ற படி நட, என்னோட விருப்பம், ஆசை இவையெல்லாம்தான் முக்கியம்னு வரயில, அந்த இடத்தில பெண் ஒட்டுமொத்தமா புறக்கணிக்கப்படுறா. இதை பல கோடிக் கணக்கான சராசரி பெண்கள் 'எல்லாம் இப்படித்தான்'னு ஏத்துக்கிட்டு வாழ்ந் துடுறாங்க. என்னால் அப்படி வாழ முடியலையே... சுந்தர்..."

வெடித்துக் கொண்டு வந்த அஞ்சலியின் குரலில் சுந்தருக்கு எல்லாமே புரிந்தது.

முகம் புன்னகையால் ஒளிர்ந்தது.

"ஹலோ... என்ன... வெறிச்சுப் பாத்துக் கிட்டு நீயே சிரிச்சுக்கிறே....?" அஞ்சலி கேட்டாள்.

"எனக்கு என்ன சொல்றதுன்னே புரிய லப்பா, ஆனா, இதுநாள் வரை நானும் எனக் குள்ளே போட்டிருந்த பனித்திரை திடீர்னு இப்ப விலகின மாதிரி ஒரு உணர்வு கிடைச்சிருக்கு!"

அஞ்சலியும் புன்னகைத்தபடி சொன் னாள்.

"இதைக் கேட்கவே ரொம்ப சந்தோஷமா இருக்கு சுந்தர். ஆனா, ஒண்ணு மட்டும் சொல்றேன். வாழ்க்கைங்கிறது இது மட்டு மில்லே. இதுக்கும், இதுக்கும் மேலே... என் னென்னவோயெல்லாம் இருக்கு. அதோட ஆரம்பப்படிகள்ல நின்னுதான் நீயும் நானும் இப்படிப் பேசிக்கிட்டு நிக்கிறோம். இன்னும் உயர, உயர நமக்குள்ளான அன்பும், நெருக் கமும் இன்னும் உறுதியானதா, ஈரமானதா இருக்கும். நான் ஏதாவது தப்பா பேசினா, தப்புன்னு சுட்டிக்காட்டு, ஆனா, அடுத்த நிமிஷமே அதுக்காகக் கோபப்பட்டுக்கிட்டு யாரும் யாரோடயும் பேசாம இருக்கக் கூடாது. அடுத்த நிமிஷமே முகம் பார்த்து சிரிச்சிட்டா, நம்ம தப்பை நம்மால உணர்ந் துக்க முடியும். ரோட்டில நடந்து போகயில, ஒருத்தர் நம்ம காலை மிதிச்சிடுறாரு. உடனே நாம கோபப்பட்டு வலி பொறுக்காம திட்டு றோம். அவரு தப்பை உணர்ந்து 'சாரி' சொன்ன அடுத்த நிமிஷமே, 'பரவா யில்லே'ன்னு சொல்லி நாம சிரிக்கிறதில் லையா... அப்படித்தாம்பா, இந்த வாழ்க்கை ஓட்டத்தில நாமளும் பரஸ்பரம் சிரிச்சுப் பேசிக்கணும், எவ்வளவு கோபமா சண்டை போட்டுக்கிட்டாலும்...!"

அஞ்சலியின் முகத்தைக் கைகளில் தாங்கி, கன்னத்தில் கண்களில் என மாறி மாறி முத்தமிட்டான்.

இருவருடைய மனங்களும் துடைக்கப் பட்டு, நிலவின் குளுமையோடு அன்பு ததும்பி மேலேறி வந்தது.

சுந்தரை சேர்த்தணைத்தாள்.

"ம்ம்மா... அம்ம்மா..."

பாரதி தொட்டிலில் கிடந்தபடியே சிணுங்கினான்.

இருவருமே ஒரு சேர எழுந்தார்கள்.

கையமர்த்தி அஞ்சலியை உட்கார வைத்துவிட்டு, எழுந்துபோய் பாரதியைத் தூக்கி வந்தான்.

"வாடா... ஏஞ் செல்லமே...!" கையை நீட்டி சுந்தரிடமிருந்து பாரதியை வாங்கு வதற்குள் சுந்தரின் சட்டையெல்லாம் ஈரம் செய்திருந்தான் பாரதி.

"அட... பண்டி, இப்படியா அப்பா மேல ஈரம் செய்யிறது?" என்றாள் அஞ்சலி.

"இல்லை... இல்லை... அப்பாவோட மனசில இருந்த பழைய அழுக்கை சுத் தம் பண்ணியிருக்கான்...!" என்றான் சுந் தர்.

குழந்தையோடு அவனையும் சேர்த் தணைத்துக் கொண்டாள் அஞ்சலி.

காற்றின் வீச்சில் தோட்டத்து மரம், செடி, கொடிகளெல்லாம் கலகலவெனச் சிரிப்பதைப் போல் அசைந்தாடின.

(நிறைந்தது)



"நாலுபேர் நாலு விதமா பேசுவாங்கன்றது உண்மை தான்!"

"எந்த நாலு பேர்...? என்ன விஷயம்?"

"இந்துத்வா பற்றி அரசியல்வாதிங்க பேசி வருவதைச் சொன்னேன்."

- சாவித்திரி வேங்கடசுப்ரமணியன்



• இந்திரா பார்த்தசாரதி

• ரவி சுப்பிரமணியன்

# மழையில் நனைந்த சுகம்!

எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதி பற்றி சாகித்ய அகாடமிக்காக டாக்குமெண்டரி ஒன்றைத் தயாரித்திருக்கிறார் கவிஞர் ரவி சுப்பிரமணியன். டாகுமெண்டரியைப் பார்த்து முடித்ததும், மழையில் நனைந்த சுகம் தெரிகிறது. இ.பா. என்ற சிறுகதை – நாவலாசிரியரை நீங்கள் இதில் பார்க்க முடியாது. அவர் அதிகம் ஈடுபாடு கொண்ட துறையான நாடகப் பணியை மட்டுமே இதில் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார்.

மழை, போர்வை போர்த்திய உடல்கள், ஔரங்கசீப், கொங்கைத்தீ, நந்தன் கதை, ராமானுஜர் என்று இ.பா.வின் இலக்கியப் பாதையை அலங்கரித்த நாடகத் தோரணங்கள் மட்டுமே ரவி சுப்பிரமணியனைத் தூண்டியிருக்க முடியாது. "கதையம்சம் என்பதைத் தாண்டி, உரையாடல்தான் முக்கிய அம்சமாக இ.பா.வின் படைப்புகளில் தெரிகிறது" என்று பிரபஞ்சன் குறிப்பாகச் சுட்டிக் காட்டுகிறபோது, ரவி சுப்பிரமணியனின் பார்வை, இ.பா.வுக்குள் இருக்கும் நாடக ஆசிரியரை வெளிக் கொண்டு வரும் கோணத்தில் இயங்கியிருப்பது நியாயமாகவே தோன்றும்.

பேசுபவர்களைக் கேள்வி கேட்டு, செயற்கையாகப் பதில் வரவழைக்காமல் வெங்கட் சாமிநாதன், ந. முத்துசாமி, பிரபஞ்சன், ஞாநி, அசோகமித்திரன், திருப்பூர் கிருஷ்ணன் போன்ற பலரையும் வெகு இயல்பாகப் பேசவிட்டு, வேண்டியதைப் பதிவு செய்திருக்கிறார்.

மறைந்த எழுத்தாளர் கு. அழகிரிசாமியின் மகன் சாரங்கன், ஒலி, ஒளியோடு, இசையையும் கவனித்திருக்கிறார். 'டிஸ்கவரி சானல்' பிராங்க் மைக்கேல் எடிட்டிங். டைட்குளோஸ் அப் ஃபிரேம்கள் டாகுமெண்டரிக்கு உயிரும், வலுவும் கொடுத்திருக்கின்றன.

இந்திரா பார்த்தசாரதியின் ஊரான கும்பகோணத்திலும், அவர் நாலு வருடங்கள் நாடகத்துறைத் தலைவராக இருந்த பாண்டிச்சேரியிலும், இப்போது வாழும் சென்னையிலும், டாகுமெண்டரி படமாக்கப்பட்டிருக்கிறது.

திரையில் வண்ணம் மிருதுவாக இருக்கிறது. "அதற்கு ஓர் ஆன்டிக் மதிப்புத் தரவே அப்படிச் செய்தேன்" என்கிறார் ரவி சுப்பிரமணியன். பி.பி.சி. டாகுமெண்டரிகள் சில இவரது இன்ஸ்பிரேஷன். அவர்கள் பாணி இவரைக் கவர்ந்திருக்கிறது.

மனைவியின் நகைகளைக் கூட அடகு வைத்து, சாகித்ய அகடமிக்காக இந்த டாகுமெண்டரியைத் தயாரித்திருக்கிறார் ரவி சுப்பிரமணியன். பட்ஜெட்டுக்கு மேல், செலவு செய்திருக்கிறார். சாகித்ய அகடமியிலிருந்து இன்னும் முழுப் பணமும் கிடைத்தபாடில்லை. ஆனால் அந்தச் சோகங்களை அமுக்கிக் கொண்டு, இந்த டாகுமெண்டரியைத் தயாரித்த மகிழ்ச்சியும், மன நிறைவுமே ரவி சுப்பிரமணியனிடம் பளிச்சிடுகின்றன!

– சாருகேசி

படம்: செழியன்

வணக்கம் என்று கூட உச்சரிக்கத் தெரியாமல், சினிமா கனவுகளோடு சென்னை வரும் வடக்கத்திய தேவதைகளுக்குக் காவல் தெய்வம், கோடம்பாக்கத்தின் ஆஸ்தான டப்பிங் கலைஞி சவீதா. ஆனால் ஷங்கரின் 'பாய்ஸ்' படக் கதாநாயகி ஹரிணிக்காக கொஞ்சிக் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்தது ஒரு போட்டிக் குரல்!






# சொல்ல மறந்த குரல்!

குரலுக்குச் சொந்தமான முகத்தைப் பார்த்தால் 'சொல்ல மறந்த கதை' நாயகி ரதி! "என்னங்க டப்பிங்கெல்லாம் கொடுப்பேன்னு சொல்லவேயில்லை... 'சொல்ல மறந்த கதை'யில்கூட உங்களுக்குச் சவீதா தானே டப்பிங் கொடுத்தாங்க!" என்றால்,

"நிஜம்தான்! அழகி படத்தில் நந்திதாவுக்கு - சவீதா குரல் கொடுத்தார். அந்த சென்டிமென்ட் 'சொல்ல மறந்த கதை'யிலும் தொடரட்டும்ன்னு தங்கர் பச்சான் நினைச்சார். இன்னொரு முக்கியமான காரணம், எனக்குப் பண்ருட்டித் தமிழ் வராது" என்று ஒப்புக் கொள்கிறார். 'கும்மாளம்' படத்தில் எனக்கு நானே டப்பிங் பேசியிருந்தேன். தமிழ் வார்த்தைகளை பாப்கார்ன் மாதிரி கர்முர்ன்னு கடிச்சுத் தின்னுட்டதா எல்லோரும் கிண்டல் பண்ணினாங்க. ஆனால் இயக்குனர் ஷங்கர் பிடிச்சிருக்குன்னு சொன்னார். வாய்ப்பும் கொடுத்துட்டார்" என்கிற ரதி, "டப்பிங் கொடுப்பது எல்லோராலும் முடிகிற காரியமில்லை. எனவே நடித்துக் கொண்டே டப்பிங் கொடுப்பேன்" என்கிறார்.

தற்போது ஆர்.பாலு இயக்கும் 'அன்பே உன் வசம்', கே. ரங்கராஜின் 'வா, வெண்ணிலா', பெண்டாஃபோர் அதிபர் சந்திரசேகரின் மகன் அனிதா இயக்கும் 'நாக், நாக், அயம் லுக்கிங் டு மேரி' ஆங்கிலப் படம் உட்பட பிசியாக நடித்துக் கொண்டே, பாதியில் விட்டு விட்டு வந்த டெண்டல் படிப்பைத் தொடர்கிறாராம்! "பட வாய்ப்பு இல்லேன்னா கூட, பல் பிடுங்கிப் பிழைக்கலாம்ன்னு சினிமாவைப் புரிஞ்சு வெச்சிருக்காங்க" என்று ஜோக் அடித்து விட்டுப் போனர் ஒரு சக டப்பிங் கலைஞர்!

— ஸ்ரீ

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்



* ஆக்கபூர்வ ஆதங்கம்!



* அக்மார்க் மோசடி!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21 □

? மத்திய அரசின் தேர்தல் சீர்திருத்தச் சட்டம் செல்லாது என்று சுப்ரீம் கோர்ட் அதிரடி தீர்ப்பளித்திருப்பது எதைக் காட்டுகிறது?

! இந்நாட்டின் அரசியல்வாதிகளை நம்புதற்கில்லை என்பதையும் இந்த நாட்டின் நீதித் துறை இன்னும் நம்புதற்குரியதாக இருக்கிறது என்பதையும்.

● ஏ. ஜஹ்பர் காதர், விளாத்திகுளம்

? அவசியம் ஏற்பட்டால் நடிகர்கள் சம்பளத்தைக் குறைத்துக் கொள்ளத் தயார் என்கிறாரே விஜய்காந்த்?

! படத்தின் பட்ஜெட்டில் பாதியை ஹீரோக்களுக்குச் சம்பளமாகக் கொடுத்து விட்டு, படப்பிடிப்பிற்குக் கடன்வாங்கும் நிலை வந்து இரண்டு தலைமுறை ஆகிவிட்டது. அப்படியிருக்க, 'அவசியம் ஏற்பட்டால்' என்று சொல்லுவது நழுவல்.

## அயோத்தி அகழ்வாராய்ச்சி பற்றி?

● கே.ஆர். உதயகுமார், சென்னை - 1

? நல்ல கதையும் நல்ல தொழில்நுட்பமும் இருந்தும் சமீப கால திரைப்படங்கள் சரிவர ஓடவில்லையே, ஏன்?...

! இந்த இதழின் அட்டைப்படக் கட்டுரையைப் படித்துப் பாருங்கள் உதயகுமார்!

● அஜார், தேனாம்பேட்டை

? 'நூறு ரூபாய் நோட்டால் பிச்சைக்காரர்கள்கூட காது குடையலாம் என்கிற அளவுக்குப் பணப்புழக்கத்தை ஏற்படுத்தியுள்ளார் ஜெயலலிதா' என்ற காளிமுத்துவின் கூற்று பற்றி?...

! பணப்புழக்கம் அதிகரித்தாலும் பிச்சைக்காரர்கள் தொடர்வார்கள் என்று கொள்வதா...?

பணவீக்கம் எகிறிப் போய் நூறு ரூபாய் நோட்டின் மதிப்பு அவ்வளவு குறையும் என்று கொள்வதா?

அந்த அளவுக்கு இன்று பணவீக்கம் எனில், தமிழகத்தில் தொழில்துறை உற்பத்தி எத்தனை தாழ்ந்து போயிருக்க வேண்டும் என்று கணக்கிடுவதா?... காளிமுத்து மூளைக்கு எக்கச்சக்க வேலை கொடுக்கிறார். ஆனால் தமிழக வாக்காளர்கள் சிந்திக்கப் போவதில்லை என்பதும் அவருக்குத் தெரியும்!

● எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி ★

? இந்தியப் பண்பாட்டை அறியவும் வளர்க்கவும் சம்ஸ்கிருதம் தான் மிக அவசியம் என்பதை தராசு ஏற்கிறதா..?

! நிச்சயமாக. தமிழ் மறைகளை நன்கு அறிவது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் சம்ஸ்கிருத ஞானமும்.

● கார்த்திக் அமர்த்தியா, மயிலாடுதுறை

? ஞானபீட பரிசுத் தொகை ஒரு இலட்சம் ரூபாய் பிச்சைக்காரப் பணம் என்பதாக சாருநிவேதிதா ஒரு பேட்டியில் கூறியிருப்பது அநாகரிகமாக இல்லை?

! தொகையைக் காட்டிலும் அந்தப் பரிசு அளிக்கும் அங்கீகாரம்தான் முக்கியம். இது புரியாத அஞ்ஞானிகளுக்காகப் பரிதாபம் தான் பட வேண்டும்.

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை

? 'நேரு பிறந்த நாளைக் குழந்தைகள் தினமாகவும், சரண்சிங் பிறந்த நாளை விவசாயிகள் தினமாகவும் கொண்டாடும்



* மூளைக்கு வேலை!



* 'அவசிய'ப் பேச்சு!

**போது, எனது பிறந்த நாளை அரசு பணத்தில் சுய கௌரவ தினமாகக் கொண்டாடுவதில் என்ன தவறு' என்று மாயாவதி கேள்வி எழுப்பியுள்ளாரே?**

! நேருவும் சரண் சிங்கும் அரசு செலவிலா பிறந்த நாள் கொண்டாடினாங்க? இது தாங்க டிபிகல் ஜாதி பாலிடிக்ஸ்! சாதனை, அல்லது மகத்துவத்தின் அடிப்படையில் ஒப்பு நோக்காமல், வெறுமே ஜாதி கண்ணோட்டத்தில் மட்டுமே ஒப்பு நோக்கி, உணர்வு பூர்வமாக மக்களை உசுப்பிவிடுவது 'சுய கௌரவம்' என்கிற போர்வையில் நிகழ்த்தப்படும் சுத்த அக்மார்க் மோசடி!

● **கல்லுக்குழி எம். இரவீந்திரன்**

**? அயோத்தியில் அகழ்வாராய்ச்சி வேறு தொடங்கியுள்ளதே, இது பற்றித் தங்கள் கருத்து என்ன சார்?**

! வழக்கு நிலுவையில் இருக்கும்போது தலைக்குத் தலை அபிப்பிராயம் சொல்றது தப்பு ஸாரே! ஆனா ஒண்ணு நிச்சயம் சொல்லலாம் - முதிர்ந்த அரசியல் ஞானமுடனும், பேராண்மையுடனும் மக்கள் தலைவர்கள் நடந்து கொண்டு வெற்றி பெற வேண்டிய விஷயங்களுக்கு, நீதி மன்றங்களின் உதவியை நாடுவதால் நற்பலன் கிட்டாது. பிரச்னை இழுக்கடிக்கப்படுவது ஒருபுறமிருக்க, தீர்ப்பு வரும் காலத்திலும் அதற்கு எதிர்ப்பு இருந்து கொண்டேயிருக்கும். பிரச்னை கனன்று கொண்டே இருக்கும்.

● **கு. கணேசன், மறைமலைநகர்**

**? 'ஆக்கபூர்வமான ஆலோசனைகளைச் சொல்லும் எதிர்க்கட்சிகள் இல்லையே' என்று ஜெ. ஆதங்கப்படுகிறாரே?**

! ஒரு மாடல் பட்ஜெட் போட்டதே பா.ம.க... அம்மா அதைப் படிச்சுப் பார்த்தாகத் தெரியலையே. மாடல் பட்ஜெட்டின் யோசனைகள் முதல்வருக்கு ஏற்புடையதாயில்லாமப் போனாலும் ஆக்கபூர்வமான நோக்கத்தைப் பாராட்டலாமில்லையா!

● **கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் - 5**

**? பத்திரிகையின் கருத்தும் பத்திரிகை ஆசிரியரின் கருத்தும் வேறுபட வாய்ப்பு உண்டா..?**

! அப்படி வேறுபட்டா, ஆசிரியர் வேறு இடம் பார்த்துக்கறதுதான் நல்லது.

● **வசந்தாகாந்த், கருப்பம்புலம்**

**? மலேஷிய போலீஸ், இந்தியர்களை மிருகத்தனமாகத் தாக்கியுள்ளதே?**

! ஏதோ தப்பு நடந்து போச்சு. ஒத்துக்கிட்டு மலேஷிய அரசு மன்னிப்பும் கேட்டிருக்கு. இதன் பிறகும் மலேஷியாவில் ஆட விருந்த ஹாக்கி போட்டிக்குப் போக நம் அணிக்கு இந்திய அரசு திடீர்த் தடை விதித்ததுதான் உறுத்துது.

● **ஆர். பிரகாஷ், திருச்சி - 4**

**? இலவச மின்சாரம் ரத்து; அதே நேரம் விவசாயிகளுக்கு வருடம் ஆயிரம் ரூபாய் உதவித் தொகை - ஏதாவது புரிகிறதா?**

! ஓ, புரியுதே! முன்னே நேரடியா பயிருக்குப் பாய்ஞ்சுது; இனி புல்லுக்குப் பாய்ஞ்சு, மிச்சம் மீதி இருந்தா பயிருக்குப் பாயும்.

● **மா. உலகநாதன், திருநீலக்குடி**

**? பாதிரியார்களுக்குத் தங்கச் சிலுவை பரிசு தருகிறாரே ஜெ?**

! அவர் பாம்புக்கு வாலாகவும் மீனுக்குத் தலையாகவும் இருக்கப் பார்க்கிறார்ன்றது பாதிரியார்களுக்குப் புரிஞ்சால் சரி!

| ❒ ரூ.100 பரிசு பெறுபவர் : |
|---|
| **ஆர். அப்துல் சலாம்,** பிளாட் ஏ37, மேடம் கியூரி தெரு, சேஷாயி நகர், கே.கே. நகர், திருச்சி - 620 021. |

| ★ ரூ.50 பரிசு பெறுபவர் : |
|---|
| **எஸ். சுவாமிநாதன்,** 45, முதல் தெரு, மன்னார்குடி - 614 001 |



• அஞ்ஞான பீடம்!



# குறையொன்றுமில்லை

**ப**கவான் நாம் அழைத்தால் வந்து விடுவான். 'வந்து உன் திருவடியில் சேர்த்துக் கொள்' என்றால் சேர்த்துக் கொண்டு விடுவான். எதற்கும் அவன் சித்தமாயிருக்கிறான். எப்படி நாம் பிரார்த்திக்கிறோமோ, அப்படியே நமக்கு அருள் புரிவான்.

'அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளி யானே' என்று அழகாக ஆழ்வார் பேசினார்.

ஆகவே அந்திமக் காலம் என்பது, பகவான் நாமாவைச் சொல்ல விடாது. அந்தக் காலத்துக்காக இப்போதே நாம் சொல்லிவிட வேண்டும். சொல்லிவிட்டால், ஒரு கட்டை மாதிரி, கல்லு மாதிரி விழுந்து கிடக்கிற காலத்திலே, உடம்பிலே சலனம்கூட இல்லாத சமயத்திலே, எல்லாரும் நம்மைக் கைவிடலாம்; ஆனால் அந்த பகவான் நம்மைக் கைவிட மாட்டான்.

"நான் விடமாட்டேன்!" – அஹம் ஸ்மராமி மத் பக்தம் என்றபடி என் பெயரைச் சொன்னவன், என் பெயரைச் சொல்லித் திருவடியிலே புஷ்பத்தை அர்ச்சனை பண்ணியவன், என் பெயரைச் சொல்லி ஆத்ம சமர்ப்பணம் பண்ணியவன் – என் பக்தன் – அப்படிப்பட்டவன் 'நயாமி பரமாங்கதிம்' என்றதற்கேற்ப, திரும்பி வருதல் இல்லாத சாச்வதமான அந்த உத்தம லோகத்துக்கு நான் அழைத்துக் கொண்டு போவேன்!" இதனால் ஒன்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும்:

பாபமே பண்ணி பாபி ஆகிற பாபாத்மாக்களுக்கு யம படர்கள் வருவார்கள்; கடைசிக் காலத்தில் அழைத்துக் கொண்டு போவதற்கு. இது பாபாத்மாக்கள் விஷயம்!

நாராயண பட்டாத்ரி ரொம்ப அழகாகச் சொல்கிறார். அஜாமிளன் சரித்திரம் குறித்துச் சொல்கிறார்:

அஜாமிளன் கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கிறான். அப்போது என்ன ஆயிற்று? ம்ருத்யு காலம் வந்துவிட்டது

அவனுக்கு. அஜாமிளனின் கட்டிலைச் சுற்றி யம படர்கள் மூன்று பேர்! சாதாரணமாக இரண்டு பேர்தான் வருவார்கள். ஆனால் ரொம்ப துஷ்டனாக ஒருத்தன் இருந்தால், அவனைப் பிடித்துக் கொண்டு போவதற்கு மூன்றாவதாக ஒருத்தரை அனுப்பிய மாதிரி, இந்த யமன், அஜாமிளனை அழைத்துப் போக மூன்று பேரை அனுப்பியிருக்கிறான்.

எதிரிலே நின்ற மூன்று பேரைப் பார்த்து நடுநடுங்கிப் போய்விட்டானாம் அஜாமிளன். தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்த பிள்ளையைப் பார்த்துக் கூப்பிட்டானாம். அஜாமிளனுக்குப் பத்து பிள்ளைகள். அங்கே தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்த பிள்ளைக்கு நாராயணன் என்று பெயர்.

'நாராயணா!' என்று அஜாமிளன் கூப்பிட்டதுமே, விஷ்ணு தூதர்கள் அங்கே வந்து விட்டார்கள்! உடனே யம படாளுக்கும் அவர்களுக்கும் ஏக வாக்குவாதம். இதெல்லாம் கேட்கிறான் அவன். இப்படியெல்லாம் வாக்குவாதம் பண்ணுவதைக் கேட்டதுமே அஜாமிளனுக்கு ரொம்ப வைராக்கியம் வந்து விட்டது. யம படர்கள் வந்தால் வெறுங்கையோடு போனதே கிடையாது. ஆனால், அஜாமிளன் விஷயத்தில் வேறு வழியில்லாமல் வெறுங்கையோடு போய்விட்டார்கள்.

பார்த்தான் அஜாமிளன். 'தெரியாத்தனமாகச் சொன்னதற்கே இத்தனை பலனா? தெரிந்தே சொல்வது எத்தனை உத்தமம்!' என்று பகவான் நாமாவைச் சொல்லி மோக்ஷத்தையே அடைந்தான்.

'இவ்வாறு அவசனாய் (தன்வயத்தில் இல்லாத நிலையிலும்) சொன்னபோதே மோக்ஷம் கிடைத்தது அஜாமிளனுக்கு...' என்று சுகப்ரும்ம மஹரிஷி வியக்கிறார்.

இந்த சரித்திரத்தைக் கேட்டு விட்டு 'இந்த மாதிரி நாமும் சொல்லிக் கொள்ளலாம் – கடைசிக் காலத்தில் சொல்லிக் கொண்டோமானால் பகவான் வந்து கைதூக்கி கரை, சேர்க்க மாட்டானா?' என்று முடிவுக்கு வருவதா...? நமக்கு அது நடக்குமா? அஜாமிளன் ஒருத்தன் தானே பகவானிடத்திலே ஏறியிருக்கிறான்! நமக்கும் அந்த மாதிரி அமைந்தால் நம் சரித்திரமும் ஒரு புராணம் ஆகிவிடாதோ! அவனுக்குக் கிடைத்தது அது – அந்த மாதிரி எல்லோருக்கும் அமையுமா!



பெரியாழ்வாருக்கு ஆசார்யரிடத்திலே அத்யயனம் பண்ணாமலே, பரதத்வ வைபவம் மொத்தம் தெரிந்து போயிற்று. மதுரையிலே போய் விஷ்ணுவினுடைய பெருமையை எடுத்து அவர் உரக்கப் பேசினார். பொற்கிழியைப் பெற்றார். அப்படி பகவான் பெருமையைப் பேசியதற்காக, ராஜா அவரைப் பட்டத்து யானை மேல் ஏற்றி பவனி வரச் செய்தான். இதைப் பார்க்க பகவான் வைகுண்டத்திலேயிருந்தே வந்து விட்டான், கருடனாக!

இந்த விஷ்ணுசித்தர் எங்கே போய்ப் படித்தார் என்று கேட்டால், எங்கேயும் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

அப்படியானால், 'பெரியாழ்வார் குருவை ஆச்ரயித்துப் படிக்கவில்லையே, நாமும் அப்படியே இருப்போம்' என்று சொன்னால், நமக்கு உண்டா அது! அவர் உயர்ந்த கருடத்மான் அம்சமாக சாக்ஷாத் அவதாரம் பண்ணினார். அவரிடத்திலே இருப்பதை நம்மோடு நாம் ஒப்பிட்டுப் பார்க்கலாமா!

நாமெல்லாம் குருவை ஆச்ரயித்துத்தான் வித்யை கற்க வேண்டும். அவர் குருமுகமாக இல்லாமலே கற்றார் என்றால், அவர் காரண புருஷர்.

அதே மாதிரிதான் அஜாமிளன் சரித்திரமும் அந்திமக் காலத்திலே பகவான் நாமாவைச் சொல்லும்படியான வாய்ப்பு, எல்லோருக்கும் ஏற்படாது. ஆதலால், 'அப்போதைக் கிப்போதே சொல்லி வைக்க வேண்டும்.

அதே மாதிரி, வைகுண்டத்திலே அனுபவிக்கும்படியான ஒரு ஆனந்தம் – அதைக் கொஞ்சம் இந்த பூலோகத்திலேயே அனுபவித்தவர்கள் உண்டா? என்று கேட்டால், அவ்வாறு அனுபவித்தவர் பீஷ்மாச்சார்யர் தான்.

அதனால்தான் இஞ்சிமேட்டு ஸ்ரீமத் அழகிய சிங்கர் அந்த பீஷ்ம ஸ்துதியை விடாது ஜபித்து வந்தார். இஞ்சிமேட்டு அழகிய சிங்கர், பெரிய மகான், அனுஷ்டானம் மிக்கவர். உயர்ந்த குணங்கள். சௌசீல்ய சௌலப்யாதி குணங்கள் நிரம்பியவர். அதற்கும் மேல் அவருக்கு இருக்கும்படியான பாண்டித்யம் அசாத்தியமானது. ஆனால் சதஸிலே காண்பித்துக் கொள்ளவே மாட்டார். பூர்ண கும்பம் ததும்பாது; சாமான்யம்தான் வளவளவென்று பேசும். அவ்வளவு பவ்யமாக இருப்பார் அழகிய சிங்கர். காஞ்சிபுரத்திலே ஒரு பெரிய சதஸ் நடந்தது. அதிலே விசாரம் எழுந்தது.






மீமாம்ஸை சாஸ்திரத்தைப் பற்றிப் பேசி அருள்கிறார் அழகிய சிங்கர். அப்போது ஒருத்தர் எழுந்து, "நீங்கள் தர்க்க சாஸ்திரம் படித்தவர் தானே! மீமாம்ஸை உங்களுக்குத் தெரியாது; வாயை மூடிக் கொண்டு இரும்!" என்று அதட்டினார்.

அதற்கு சுவாமி சொல்கிறார்:

"நீங்கள் சொல்வது தவறாக இருக்கிறதே!" என்று எழுந்து நின்றார்.

எல்லோருமே, அவர் கோபித்துக் கொண்டு போகிறார் என்று நினைத்துக் கொண்டு விட்டார்கள். ஆனால் போன வேகத்தில் திரும்பி வருகிறார் சுவாமி. ஸ்ரீகோசம் புத்தகத்தோடு வருகிறார். தாம் சொல்வது சரி, சபையில் குறுக்குக் கேள்வி கேட்டவர் சொல்வது தவறு என்று, புத்தகத்தைக் காட்டி பிரமாணம் சொல்கிறார். உடனே மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இவர் காலிலே விழுந்தார் அவர்.

ஆகையினாலே, பெரியோர்களுக்கு அப்பிரமாணமாக எதுவும் வாயிலே வராது. அவர்கள் எதைச் சொன்னாலும் பிர

டாப்டென் பாடலாசிரிகள் ஆங்கிலக் கலப்பின்றி எழுதிய பதிமூன்று பாடல்கள். உன்னிகிருஷ்ணன், ஷங்கர்மகாதேவன், ஸ்ரீனிவாஸ், சுஜாதா, அனுராதா ஸ்ரீராம் உள்ளிட்ட முன்னணியில் உள்ள பின்னணிப் பாடகர்கள் பாட, பிரான்சில் பதிவு செய்திருக்கிறார்கள். இத்தனை பெரிய முயற்சி தமிழ் சினிமாவிலா? இல்லை 'மூங்கில் நிலா' என்ற உலகளாவிய தமிழ் ஆல்பத்திற்கு.



• நிரு - பாவண்ணா

ஆல்பத்தைத் தயாரித்திருக்கும் பாவண்ணாவும், இசை அமைத்திருக்கும் 'நிரு'வும் புலம் பெயர்ந்த ஈழத் தமிழர்கள். பிரான்சிலிருந்து சென்னை வந்து ஆல்பத்திற்கு அறிமுக விழா நடத்தினார்கள். பிரெஞ்சு நாட்டுத் தொலைக்காட்சி விளம்பரங்களுக்கும், உலக செஞ்சிலுவைச் சங்க விளம்பரத்திற்கும் இசை அமைத்திருக்கும் திருவும், பாவண்ணாவும் சென்னையைத் தேடி வந்தது ஏனாம்? தமிழ் நாட்டில் கிடைக்காத புகழ் வேறு எங்கு கிடைத்தாலும் எங்களுக்குத் திருப்தியில்லை'' என்கிறார்கள். ஆனால் ஆல்பத்தை லண்டனில் வெளியிடுகிறார்களாம். காரணம், லண்டனிலிருந்து தட்டினால் கோலிவுட்டின் கதவுகள் பட்டென்று திறக்கும் என்பது இவர்களின் நம்பிக்கை.

– ஸ்ரீ

மாணிகமாக இருக்கும்.

பிராசீன தர்க்கம், நவீன தர்க்கம் என்று இரண்டு விதம். பிராசீன தர்க்கம் என்பது கரடு முரடாக வாக்கியங்களெல்லாம் இருக்கும். அதையெல்லாம் தாமும் கரைத்துக் குடித்து, பிறருக்கும் புகட்ட வல்லவர் அழகிய சிங்கர். அவர் பேசுகிற தொனியே அழகாக இருக்கும். மிக ரம்மியமாகப் பேசுவார். அனுசந்தானம், அனுஷ்டானம் – இரண்டும் அவர் விடாமல் கடைபிடித்தார். உத்தமமான பீஷ்ம ஸ்துதியை இளம் வயதிலிருந்தே சொல்லி வந்தார் அவர். நித்யம் சொல்லுவார். அவருடைய நித்யானுஷ்டானத்திலே பீஷ்ம ஸ்துதி இருந்தது. பிராண வியோக காலத்திலே கூட அவர் பீஷ்ம ஸ்துதியைச் சொன்னார்.

இது ஒரு தர்மம். அனுஷ்டானம் என்று ஆரம்பித்தால் அதை விடாமல் கடைசி வரையிலும் ஒரே சீராகப் பண்ணவேண்டும். ஒருநாள் ஏகமாக ராத்திரி பன்னிரண்டு மணி வரையிலும் பூஜை பண்ணுவது; மறுநாள் பகல் பன்னிரண்டு மணி வரைக்கும் எழுந்து கொள்வதே இல்லை! பூஜை என்பதற்கு ஒரு கிரமம் வேண்டாமா? அததை அந்தந்த காலத்தில் பண்ண வேண்டும் – அதை மகான்களிடத்திலே நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஆகவே பீஷ்ம ஸ்துதியானது ரொம்ப விசேஷமானது. உயர்ந்த உள்ளத்திலே எம்பெருமானை இருத்தி, அப்படியே அவனை நேரே பார்த்து ஸ்தோத்திரம் பண்ணினார் பீஷ்மர். எம்பெருமான் நின்று கேட்டுக் கொண்டிருக்கிறான். அப்படிப் பட்ட உத்தமருக்கு எதிரிலே, ஏகாந்தமாக, ஒருத்தரும் இல்லாத பொழுது தனியே வந்து காட்சி கொடுத்தான் பகவான். அணையும் நெருப்பைப் போல் இருக்கிறார் பீஷ்மர். 'அவர் புறப்பட்டுப் போய்விட்டால் அப்புறம் பரந்த தர்மத்தை யார் எடுத்துச் சொல்லப் போகிறார்கள்...? அவரிடத்திலே போய்க் கேள்' என்று பகவானே பீஷ்மரிடத்தில் எல்லோரையும் அனுப்பி வைத்தான்.

(வளரும்)



ஜில்லு மல்லு
—கதிர்
மல்லு, எப்படிடா இருக்கு இந்த காஸ்டியூம்?
என்ன ஒரு சிக்கன உணர்வு!
'ஆடை'யில 'ஆ' மட்டும்தான் இருக்கு.
'ஃபேஷன் ஷோவுக்காக' நானே டிசைன் பண்ணது.
'ஆள்' பாதி, 'ஆடை' பாதிங்கறதை எவ்வளவு தெளிவா புரிஞ்சு வைச்சிருக்க!
நான் வேணா 'மேல்' மாடலா வரவா?
ஒரு வாரமா என் கர்சீபைக் காணும்னதுமே சந்தேகப் பட்டேன்.
கேட் வாக்
அடப்பாவி! கர்சீப்பா... உங்க அப்பாவோட வேஷ்டியத்தானே நாறா கிழிச்சி ஓரம் அடிச்சி வெச்சிருக்க?
அனாவசியமா எங்க அப்பா வேஷ்டிய கிழிக்காத..
'கர்சீப்ப' இவ்வளவு 'சீப்பா' யூஸ் பண்ற முதல் ஆள் நீயாத்தாண்டாயிருப்ப.
உன் டிரெஸ்ஸா? கர்சீபா? எது சீப்னு ஃபாஷன் ஷோவுக்கு முன்னால் பட்டி மன்றம் வைக்கலாம்.


கல்கி
KALKI 30.3.2003
இதழுடன் இலவச
இணைப்பு
வீட்டிலே ஒரு
டாக்டர்!
மருத்துவ டிப்ஸ்



சின்னச் சின்ன
விஷயத்துக்கெல்லாம்
டாக்டர்கிட்டே ஓடி,
மணிக்கணக்கா காத்திருந்து,
நூத்துக்கணக்கிலே ஃபீஸ்
கொடுத்து... வேண்டாமே!
கொஞ்சம் கவனமா வீட்டுச்
சுகாதாரம் கடைப்பிடிச்சா, இந்த
ஓட்டமும் செலவும் மிச்சமாகும்.
நோய் வருமுன் காத்தால்
ஆரோக்கியமா சுறுசுறுப்பா
வளைய வரலாம். அதுக்கு
உதவத்தான் இந்த இலவச
இணைப்பு.

## அதிக இரத்த அழுத்தம் — எப்படித் தெரிந்து கொள்வது?

அதிக இரத்த அழுத்தம் இருப்பதை உங்களால் நிச்சயம் உணர்ந்து கொள்ள முடியும் என்று நினைத்திருந்தால் அது தப்பு. அதற்கான கருவியின் மூலம்தான் இதைக் கண்டறியமுடியும்.

வியப்பாக இருக்கிறதா? பலரும் தங்கள் உடலில் எப்போதும் இரத்த அழுத்தம் அதிகமாகிறது என்பதை உணர முடியும் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஏதாவது திடீர் செய்தியைக் கேட்கும்போதோ, வெகு வேகமாக ஒரு வேலையைச் செய்யும்போதோ இதயம் வேகமாக அடித்துக் கொள்ளலாம். ஏன், உங்கள் முகமே கூட சிவந்து போகலாம்.



இப்படியெல்லாம் இருந்தால் ஒருவருக்கு அதிக இரத்த அழுத்தக் கோளாறு இருக்



கும் என்று சொல்ல முடியும். அந்தக் குறிப்பிட்ட கணங்களில் இரத்த அழுத்தம் அதிகமாகலாம். (இது வெகு இயல்பானது).

ஆனால் அதைத் தொடர்ந்து இரத்த அழுத்தம் நார்மலான நிலைக்கு வர வேண்டும்.

தலைசுற்றல், இதயப்படபடப்பு போன்றவை இல்லாமலேயே கூட இரத்த அழுத்தம் எகிறக்கூடும். எனவே அவ்வப்போது - முக்கியமாக நாற்பது வயதைக் கடந்தவர்கள் - தங்கள் இரத்த அழுத்தத்தைப் பரிசோதித்துப் பார்த்துக் கொள்வது நல்லது.

## அதிக இரத்த அழுத்தத்தால் எலும்பு பலவீனமடைகிறதா?

அதிக இரத்த அழுத்தத்தால் இதயம்,

> ஒரு சராசரி மனிதனின் உடலில் எவ்வளவு லிட்டர் ரத்தம் இருக்கும்?
> விடை : பக்கத்தைப் புரட்டவும்.

மூளை போன்ற பகுதிகளில் பாதிப்பு உண்டாகிறது என்பதைப் பலரும் அறிந்திருந்தாலும், இரத்த அழுத்தத்துக்கும் எலும்புகளுக்கும் உள்ள தொடர்பைப் பலரும் அறிவதில்லை.

அதிக இரத்த அழுத்தத்தின் காரணமாக உடலில் உள்ள கால்ஷியம் சத்து, சிறுநீர் மூலம் வெளியேறுகிறது. கால்ஷியம் உடலில் அதிகமாக உள்ள பகுதி எலும்புகள்தான். எனவே எலும்புகள் இதனால் பலவீனமடைகின்றன.

சமீபத்தில் அமெரிக்காவில் நடைபெற்ற ஆராய்ச்சிகளின் முடிவு இதுதான். நார்மலான இரத்த அழுத்தம் கொண்டவர்களைவிட அதிக இரத்த அழுத்தம் கொண்டவர்களின் எலும்புகள் சுமார் இரு மடங்கு பலவீனமடைகின்றன. அதுவும் ஆண்களைவிட, பெண்களுக்குத்தான் இந்தப் பாதிப்பு அதிகமாக இருக்கிறதாம்.

## மூக்கில் இரத்தம்

விவரமறியாதவர்களை மிகவும் கிலிப்படுத்தும் விஷயங்களில் முக்கிய இடம் பெறுவது மூக்கிலிருந்து இரத்தம் கொட்டுதல். குழந்தைகளின் மூக்கிலிருந்து இரத்தம் வடிந்தால் அது பெரும்பாலும் பயப்படுவதற்கு ஒன்றுமில்லாத விஷயமாகவே இருக்கும். மூக்கு சிந்திய பிறகோ, அல்லது மிகவும் வித்தியாசமான வெப்ப நிலை உள்ள ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாறியதாலோ, மூக்கிலுள்ள மிக மெல்லிய இரத்தக் குழாய்கள் வெடிப்பதால் இரத்தம் வெளியேறலாம்.

பெரியவர்களின் மூக்கில் இரத்தம் வடிந்தால் அது மேற்படியான சாதாரண விஷயமாகவும் இருக்கலாம். அல்லது இரத்த அழுத்தம் மிக அதிகமாக உள்ளதை உணர்த்தும் ஓர் அபாய எச்சரிக்கையாகவும் இது இருக்கலாம்.




எப்படியிருந்தாலும் நீங்கள் உடனடியாகச் செய்ய வேண்டியவை இவை.

மூக்கைச் சிந்தி இரத்தத்தை ஒரு போதும் வெளியேற்ற வேண்டாம். இதனால் இரத்தப் போக்கு அதிகரிக்கும். சம்பந்தப்பட்டவர் படுத்துக் கொண்டிருந்தால் அவரை உடனடியாக உட்கார வையுங்கள். இலேசாக முன்புறமாக அவர் தலை சாய்ந்திருக்கட்டும். (பின்புறமாகச் சாய்ந்திருந்தால் இரத்தம் மூக்கிற்குட்புறம் சென்று அடைப்பு ஏற்படுத்தலாம்). கழுத்து மற்றும் மார்புப் புறமாக உள்ள ஆடைகள் 'டைட்'டாக

ஐந்து லிட்டர்கள்

இருந்தால், அவற்றை நெகிழ்வுபடுத்துங்கள்.

உட்கார்ந்தவாக்கில் பத்து நிமிடங்களுக்கு மூக்கின் இருபுறங்களையும் நன்கு அழுத்திப் பிடித்துக் கொள்ளச் சொல்லுங்கள். அந்தச் சமயத்தில் வாயின் மூலமாக மூச்சு விட்டுக் கொள்ளலாம்.

இரத்தம் வருவது நிற்கவில்லையென்றால் இதை மற்றொரு முறை செய்யவும். அதற்குள் இரத்தம் நின்று விடும். நிற்கவில்லையென்றால் டாக்டரை அணுகவும்.

## டீ.வி.யா? கிட்ட போகாதீங்க!

"டீ.விகிட்ட உட்கார்ந்துகிட்டு பார்க்காதீங்க. கண் கெட்டுடும்" என்று பலரும் எச்சரிப்பதைக் கேட்கலாம். கிட்டே உட்கார்ந்து பார்ப்பதால் மட்டுமல்ல, இருட்டான அறையில் டீ.வியைத் தொடர்ந்து பார்த்தாலும் கண்களுக்குக் கெடுதல்தான். ஏன் என்று பார்ப்போம்.

தொலைக்காட்சிப் பெட்டியிலிருந்து வெளியாகும் ஒளி தீவிரமானது. இந்த ஒளியின் தன்மை தீவிரத்திலிருந்து மிகத் தீவிரம் என்கிற மாதிரி மாறிக் கொண்டே இருக்கும். அதே சமயம் தொடர்ந்து நிகழ்ச்சிகளைப் பார்ப்பதாக நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தாலும் அது நடைமுறையில் சாத்தியமில்லை. அவ்வப்போது அறையின் பிற பகுதிகளில் நம் பார்வை நிச்சயம் செல்லும். அந்தப் பகுதிகள் இருளடைந்து இருந்தால், அப்போது விழித்திரை மாறிமாறி மிகவும் அதிகமாகச் சுருங்கவும் விரிந்து கொடுக்கவும் நேரிடுகிறது (ஏனென்றால் இருட்டில் அதிகம் விரிவதும், வெளிச்சத்தில் தன்னை சுருக்கிக் கொள்வதும் விழித்திரையின் இயல்பு). இதனால் கண்களுக்கு விரைவில் சோர்வு ஏற்படுகிறது.

வெளிச்சமுள்ள அல்லது விளக்கெரியும் அறை என்றால் தொலைக்



காட்சியைப் பார்க்கும்போது கண்கள் சந்திக்கும் ஒளியின் தன்மைக்கும், அறையின் சுற்றுப் புறத்தில் உள்ள ஒளியின் தன் மைக்கும் அவ்வளவு அதிகமாக வேறுபாடுகள் இல்லாததால் கண்கள் விரைவில் சோர்வடைவதில்லை.

## பச்சை நிறமே இச்சை நிறமே?

இது பச்சைக் காய்கறிகள் பரிந்துரைப்புக் காலம்! மருத்துவர்களைக் கேட்டால் 'முடிஞ்சவரை காய்கறிகளைப் பச்சையா சாப்பிடுங்க' என்கிறார் கள். வெள்ளரிக்காய், கோஸ், காரட், வெங்காயம், தக்காளி போன்றவற்றை நறுக்கி 'வெஜிடபிள் சாலடா'க சாப்பிடும் நல்ல பழக்கம் அதிகமாகி வருகிறது.

ஆனால் ஓர் எச்சரிக்கை. பல பச்சைக் காய் கறிகளில் பலவித பாக்டீரியாக்கள் (முக்கியமாக ஈ-கோலி என்ற அபாயகரமான வகை) உள்ளன.

> "உங்களுக்கு ஆனாலும் லிபிட் ஜாஸ்தி" என்று ஒருவர் சொன்னால் சந்தோஷப்படுவீர்களா? கோபப்படுவீர்களா?

இந்தக் காய்கறிகளைச் சரியாக சுத்தம் செய்யாமல் சாலடாக உட்கொண்டால், இந்த பாக்டீரியாக்களும் உடலுக்குள் சென்று வயிறுக்கு வித விதமான தீங்குகளை உண்டாக்கும்.

எனவே ஹோட்டல்களுக்குச் செல்லும்போது, வெஜிடபிள் சாலட் சாப்பிடுவதைத் தவிர்க்கவும். ஏனென்றால் அங்கு காய்கறிகளைச் சுத்தமாகக் கழுவிவிட்டுத்தான் நறுக்குவார்கள் என்பதற்கு உத்தரவாதம் இல்லை.






(பொதுவாகவே ஹோட்டலில்தான் சாப்பிட வேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டால், சூடான உணவு வகைகளே உங்கள் சாய்ஸாக இருக்கட்டும். சட்னியைத் தவிர்க்கவும்; சாம்பாரை ஆதரிக்கவும்!)

## தூசி பெறாத விஷயமல்ல

'எனக்குத் தூசின்னாலே அலர்ஜி' என்று பலர் சொல்

மருத்துவ உலகில் 'லிபிட்' என்றால் கொழுப்புச் சத்து. எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நீங்களே தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

லக் கேட்டிருக்கலாம். அலர்ஜிகளிலேயே மிகவும் பரவலாகக் காணப்படுவது இது தான்.

இதற்குக் காரணம் ஒருவகை நுண்ணுயிர். இதற்குப் பெயர் 'டஸ்ட் மைட்'. இதன் கழிவுகள் அங்குமிங்கும் பரவி உங்கள் மூக்குக்குள் நுழைகிறது. உடனே தும்மல் தொடங்குகிறது. மூக்கிலிருந்து நீர் வடிதல், இருமல், ஆஸ்துமா ஆகிய தொந்தரவுகள் தொடங்கக் கூடும். மிகச் சிலருக்குக் கண்களிலும் தொல்லைகள் உருவாகலாம்.

எப்படி இதைச் சமாளிப்பது? வீட்டிலுள்ள சோபா, திரைச்சீலைகள், கம்பளங்கள் போன்றவற்றை, வாரம் ஒரு முறையாவது வாக்குவம் க்ளீனரால் சுத்தம் செய்யுங்கள். அறையில் ஏ.சி. பொருத்தியிருந்தால் அதை அவ்வப்போது சர்வீஸ் செய்யுங்கள். பயன்படுத்தாத சமயங்களில் மெத்தை மற்றும் தலையணைகளின்மேல் ப்ளாஸ்டிக் உறைகளை விரித்து வைக்கலாம்.

## வண்ண விபரீதம்

குளிர்பானம் ஐஸ்க்ரீம் போன்றவற்றில் உபயோகப்படுத்தும் வண்ணங்களால் உடலுக்குக் கெடுதலா?

பச்சைக்காய்கறிகள், ரொட்டி போன்றவற்றுக்கு இயற்கை வண்ணங்கள் உண்டு. ஆனால் குளிர்பானங்களுக்கு அப்படியில்லை. பிரபல நிறுவனங்களின் குளிர்பானங்களை ஆரஞ்சு, எலுமிச்சை, கோலா என்றெல்லாம் சாப்பிடுகிறோமே, அவை இயல்பில் தண்ணீரைப் போலவேதான் காட்சியளிக்கும். பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருப்பதற்காகவும், வாங்குபவர்களின் மன நிறைவுக்காகவும் செயற்கை வண்ணங்களைச் சேர்க்கிறார்கள்.

இந்தியாவைப் பொருத்தவரை பத்துவித



செயற்கை வண்ணங்கள் இதற்காக அனுமதிக்கப்பட்டுள்ளன. அவற்றில் அமராந்த், எரித்ரோசின், சஞ்செட் மஞ்சள், பிரில்லியண்ட் நீலம் ஆகியவை சில. அதற்காக இவற்றை எவ்வளவு வேண்டுமானாலும் சேர்த்துவிட முடியாது. ஒரு கிலோ கிராம் உணவுப் பொருளில் இரண்டு கிராமுக்குமேல் வண்ணம் சேர்க்கக் கூடாது.

தேசிய சத்துப் பொருள் கழகம் ஹைதராபாதில் உள்ளது. குளிர் பானம் உள்ளிட்ட உணவுப் பொருட்களில் இயற்கை வண்ணத்தை மட்டுமே கலக்கவேண்டும், என்று இந்த அமைப்பு வற்புறுத்தி வருகிறது. இயற்கை வண்ணங்களுக்குச் சில

சுவாசிப்பதை முழுவதுமாக நிறுத்திவிட்டால் அதற்குப் பிறகு எவ்வளவு நேரம் உயிரோடு இருக்க முடியும்?

உதாரணங்கள் – கேரட்டிலிருந்து கிடைக்கும் பீட்டா கரோட்டின், குங்குமப்பூ தரும் நிறம் போன்றவை.

செயற்கை வண்ணங்களில் அசோ (AZO) வண்ணங்கள் என்பவை கடுமையான ஜீரணக்கோளாறுகளை உண்டாக்கக் கூடும்.

பொதுவாகவே நாவில் நீர் ஊறவைக்கும் வண்ண உணவுவகைகளைக் கண்டால் கொஞ்சம் நிதானியுங்கள். மிக அழுத்தமான வண்ணமாக இருந்தால் தவிர்த்து விடுங்கள். ஐ.எஸ்.ஐ. முத்திரை பதித்த பாக்கெட் அல்லது பாட்டில்களில் உள்ள உணவு மற்றும் பான வகைகளை மட்டுமே வாங்குங்கள்.

## ஒன்றிலிருந்து எல்லாமே!

சிறு வயதில் இலேசான அளவில் போதைப் பழக்கத்துக்கு உள்ளானவர்கள்



பின்னாளில் மேலும் பல போதைப் பழக்கங்களில் ஈடுபடும் வாய்ப்பு மிக அதிகமா? அதாவது மரிஜுவானா போன்ற எளிமையான(!) போதைப் பொருளுக்கு இளம் வயதில் அடிமையானவர்கள் பின்னாளில் கொக்கைன், ஹெராயின், தீவிர மது போன்ற பழக்கங்களிலும் ஈடுபடுவார்களா?

இந்த நோக்கத்தில் ஆஸ்திரேலியாவில் ஓர் ஆராய்ச்சி நடைபெற்றது. இதற்காக 311 ஜோடி இரட்டையர்களைத் தேர்ந்தெடுத்தனர். ஒவ்வொரு ஜோடியிலும் ஒருவர் மட்டும் பதினேழு வயதுக்கு முன்பே ஏதாவது ஒரு போதைப் பழக்கத்துக்கு அடிமையாகி இருந்தவர் (அதாவது அப்படிப்பட்டவர்கள்தான் ஆராய்ச்சிக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்). இரட்டையர்களைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் குடும்பச் சூழ்நிலை, மரபணு போன்றவை ஒரே மாதிரி உள்ள இருவருக்கிடையே இந்த ஆராய்ச்சியை நடத்தினால்தான், முடிவு துல்லியமாக இருக்கும் என்று நம்பப்பட்டது. ஆராய்ச்சியின் விளைவு இதுதான் – இளவயதுத் தொடக்கத்தில் ஏதாவது ஒருவகை போதையில் விழுபவர்கள், நாளடைவில் பல்வேறு போதைப் பழக்கங்களிலும் மூழ்குகிறார்கள்!

## நாக்கும் மூக்கும்

அதே கணவன். அதே மனைவி. அவரது அதே அற்புதச் சமையல். என்றாலும் 'பிரமாதம் சாந்தா' என்று இப்போ

மூன்றிலிருந்து நான்கு நிமிடங்கள் வரை. ஏனென்றால் அந்த அளவுக்கான பிராணவாயு ஏற்கெனவே உடலில் இருக்கும்.

தெல்லாம் சொல்வதில்லை அவர். போதாக் குறைக்கு 'இப்பல்லாம் உன் கைமணம் குறைஞ்சிடுச்சு' என்ற குற்றச்சாட்டு வேறு. ஏன் இப்படி என்பதை அறியவேண்டுமானால் நாக்குக்கும் மூக்குக்குமிடையே ஏற்படும் குழப்பத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்.

சுவையை அறிவதுதான் நாக்கின் முக்கிய வேலை. நாக்கில் மூன்று நரம்புகள் உள்ளன. இவற்றின் மூலமாகத்தான் உணவின் சுவையை நாக்கு மூளைக்கு எடுத்துச் செல்கிறது.



மூக்கில் இருப்பது வேறுவிதமான நரம்புக்கொத்து. இவை உணவின் வாசத்தை மூளைக்கு எடுத்துச் செல்கின்றன. சூடான உணவை நம்மால் அதிகம் ரசித்து உண்ண முடிவதற்கு முக்கியக் காரணம், அந்த உணவின் ஆவி நம் மூக்கிற்குள் நுழைவதால்தான். அதாவது உணவின் தனித்தன்மையை மூக்கு, நாக்கு ஆகிய இரண்டுமே அறிந்து மூளைக்கு அறிவிப்பதால், உணவை அதிகம் ரசித்து உட்கொள்ள முடிகிறது.

உணவை ரசிப்பதில் மூக்கின் பங்கை அறிந்து கொள்ள வேண்டுமா? ஒரு நண்பரின் கண்களை இறுகக் கட்டிவிட்டு அவர் மூக்கையும் மூடச் செய்து, அந்தச் சமயத்தில் ஏதாவது வித்தியாசமான உணவுப் பொருளை அவர் வாயில் போடுங்கள். அது என்ன என்பதைக் கண்டுபிடிக்க அவர் திணறிப் போய் விடுவார்.

உணவில் உள்ள ரசாயனப் பொருட்கள் வாயின் மூலமாக உள்ளிழுக்கப்பட்டாலும், அவற்றில் பெரும்பாலானவை மூக்கின் வழியாக வெளியேற்றப்படுகின்றன. மூக்கில் உள்ள நரம்பு செல்களோடு அவை இயங்கி, உணவின் வாசம் பற்றிய சங்கதியை மூளைக்கு உணர்த்துகின்றன.

நாக்கால் ஐந்துவித சுவைகளைத்தான்



அபெண்டிசிடிஸ் எனப்படும் குடல்வாலால் என்ன பயன்?

அறிய முடியும். ஆனால் மூக்கால் அறியக் கூடிய வாசங்கள் மிகவும் அதிகம்.

வயதாக ஆக மூக்கில் உள்ள நரம்புகள் தங்கள் செயல்பாடுகளைக் குறைத்துக் கொள்கின்றன. இதனால்தான் உணவின் சுவையை முதியவர்களால் முன் போல் அறிந்து ரசிக்க முடியாமல் போய் விடுகிறது.

## 'நீர்' எந்த வகை?

சர்க்கரை வியாதி எனப்படும் நீரிழிவு நோய்களில் இரண்டு வகைகள் உள்ளன. முதலாவது வகை நீரிழிவு நோய் (இதை IDDM என்கிறார்கள்) உடலில் இன்சுலின் மிகக் குறைவாகச் சுரப்பதாலும் அல்லது இன்சுலின் சுரக்காமலேயே இருப்பதாலும் உண்டாகிறது.

இரண்டாவது வகை நீரிழிவு நோயில் (NIDDM) உடலில் போதுமான அளவு




இன்சுலின் இருந்தாலும், உடலில் உள்ள செல்கள் இந்த இன்சுலினைப் பயன் படுத்தாவிட்டால், இரத்தத்தில் சர்க்கரை யின் அளவு அதிகமாகும்போது உண்டா கிறது.

இவை இரண்டும் இரு வேறுவிதமான

பிரச்னைகளினால் ஏற்படுவதால் அவை சில சமயம் வெவ்வேறு விதமாகவும் குணப்படுத்தப்படுகின்றன. இந்த இரு விதமான நோய்களுமே நீடித்த உடல் ஆரோக்கியப் பிரச்னைகளை ஏற்படுத்தக் கூடும். உங்களுக்கு எந்தவிதமான நீரிழிவு நோய் என்பது குறித்து டாக்டரிடம் மறக்காமல் கேளுங்கள்.

## ஆலிவ் எண்ணெயின் அற்புதங்கள்

கி.மு.3000 ஆண்டிலிருந்தே ஆலிவ் எண்ணெய் உலகுக்கு அறிமுகமாகி விட்டது. இதில் எந்தவித உப்பும் கிடையாது. கொழுப்புச் சத்தும் குறைவுதான். உடலுக்கு ஆபத்தை விளைவிக்கும் கொலஸ்ட்ராலைக் குறைக்க வல்லது ஆலிவ் எண்ணெய்.

வைட்டமின்கள் ஏ, ஈ, டி, கே ஆகியவை ஆலிவ் எண்ணெயில் உள்ளன. இதன் காரணமாக மூளை வளர்ச்சிக்கு ஆலிவ் எண்ணெய் பெரிதும் உதவுகிறதாம். ஆன்டி-ஆக்ஸிடென்ட்ஸ் எனும் பொருள் ஆலிவ் எண்ணெயில் அதிகம் இருப்பதால், இதைத் தொடர்ந்து பயன்படுத்துபவர்களை முதுமை மெதுவாகவே அண்டுகிறது.

இலேசான மலமிளக்கியாகவும் ஆலிவ் எண்ணெய் செயல்படுகிறது. பலவித வலிகளையும் குறைக்கும் சக்தி இதற்கு உண்டு. இவ்வளவு பயன்கள் இருப்பதாலோ என்னவோ இதய நோயாளி

*எந்தப் பயனும் இல்லை. மாறாக அதைத் தொற்றுநோய்க் கிருமிகள் பாதிக்கும்போது உபத்திரவம்தான். அவ்வாறு பாதித்தால், அறுவை சிகிச்சையில் குடல்வாலை நீக்க வேண்டிய கட்டாயம் ஏற்படக்கூடும்.*

களுக்கு ஆலிவ் எண்ணெயை மருத்துவர்கள் பரிந்துரைக்கிறார்கள்.

## உறக்கத்தை அலட்சியப்படுத்தாதீர்கள்

'நான் பல நாட்கள் தூக்கம் வராமல் தவிச்சிருக்கேன். புரண்டு புரண்டு படுப்பேனே தவிர தூக்கம் வந்ததே இல்லை'' என்று சிலர் சொல்வதுண்டு. ஆனால் இது உண்மையல்ல. தொடர்ந்து தூக்கம் வராதபோது சிறு சிறு உறக்கங்களை (ஒவ்வொன்றும் சில மணித்துளிகள் தான்!) உடல் மேற்கொள்ளும். இதை ''மைக்ரோ ஸ்லீப்'' என்பார்கள். இரண்டாம் உலகப் போரில் தொடர்ந்து



கண்விழித்த ராணுவ விமான ஓட்டிகள் போர் முடிந்து திரும்பும்போது இது போன்ற மைக்ரோ உறக்கங்களில் ஆழ்ந்தபோது விபத்துகள் நேர்ந்திருக்கின்றன.

1996லிருந்து 1998 வரை ஓர் ஆராய்ச்சி நடைபெற்றது. முதல்முறையாக மாரடைப் பின் காரணமாக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு குணமானவர்களிடம், பலவித கேள்விகள் கேட்கப்பட்டன. அப்போது இவர்களில் பலரும் தினமும் மிகக் குறைவான நேரமே தூங்கியிருக்கிறார்கள் என்பது தெரியவந்தது. ஓவர் டைம் வேலை என்றால் உறக்க நேரம் குறைவதோடு அப்போது இரத்த அழுத்தமும் அதிகமாகிறது. எனவே இதயத் துடிப்பும் அதிகமாகி, இதயம் தொடர்பான கோளாறுகளும் உருவாகின்றன. வாரத்துக்கு நாற்பது மணி நேரம் வேலையோடு நிறுத்திக் கொள்வது நல்லது என்கிறது ஆராய்ச்சி செய்த இந்த மருத்துவக்குழு. இதைவிட அதிகம் வேலை செய்யும்போது, போதிய உறக்கம் கிடைக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டியது கட்டாயம்.

## சுளுக்கு எடுப்பீர்களா?

**சு**ளுக்கு என்றால் என்ன என்று தெரியுமா? எலும்புகள் இணையும் பகுதியில் உண்டாவதுதான் சுளுக்கு. அங்கு தாங்கும் சக்தியைவிட அதிகமான எடையோ விசையோ விழுந்தால் அந்தப் பகுதியிலுள்ள மூட்டுநார் பாதிக்கப்படு

பெரிகார்டியம், க்ரேனியம் - இரண்டிற்கும் உள்ள ஒற்றுமையென்ன?

வதையே சுளுக்கு என்கிறோம்.

சுளுக்கு என்றவுடன் சிலர் எண்ணெயை அங்கு அழுத்தித் தேய்க்கக் கிளம்பி விடுவார்கள். வேண்டாம். அங்குள்ள சிறு இரத்தக் குழாய்கள் இதனால் வெடித்து வீக்கம் அதிகமாகி விடலாம். ஐஸ் ஒத்தடம்தான் சுளுக்குக்கு ஏற்ற நிவாரணி. அதற்குமுன் அந்தப் பகுதியில் எலும்பு முறிவு ஏற்படவில்லை என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும்.

## தழும்பு போச்!

**தோ**ல் வைத்தியத்தின் ஒரு பெரிய சவால் உடலில்




"ஏன் டாக்டர் ஆபரேஷன் தியேட்டரில் மாட்டி வைக்க வேறே பழமொழியே உங்களுக்குக் கிடைக்கலியா?"

ஏற்படும் தழும்புகளை எப்படி நீக்குவது என்பதுதான். மேலோட்டமான தழும்பு என்றால் ஸ்டீராய்ட் கலந்த க்ரீம்களைத் தடவியே அவற்றை நீக்க முடியும். உப்புத்தாளைக் கொண்டு தேய்ப்பது போன்ற ஒரு முறையிலும் (இதை டெர்மப்ரேஷன் என்கிறார்கள்) இதைச் செய்கிறார்கள். மிகச் சமீபத்தில் உண்டான தழும்பு என்றால் சிலிகான் ஜெல், மினரல் எண்ணெய் மற்றும் வைட்டமின் ஈ போன்றவையும் பலனளிக்கின்றன.

மிகவும் ஆழமான தழும்பு என்றால் அறுவை சிகிச்சை தேவை. அதில் இசட் – ப்ளாஸ்டி என்ற ஒரு வகை உண்டு. எப்படியும் தழும்பை நீக்க முடியாது எனும்போது அது இருக்குமிடத்தைச் சற்றே மாற்றியமைப்பதே இந்த சிகிச்சையின் அடிப்படை. அதாவது அந்தப் பகுதியில் உடலில் தானாக எங்கே சுருக்கமோ மடிப்போ விழுகிறதோ அந்தப் பகுதியில் தழும்பை எடுத்துச் செல்ல முடிந்தால், சட்டென்று பார்க்கும்போது அந்தத் தழும்பு புலப்படாமல் போகும்.

தொகுப்பும் துணுக்குகளும்:
**ஜி.எஸ்.எஸ்.**

## உடலும், மனமும்!

உடலையும் மனதையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள ஆகார நியமம் மிகவும் அவசியமாகிறது. மூளைக்கு அதிக உழைப்பு கொடுப்பவர்கள், உடலுக்கு அதிக உழைப்பு கொடுப்பவர்கள், இளம்

---

உடலின் இரு முக்கியமான பகுதிகளைக் காக்கும் கவசங்கள் இவை. இதயத்தின் மேலுள்ள உறை பெரிகார்டியம். மண்டையோட்டின் பெயர்தான் க்ரேனியம்.

---

வயதினர், சிறுவர்கள், வயதானவர்கள், வெப்ப மண்டலத்தில் வசிப்பவர்கள், குளிர்ப் பிரதேசத்தில் வசிப்பவர்கள் என்று அனைவருக்கும் ஓரே மாதிரி யான உணவு என்பது சரியல்ல. என்றாலும் உடல் நலத்தைக் காப்பாற்ற அனைவரும் கடைப் பிடிப்பதற்கு வேண்டிய பொதுவான விதிமுறைகள் உள்ளன. அவற்றைக் கடைப்பிடித்தால்தான் ஆரோக்கியம் காக்கப்படும்.

பசிக்காக பசி தீர உண்ண வேண்டுமே தவிர, சுவைக்காக, சுவைதீர உண்ணக் கூடாது. வாழ்வதற்காக உண்ணுகிறோம். உண்பதற்காக வாழவில்லை. யோக முறைப்படி, அரை வயிறு உணவு, கால் வயிறு நீர், கால் வயிறு காற்றோட்டத்துக்கு என உணவு முறையை அமைத்துக் கொள்வது சிறந்தது.

சாப்பிடும்போது அவசர அவசரமாக





சாப்பிடக்கூடாது. நிதானமாக மென்று தின்ன வேண்டும். உணவு உட்கொண்ட அரைமணி நேரம் கழியும்வரை கடின உடலுழைப்போ, மூளைக்கு அதிக வேலையோ கொடுக்கக் கூடாது. சாப்பிட்டவுடன் உட்கார்ந்திருப்பது, சோம்பலையும், படுப்பது உடல் பருமனையும், ஓடுவது சீர்குலைவையும் உலாவுதல் நீண்ட ஆயுளையும் தரும். சாப்பிடும்போது அதிக நீரை அடிக்கடி குடிக்கக் கூடாது. ஆகாரம் உட்கொண்டு அரைமணி கழித்து அதிகமாக நீரைப் பருகுவது நல்லது. உயிர் வாழ்க்கைக்கு நீர் பருகுவது முற்றிலும் அவசியமாகிறது. இதனால் இரத்த ஓட்டம் நன்றாகவும், கழிவுப் பொருட்கள் வெளியேற்றப்படுவதும் நடக்கிறது.

தினமும் பத்து தம்ளர் தண்ணீராவது குடிக்க வேண்டும். இல்லையென்றால் மலச்சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை

தெர்மாமீட்டரை நாக்கின் கீழ் வைத்துக் கொள்வோம். குழந்தைகள் என்றால் அக்குளில் வைத்துப் பார்ப்பார்கள். இரண்டிற்கும் இடையே வெப்ப வேறுபாடு உண்டா?

போன்றவை உண்டாகும். பசி எடுக்கும் போது நீரைக் குடிக்கக் கூடாது. தாகம் எடுக்கும்போது, உணவை உட்கொள்ளக் கூடாது. அப்படிச் செய்தால் அஜீரணக் கோளாறும், வயிற்றில் வாயுத் தொல்லைகளும் ஏற்படும். பசி எடுக்கும்போது காபி, டீ, போன்ற பானங்களைக் குடித்து பசியை அடக்குவது, தாகம் உண்டாகும் போது சுத்தமான நீருக்குப் பதிலாக குளிர்ந்த பானங்களைப் பருகுவதும் நல்லதல்ல.

உஷ்ணமான ஆகாரம் உட்கொண்ட பிறகு ஐஸ்கிரீம் போன்ற குளிர்ந்த பண்டங்களை உட்கொள்ளக் கூடாது. மலம் கழித்துவிட்டு வந்த பின் உணவை உட்கொள்ளுவதோ, மலஜலம் கழித்து விட்டு வந்தவுடன் நீரைப் பருகுவதோ கூடாது. சாப்பிடும்போது, உப்பு, காரம், புளிப்பு, தித்திப்பு, கசப்பு, துவர்ப்பு ஆகிய அறுசுவைகள் உள்ள உணவுகளையும் சேர்த்து மிதமாகச் சாப்பிடுவது நல்லது. உணவில் மசாலாப் பொருட்களைத் தவிர்ப்பது நல்லது.

பால், தயிர், மோர், பழங்கள் போன்றவை சாத்வீக உணவாகும். காரம், புளிப்பு, உப்பு, கசப்பு, துவர்ப்பு முதலிய ஐந்து சுவையுள்ள உணவு வகைகள் ராஜஸ உணவாகிறது. நாள்பட்ட பழைய உணவு, சுவையற்ற, ஊசிப்போன உணவுகள் தாமச உணவாகிறது. பொதுவாக உடல், மன ஆரோக்கியத்திற்காக யோகப் பயிற்சி செய்பவர்கள் சாத்வீக உணவைச் சாப்பிடுவது நல்லது. உடல் மன நலத்திற்கு சைவ உணவே சிறந்தது என்று நவீன மருத்துவ ஆய்வுகள் கூறுகின்றன. கோபம், பயம், துக்கம் போன்ற மனநிலையில் உடலுறுப்புகளும் இரத்த ஓட்டமும் பாதிக்கப்படுவதால், அந்த நேரத்தில் உணவை உட்கொள்ளக் கூடாது.

உடல் கெடுவதற்குக் காரணம்,




பெரும்பான்மையாக நம் பழக்க வழக்கங்கள்தான். பசித்தால்தான் உண்ண வேண்டும். அளவுக்கு மீறித் தின்பதும், ஜீரணக் கருவிகளைக் கெடுக்கும். வளரும் பிள்ளைக்குத்தான் அதிக உணவு தேவை. இருபத்தைந்து வயதுக்குள் வளர்ச்சி நின்று விடுகிறது. வயதாக ஆக, உணவின் அளவு குறைய வேண்டும். இல்லையேல் ஆரோக்கியமும், ஆயுளும் குறையும்.

பெருஞ்சதை ஒரு பெரும் சுமை என்பதை உணரவேண்டும். உழைப்பிற்கு உதவும் சக்தியைப் பெருக்குவதற்கே நாம் உண்ணுகிறோம். தேவைக்கு மீறி உண்ணும் போது கொழுப்பு குவிகிறது. உடல் கனம் அதிகரித்தால் சோம்பல் உண்டாகும். உழைக்க உற்சாகம் இருக்

தோலின் டெம்பரேச்சர், வாய்க்குள்ளே நிலவும் டெம்பரேச்சரைவிட ஒரு டிகிரி (சென்ட்டிகிரேட்) குறைவாக இருக்கும்.

காது. செயலற்றதால் அங்கங்கள் பருக்கும். மிகுதியாக உண்ணாமல் அரைவயிறு உண்டாலும் செல்லும் உணவு, ஊளைச் சதையை சேர்க்கலாம். அதிக மாமிசத்திரட்டு பல விபத்துக்களைக் கொடுக்கும். எனவே பெருந்தீனியைக் குறைக்க வேண்டுவது அவசியமாகிறது. வயிற்றுச் சதையைக் குறைக்கவும் முயற்சிக்க வேண்டும்.

உப்பு, புளி, காரம் இவற்றை மிதமாக சேர்த்தல் நல்லது. காரத்திற்கு அதிபதியான மிளகாயை அரக்கன் என்று குறிப்பிடுகிறார், யோகாசன நிபுணர் சுந்தரம். காரத்தைக் குறைத்தால் உறக்கமும் குறையும். காலையில் வெறும் வயிற்றுடன் யோகாசனம் செய்ய வேண்டும். ஆசனம் பழகுகிறவர்கள் ஆகார விஷயங்களில் நியமமாக இருக்க வேண்டும். மனத்தை அடக்கி, அளவோடு உண்பது ஆசனம், தியானம் பழகுவோருக்கு எளிது. குறிப்பிட்ட நேரத்தில் மட்டுமே சாப்பிட வேண்டும். இடையிடையே நொறுக்குத் தீனி ஏதாவது சாப்பிட்டுக் கொண்டே இருக்கக் கூடாது. யோகாசனங்கள் செய்யும்போது மிகவும் நிதானமாகவும், மெதுவாகவும் பழக வேண்டும். முரட்டுத் தனமாக செய்ய முயலக் கூடாது. கொஞ்சம், கொஞ்சமாக முயற்சித்து மனத்தை ஒருமுகப்படுத்தி ஆசனங்களைப் பயில வேண்டும். சமதள விரிப்பில் ஆசனங்கள் செய்ய வேண்டும்.

வெகுதூரம் பிரயாணம், முதல் நாள் வெகு நேரம் கண் விழித்தல், உடலுறவு கொண்ட நாள், எண்ணெய் ஸ்நானம் செய்த நாள், இதற்கு அடுத்த நாட்களில் ஆசனம் செய்ய வேண்டாம். ஆசனம் பழகப் பழக, காபி, டீ, மது அருந்துதல் போன்ற எந்தக் கெட்ட பழக்கத்தையும் கொஞ்சம், கொஞ்சமாக நிறுத்தும் ஆற்றலும் மனோ திடமும் ஏற்படும்.




## பற்கள் பாதுகாப்பு!

**ப**ற்களைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ள 1. தினமும் காலை மாலை இரண்டு வேளையும் பற்களைச் சுத்தம் செய்ய வேண்டும். 2. காபி, டீ குடித்தபின் வாயைக் கொப்புளிக்க வேண்டும். 3. அழுத்தமாகப் பற்களைத் தேய்க்கக் கூடாது. 4. பற்களை ஊசி, பின், குச்சி போன்றவற்றால் குத்தக் கூடாது. 5. காரமான உணவு வகைகளைத் தவிர்க்க வேண்டும். 6. புகையிலை, பான்பராக், பாக்கு உபயோகிக்கக் கூடாது.

நமது பற்களின் நண்பர்கள் தண்ணீர், பற்பசை, எலுமிச்சம்பழம், பழங்கள், காய்கறிகள்.

எதிரிகள்: பெப்பர்மிண்ட், சாக்லெட், குளிர்பானம், குண்டூசி, குச்சி.

மேல் வரிசைப் பற்களை மேலிருந்து கீழாகவும், கீழ் வரிசைப் பற்களை கீழிருந்து மேலாகவும் தேய்க்க வேண்டும்.

**க**ண் பாதுகாப்பு முறையை திரு. ஜி.டி. நாயுடு குறிப்பிடுகிறார்.

கண் பார்வையை சரிவரப் பாது காப்பதற்குத் தினமும் விழியை இடது புறமும், வலது புறமும் எழுபது தடவைகளும், மேலும் கீழுமாக நாற்பது தடவைகளும் அசைத்து, பிறகு கண் இமைகளை விரல்களினால் சில விநாடிகள் அழுத்திவிட வேண்டும். இந்த முறையை விடாமல் அனுசரித்தால் கண்ணாடியின் உதவி இல்லாமல் படிப் பதற்குக் கண்கள் எப்பொழுதும் தயாராக இருக்கும்.

**தூ**க்கம் மிகவும் இனிமையானது. நமது களைப்பைப் போக்கி புத்துணர்ச்சி யுள்ளவர்களாக ஆக்குகிறது. தூக்கத்தைப் பற்றி ஆராய்ச்சிகள் இன்னும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

ஆனாலும் புரியாத விஷயங்கள் பல தூக்கத்தில் உள்ளன. மிகக் குறைந்த அளவு தூங்கினாலும் முக மலர்ச்சியுடனும், உற்சாகத்துடனும் நாள் முழுவதும் பலர் வளைய வருகிறார்கள். உணவைப் பற்றி சொல்வது போல உறக்கத்துக்கும் அது பொருந்தும். சிலர் ஓய்வு ஒழிவு இல்லாமல் உணவு சாப்பிடுகிற நேரம் தவிர எப் போதும் உறங்குகிறார்கள். மனிதனுக்கு மனிதன் தூங்குகிற நேரம் மாறுபட்டாலும், ஆறு மணி நேரத் தூக்கம் ஒரு சராசரி மனிதனுக்குப் போதுமானது என்று கூறுகிறார்கள். தூக்கம் வராமலிருப்பது ஒருவித வியாதியாகும். சிறிது நேரம் தூங்குவதற்கே சிலர் அதிக பொருள் செலவு செய்து வைத்தியம் பார்த்துக் கொள்கிறார்கள்.

பெரும்பாலும் தூக்கம் பழக்கத்தைப் பொறுத்தே அமைகிறது. எங்கேயாவது வெளியூருக்கோ அல்லது முக்கியமான காரியமாகவோ சீக்கிரம் எழுந்திருக்க வேண்டுமென நினைத்தால், நம்மையறி யாமலேயே நமக்கு விழிப்பு ஏற்பட்டு



விடுகிறது. நமக்கு விருப்பமான ஒரு வேலையைச் செய்யும்போது தூக்கம் வருவதில்லை. ஆர்வத்துடன் நாவல் படிக்கும் சிலர் இரவில் நெடுநேரம் கண் விழிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். உள் மனத்தில் நமக்கு ஒரு காரியத்தில் விருப்ப மின்மையோ, ஆர்வமின்மையோ ஏற்படும்பொழுது தூக்கம் வந்து விடுகிறது. பல மாணவர்கள் வகுப்பறையில் தூக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் கஷ்டப் படுகிறார்கள். பாடத்தில் அவர்களுக்கு விருப்பம் இல்லையென்று கூறிவிட முடியுமா? என்ன காரணம்? மலச்சிக்கல், உடலில் களைப்பு, அசதி காரணமாக இருக்கலாம். அதிக உணவினாலும் இருக்கலாம். தக்க வைத்தியம் செய்து கொள்வது அவசியம். இதையன்றி இரவு வெகு நேரம் கண் விழித்திருப்பதனாலும் இருக்கலாம்.

தூக்கத்தைத் தவிர்க்க, ஈரக் கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொள்வது, மிளகு ஒன்றை வாயில் அடக்கிக் கொள்வது, என்றெல்லாம் முறைகள் கையாளப்படுகின்றன. தூக்கத்தை விரட்ட மனோவலிமை உதவும். வைராக்கியத்தாலும், பழக்கத்தாலும், பயிற்சியாலும் தூக்கத்தைத் தவிர்க்க முடியும். உடல்

